# மந்திரி திம்மரசு &
# ஷாப்டீஸ்பரி பிரபு

நோபல் பிரஸ், சென்னை.

1835

# மந்திரி திம்மரசு.

பக்கம்.

## ஷாப்ட்ஸ்பரி பிரபு—ஓர் தேசோபகாரி.

### 1804—1885.

# மந்திரி திம்மரசு.

---

## I. இளமைப்பருவம்

இம்மகான் ஓர் ஆந்திர நியோகிப் பிராமணர்.
கௌண்டின்ய கோத்திரத்தவர். இவரது தந்தையும்,
மூதாதையும் கொண்டவீடு ஸமஸ்தான அரசர்களுக்கு
மந்திரிகளாயிருந்தனர். பதினைந்தாம் நூற்றுண்டின்
ஆரம்பத்தில் வடக்கே ஓரிஸ்ஸா தேசத்துள்ள கஜபதி 5
மன்னன், இக்கொண்டவீடு ஸமஸ்தானத்தின்மேல்
படையெடுத்துச் சென்று அரசனை முறியடித்து ராஜ்
யத்தைத் தன் வசமாக்கிக் கொண்டனன். ஆதலால்,
திம்மரசின் தந்தை ராசிராஜு, தம் மந்திரி பதவியை
யிழக்கலாயிற்று. "பட்டகாலிலே படும்" என்பது 10
போலவே தம் சொத்துக்கள் யாவற்றையு மிழந்து,
கொண்டவீடு நகரை விட்டு நீங்கி அவர் வெளியூருக்
குப்போகவும் நேரிட்டது. ஆயினும் மனவலிமை குறை
யாமல் 'அவனன்றி யோரணுவு மசையா' தன்றே
என்ற உண்மையை யுன்னி ராசிராஜு தம் பத்தினி 15
யுடன் கூட ஊருக்கு வெளியேகி வெகுதூரம் பாதசாரி
யாய் நடந்து அக்காலத்தில் பிரஸித்தமா யிருந்த சந்
திரகிரி ஸமஸ்தானத்துக்கு வந்து சேர்ந்தார்.

ஆ, என்ன ஆச்சரியம்! காலத்தின் விந்தையை
அறியவல்லார் எவரே! என்றும் விலையுயர்ந்த ஆடை 20
யுடுத்து அறுசுவை யன்னமுண்டு, பலர் புடைசூழ
தேவேந்திரன் கோயிலென்ன விளங்கும் மாளிகையி

வினிதமர்ந்து அதிபாடகர் எத்த, பிரஜைகள் பெரிது முவந்து 'இம்மகான் நீதி என்னே! என்னே இவரதன்பு! இவரன்றோ கருணைவள்ளல்!' என்றென்றியம் 25
பிப்போற்ற, அரசனும் அகமகிழ்ந்து, 'ராசிராஜுகாருவன்றோ இவ்விராஜ்ய பாரந்தன்னைத் தாமேயேற்றுக் கொண்டு எனக்கும் பேருதவி புரிகின்றனர். இதன் மாண்பை எங்ஙனம் செப்புவேன்' எனப்புகழ இனிது
காலங்கழித்த நம் ராசிராஜு, சந்திரகிரிப் பதிக்குட் 30
புகுந்து, பரதேசிபோலோடியாடித் தாமும் ஒரு காலத்தில் கீர்த்தியும், சிறப்பும், பேரும் எய்தினம் என்ற எண்ணமும் அறவே ஒழியுமாறு வறுமையி லாழ்ந்து, என்றும் துக்கமே குடிகொண்ட மனத்தினராய்க் கஷ்ட
ஜீவனம் செய்ய நேர்ந்ததே! அந்தோ! 35

"இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது.

காலக்கிரமத்தில் இவருக்கு ஒரு பெண்குழந்தையும் இரண்டு ஆண் குழந்தைகளும் பிறந்தார்கள். இவ்
வாண்மக்களில் மூத்தவன்தான் நம் திம்மரசு. ஆயினும் 40
வறுமை தசை மாறவேயில்லை. சில வருஷம் இவ்வாறே கழித்துத் தந்தை காலமாயினர். குழந்தைகளும் அநாதர்களாயினர்.

---

## II இளமைப்பருவம் (தொடர்ச்சி).

தந்தை இறந்த காலத்தில், திம்மரசுக்குப் பத்துப் பதினொரு வயதுக்கு மேலில்லை. தன் தமக்கையும் தம்பியும் இளம்பிராயத்தினர்களே. ஆகவே இவர்களது

காலக்ஷேபமும் முன்னிலும் கஷ்டமாக விருந்தது. 
தெய்வவசத்தால் இவனது தூரச்சுற்றத்தவர் ஒருவர் 5
தன் தமக்கையை மணந்து ஊர் போய்ச்சேர, இவ்விரு
சகோதரர் மாத்திரமே சந்திரகிரியில் வசித்துக் காலங்
கழிக்கலாயிற்று. ஒரு நாள் திம்மாசு ஊருக்குப் பக்
கத்திலுள்ள அடவிக்கு ஏதோ ஒரு வேலையின் நிமித்
தம் போனான். அங்கே வெயிலில் வெகுநேரம் சஞ்ச 10
ரிக்க நேர்ந்தது. அது காரணம்பற்றி ஊருக்குத்திரும்பி
வருங்கால் மிகக்களைத்துத் தளர்ச்சி யடைந்திருந்தான்.
வழியில் நிழலடர்ந்த ஓர் ஆலமரத்தடியில் வரவே
இனிச் செல்ல வொண்ணுச் சோர்வுற்றவனுகிக் கீழே
படுத்துச் சற்றுநேரம் உறங்கினுன். 15

ஆகாயம் நிர்மலமாய்த் தோன்றியது. கதிரவன்
மேற்றிசை சாய்ந்து தன் பொற் கிரணங்களை நாற்றி
சையும் வீசி எப்பொருளும் பொன்மய மாகும்படி
விளங்கினுன். அச்சமயம் உயர்ந்த தோள்களும் நீண்ட
கைகளும் அகன்ற மார்பும் பரந்த கண்களும் விசால 20
நெற்றியும் கம்பீரத் தோற்றமும் வாய்ந்த ஓர் சித்த
புருஷர் அக்காட்டின் வழியே சென்ருர். அவர் திம்
மாசு படுத்துறங்கு மரத்தடியிலே வந்தார். சூரிய பிர
காசத்தினுல், தூரத்திலேயே விருட்சத்தடியில் யாரோ
சிறுவன் ஒருவன் அயர்ந்து நித்திரை செய்கிருனெனத் 25
தெரிந்து கொண்டார். சமீபத்தில் வரவே அச்சிறுவ
னது தலைப்பக்கத்தில் ஓர் கிருஷ்ண சர்ப்பம் தனதகன்ற
படத்தை விரித்துச் சூரிய வெப்பத்தை முகத்தினின்று
நீக்குமாறு குடைபிடிப்பது என்ன நிறுத்தி மகிழ்வுற்
றது போல் காணப்பட்டது. இவரைப்பார்த்ததும் அச் 30
சர்ப்பம் சரசர வென்று விரைவினோடி ஒரு புற்றில்

மறைந்தது. சித்த புருஷர் ஆச்சரிய மெய்திச் சிறுவ
னிடத்தில் கருணை கூர்ந்து மெல்ல அவனை யெழுப்பி,
'குழந்தாய்! உனக்கு மங்களம் உண்டாகுக. நீ வெகு
35 சீக்கிரத்தில் ராஜ்யாதிகாரப் பதவியைப் பெறுவாய்.
இனி ஒருபோதும் இம்மாதிரி தனியே உறங்கற்க. சீக்
கிரம் வீடுபோய்ச்சேர்! என வுரைத்தார். திம்மரசும்
சந்தோஷமுற்றவனாய் அப்பெரியவர தடி வணங்கி அவ
ரது திவ்ய வாக்கை நினைந்து நினைந்து ஆச்சரிய முற்ற
40 வனாய்த் திரும்பி ஊருக்குப் புறப்பட்டான்.

தெருவில் தோழர்களுடன் விளையாடிக்கொண்
டிருந்த தன் தம்பியைத் தனியே யழைத்துக் காட்டில்
நடந்த விருத்தாந்தத்தை அவனிடம் திம்மரசு சொன்
னான். இதைக்கேட்ட தம்பி, பொங்கிய சிரிப்பை
45 அடக்கமுடியாமல் 'கொல்' லென நகைத்தான். மற்ற
சிறுவர்களும் ஓடிவந்து என்ன? என்ன? என்று வின
வத் தம்பி தன் தமையன் சொன்ன கதையை அவர்
களுக்கு உரைத்தான். எல்லோரும் கைகொட்டிப் பெரு
நகைசெய்த பிறகு, அவர்களுள் ஒருவன் 'திம்மரசே!
50 உனக்கு மந்திரிப் பதவி கிடைப்பின் எனக்கு ஒரு
தாசில் உத்தியோகம் தரவேணும்' என்றான். 'அடே
போடா, அந்தஸமயம் நம்மைத் திரும்பிக்கூடப் பார்க்
கமாட்டானே' எனப் பரிகசித்தான் வேறொருவன்.
திம்மரசு நீதி செலுத்தும் ராஜ்யத்தில் வெகுபேர்கள்
55 இருப்பார்கள்; யார் என்றால், நான்கு கழுதைகள்,
எட்டுக்குட்டிச்சுவர்கள் என்றான் மற்று மொருவன்.
இவ்வாறு ஒவ்வொருவனும் ஏதேதோ பரிகாச மொழி
களைச் சொல்ல, திம்மரசு வெட்கித் தலைகுனிந்து
மௌனமாய் வீடு சேர்ந்தான்.

இரவில் அன்னமுண்டு படுக்க, நித்திரை பற்ற 60
வனுப்த் திம்மாசு வெகுநேரம் காட்டில் நடந்த சம்பவங்
களைப் பற்றி யோசித்தான். 'என்னே! அத்திவ்ய புரு
ஷர் யாரோ! அவரை இதற்குமுன் பார்த்திலேன்.
திடீரெனவந்து 'நீ ராஜ்ய பரிபாலனம் செய்யும் பத
வியை யடைவாய்' எனச்சொல்லுவானேன்? அவரை 65
நோக்கின் பரிகசிப்பவராகவாவது தோஷபுத்தியுடைய
வராகவாவது தோற்றவில்லையே! அவரது மிருதுவான
அருள் நோக்கும், இனிய குரலும், அமுத வாக்கும்
என் இருதயத்தைக் குளிரச் செய்தனவே! அவர் என்
னிடம் பொய்யுரைத்துப் போவதெவன்? அன்று, 70
அன்று. அவர் ஓர் தீர்க்கதர்சியே யாவர். பின் வரு
வதை முன்னுரைக்கும் சக்தி அவரிடம் உண்மையா
கவே யிருக்க வேண்டும். ஆதலின் அவர் வாக்குப்
பொய்யாகாது. நானும் பெருமுயற்சி செய்து கல்வி
கற்று ஞானப்பெருக்கடைந்து 'இத்தகையா னன்றோ 75
ஓர் அரசுக்கு அமைச்சனாக வேண்டும் என்று பலரு
முரைக்குமாறு திறமையை எய்துவேன்' என உறுதி
செய்துகொண்டான்.

மறுநாட் காலையில் சூரியோதயத்திற்கு முன்பே,
திம்மாசு சுவர்ண முகியாற்றுக்குச் சென்று கிரமப்படி 80
நீராடிக் காலைக்கடன்களை முடித்து வீடுசேர்ந்தான்.
பிறகு பக்கத்துத்தெருவிலுள்ள ஓர் கலைவல்லவ ரில்லம்
சென்று அவரை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துக் கை
கூப்பி நின்று, 'தேவரீர் எனக்கு வித்யாதானம் செய்
தருளவேண்டும். நான் மிக எளியவன், எனக்குச் சுற் 85
றத்தார் இங்கு யாருமிலர். தேவரீரே தந்தை, தேவ
ரீரே தாய், தேவரீரே சுற்றம்; தஞ்சமெனத் தங்களை

யடைந்தேன். ஏழையைக் காத்தருள்க, எனக் கண்க
ளில் நீர்ததும்ப இரங்கி வேண்டினன். அப்பெரிய
90 வரும் கருணை கூர்ந்து திம்மரசின் பூர்வவிருத்தாந்
தங்களைக் கேட்டறிந்து, பிறகு 'அப்படியே ஆகுக ;
பிரதிதினமும் காலையிலே நீ இங்குவா, உனக்கு சாஸ்
திர பாடம் சொல்லுகிறேன்' என வாக்களித்தார்.
இதைக் கேட்டுத் திம்மரசுக் குண்டான மகிழ்ச்சிக்கு
95 அளவேயில்லை. குரு கட்டளையிட்டவிதமே ஒவ்வொரு
நாளும் சாஸ்திரப் பயிற்சி செய்தான். பிற்பகல் நேரங்
களில் எழுத்தாணிகொண்டு ஓலைகளில் எழுதிக் கை
யெழுத்தைத் திறப் படுத்திக் கொண்டான். அதுவு
மன்றி ஓய்வுநேரங்களில் ஸமஸ்தான கார்யாலய கிழுதி
100 காரிகளிடம் சென்று அவருடன் சிநேகம் செய்து
அவர்கள் செய்யவேண்டிய வேலைகளிற் சிலவற்றைத்
தானே செய்து, அதன் மூலமாய் அரசாங்க நிர்வாகம்
எத்தன்மையது என வுணர்ந்தான். ஊரில் புராண
படனங்களோ சாஸ்திர விசாரங்களோ எங்கு நடந்
105 தாலும் அங்கே முன் வந்து வெகு சிரத்தையுடன்
கேட்பான். 'சுவரை வைத்துக் கொண்டல்லவோ
சித்திரம் எழுதவேணும்' என்ற உண்மையை மறவாது
தினந்தோறும் காலையிலும் மாலையிலும் தேகப்பயிற்சி
செய்து சரீரபலத்தை மிகுதியும் பெற்ருன். 'உழைப்
110 பின் வாராவுறுதிகளுளவோ?' வெகு சிக்கிரத்திலேயே
அர்த்த சாஸ்திரம், கணித சாஸ்திரம், வான சாஸ்
திரம் முதலிய கலைகளில் பூரண அறிவும் ஆந்திர
சம்ஸ்கிருத பாஷைகளில் சிறந்த ஞானமும் அடைந்
தான். 'கற்ருேர்க்குச் சென்றவிடமெல்லாஞ் சிறப்'
115 பன்ருே! ஆகவே இத்திம்மரசின் பேர் சந்திரகிரி

ஸமஸ்தானத்தில் மாத்திரமே யன்றி கார்வேட்டுநகரம், குத்தி நாராயணவாம், பெனுகொண்டா முதலிய பிராந்தங்களிலும் பரவியது.

---

## III சிட்டிகங்கநாமாவும் திம்மரசும்.

அக்காலத்தில் சந்திரகிரி ஸமஸ்தானத்தின் பிரதான அமைச்சர் சிட்டிகங்கநாமா என்றோர் பிராமணர். இவரும் ஆந்திர நியோகி குலத்தவர். விசேஷ மதிவாய்ந்தவர். சாஸ்திர ஆராய்ச்சியிற் சிறந்தவர். 5
தம் ஸமஸ்தானத்தின் மகிமையை ஓங்கச்செய்து தம் அரசாது கீர்த்தியையும் பரவச்செய்யவேண்டுமென்ற பேரவாக் கொண்டவர். விசேஷ ஹிந்து மதாபிமானி. மகம்மதியர் தலையெடுக்காமல் தென்னிந்தியாவில் ஹிந்து அரசர்களே என்றும் ஆட்சி புரியவேண்டுமென ஊக்கங் கொண்டு அதற்காகப் பெரிதும் பாடு 10
பட்டு வந்தார். ராஜ நீதி, தண்டநீதி, நீதி சாஸ்திரம், ராஜ தந்திரம் முதலிய முறைகளில் கரைகண்டவர். கௌடில்யர் எழுதிய அர்த்த சாஸ்திரத்தை சாங்கோபாங்கமாய் அப்பியாசம் செய்தவர். மேற்படி சாஸ்திரத்தை அனுபவ பூர்வமாகப் பிறருக்குப் பாடஞ் 15
சொல்லக் கூடியவர், அக்காலத்தில் இவரொருவரே.

ஒரு சமயம் சிட்டிகங்கநாமா திம்மரசின் யோக்கியதையைக் கேட்டு அவனைப் பார்க்க ஆவலுற்றூர். இது விஷயம் தெரிந்த திம்மரசும் பிரதான பட்டணமாகிய கார்வேட்டு நகரஞ்சென்று அமைச்சரை வணங் 20
கினன். விசாரித்ததில் திம்மரசு அவ்வமைச்சருக்கு

ஒருவாறு சுற்றமென்றும் எற்பட்டது. சிட்டி கங்க
நாமா திம்மாசினிடம் வெகு நேசம் பேசி அவனது
விநயம், சாமர்த்தியம், லோக ஞானம் இவைகளுக்கு
25 மெச்சித் தமது காரியாலயத்திலேயே அவனுக்கு ஓர்
உத்தியோக மளித்தார். நாளடைவிலே சிட்டிகங்க நாமா
வுக்கு இச்சிறுவனிடம் அன்பும், அருளும் மிகுந்து
கொண்டே வந்தது. 'இவனன்றோ என் பதவிக்குரிய
வன்! என்ன பொறை! என்ன நுட்பபுத்தி! என்ன
30 நிடசித்தம்! என்ன சமயோசித யுக்தி! ஆகா! இவன்
போலியர் வேறுமுளரோ' என நினைந்து அடிக்கடி
ஆச்சரிய முறுவர்.

ஒருநாள் சிட்டிகங்க நாமா திம்மரசை வரவழைத்
துப் பின் வருமாறு சொன்னர்: 'அப்பா! உன் முன்
35 ஞேர்கள் உயர்ந்த பதவியி லிருந்தவர்கள். நீயும் அத்த
கைய பதவிக்கு வருவாயென எனக்குத் தோன்றுகிறது.
உன்னைப் போன்ற சமர்த்தனை நான் எங்கும் பார்த்த
திலேன். எனக்கு இப்போது எழுபது வயதாகிறது.
தேகதிடமும் மனவலியும் குறையா திருந்தாலும்
40 காலன் எப்போது வருவானே என்ற பயம் அதிகரிக்
கிறது. ஆகையால், எனக்குத் தெரிந்த ராஜதந்திர
விஷயங்களைப் பூர்த்தியாக உனக்குப் புகட்ட வேண்டு
மென அவா என்மனத்தில் எழுகிறது. ஆயினும் நான்
அவ்வாறு செய்யப் புகுமுன் உன்னிடம் ஓர் விஷயம்
45 சொல்ல வேண்டியுளது. இக்கர்நாடக ராஜ்யம் சீர்
குலைந்திருப்பதை எண்ணி எண்ணி என் நெஞ்சம்
மிகப் புண்ணுயிருக்கிறது. என்ன சொல்வேன்! நம்
ஹிந்து ராஜாக்கள் வெகு பராக்கிரம சாலிகளா யிருப்
பினும் ஒருவர்க் கொருவர் ஒற்றுமை யில்லாதது பற்றி

நம் பகைவர்களுக்கு இலகுவாய் இடங்கொடுத்துவிடு 50
கிறார்களே! விஜயநகர ஸமஸ்தானத்தைப்பார். இப்
போது அரசாண்டுவரும் மன்னரின் முன்னோர்கள் எவ்
வளவு தீரர்கள்! ஆயினும் இவர், அதை யெல்லாம்
மறந்து அசிரத்தை மிகுந்து ராஜ்ய முறையில் சற்றும்
கவலையற்றிருக்கிறார். இதையறிந்து பீடர் மாகாண 55
சுல்தானும் இந்த ராஜ்யத்தைக் கைப்பற்ற எப்பொ
ழுது ஸமயம் வாய்க்குமெனப் பேரவாவுடன் காத்துக்
கொண்டிருக்கிறான். இதுவுமன்றிக் கஜபதி மன்னனும்
தென்னிந்தியா முழுவதையும் தன் குடைக்கீழ்க்
கொணர நிச்சயித்துத் தகுந்த பிரயத்தனங்களும் 60
செய்துகொண்டு வருகின்றனன். கண்டிக் கோட்டை
யைப் பிடிக்க முயன்ற பாமினி சுல்தானையும், காஞ்சி
புரத்தைக் கைப்பற்றவந்த கஜபதிராஜனையும் நானல்
லவோ தோல்வி யடைவித்தேன். ஆயினும் எந்நாளும்
அம்மாதிரி செய்ய எனக்கு இயலுமோ? மகம்மதியர் 65
கள் கர்நாடகத்தில் முன்னேற்றமடைந்தால் நமது மதம்
அடியோடு வேரற்று நசித்து விடுமன்றோ? ஆரிய மதா
சாரியர்கள் ஆத்மதத்துவத்தை யுணர்ந்து அதனை நம்
போலியர்க்கு அருளிச்செய்த இந்நாடும் மிலேச்சர்
வசப்படுதல் நன்றோ! சிறுவனே! உன்னைப்போன்ற 70
புத்தி கூர்மைவாய்ந்தவனை நான் இதுகாறும் கண்டி
லேன். உன்னை நோக்கின் நீயும் என்னுடைய பதவி
போன்ற பதவியை அடைவாய் என்ற உணர்ச்சி என்
மனத்தில் உதிக்கிறது. அத்தகைய நிலையை நீ அடை
வாயாயின் நான் இதுகாறும் செய்து வந்துள்ள முயற் 75
சிகளைத் தளரவிடாது கிருஷ்ணா நதிக்குத் தக்ஷிணத்
துள்ள இப்பாகத்தில் மகம்மதியர்கள் என்றும் தலை

காட்டாவண்ணம் செய்துவிடுவேனென்று நீ எனக்கு உறுதி கூறவேண்டும். அவ்வாறு வாக்களித்தால் நான்
80 எனக்குத் தெரிந்த ராஜநீதி சாஸ்திரம் முழுவதையும் உனக்குப் புகட்டுவேன்'' என்றார். இதைக் கேட்ட திம்மரசு அடங்காத்துயருற்றுக் கண்களில் நீர்ததும்ப அமைச்சரது காலில் வணங்கி, 'தேவரீரது திருவுள்ளப் படியே ஆகுக. ஹிந்து ஸாம்ராஜ்யத்தைத் தென்னிந்
85 தியாவில் நிலைநிறுத்த என்ன முயற்சிகள் செய்ய வேண்டி யிருப்பினும் அவைகளைச் செய்வேன். அதற் கென்றே என் ஆவியையும், உடலையும் அர்ப்பணம் செய் வேன். இதுசத்தியம். என்று சொன்னான். அமைச்ச ரும் சந்தோஷம் மிகுந்து, 'மகனே! உன் திடத்தை
90 மெச்சுகிறேன்; இனி எனக்கு மனக்குறை யில்லை; விசாரமின்றி உறங்குவேன்' என்றுரைத்து, அன்று முதல் திம்மரசுக்கு ராஜதந்திர சாஸ்திரமுறையைப் போதிக்கத் தொடங்கினர். இரண்டு வருஷகாலத்தில் கிரந்தங்கள் மூலமாகவும் அனுபவ மூலமாகவும் தமக்
95 குத் தெரிந்த யாவற்றையும் திம்மரசுக்கு உபதேசித்து முடித்தார்.

---

## IV திம்மரசின் யோசனை.

அக்காலத்தில் விஜயநகர ராஜ்யம் சற்று க்ஷீண தசையிலிருந்ததென நாம் எற்கெனவே கூறியுள்ளோம். இந்த ராஜ்யம் முதன்முதலில் பதினான்காம் நூற்றாண் டின் ஆரம்பத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. ஹரிஹர
5 னென்று பெயர்படைத்தவன், இதன் முதலரசன்.

இவனது பாக்யவசத்தால் இவனுக்கு இக்காலத்தில்
சிருங்கேரி மடத்ததிபதியாய் விளங்கின வித்தியா
ரண்ய ஸ்வாமிகள் முதன் மந்திரியாக வாய்ந்தனர்.
விஜயநகரம் என்றது ஆதியில் வித்தியாரண்ய நகர
மென்றே வழங்கியது. இவ்வரசனது வம்சத்தவர்கள் 10
ஏறக்குறைய பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதி
வரையில் இவ்விராஜ்யத்தை ஆண்டுவந்தனர். கடை-
சியாய்ப் பட்டத்துக்கு வந்த அரசன் ப்ரௌடதேவ
ராயன் என்போன். இவன் திறமையற்றிருந்தமையால்
விஜயநகர ராஜ்யம் வெகுவாய்ச் சிதறுண்டது. சிற்றின் 15
பத்தில் மூழ்கி,

"முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்."

என்ற உண்மையை ஓராது ஒழுகிய காரணம்பற்
றிக் குடிகளும் சிற்றரசர்களும் இவனை மதியாது
வெறுக்கத் தொடங்கினர். வேறு சிலர் மனமிரங்கி,
'என்னே! இவ்விந்து ஸாம்ராஜ்யமும் தொலைதல் நியா 20
யமோ? நாற்புறங்களிலும் மகம்மதியர்கள் ஆக்கிரமித்
துக்கொள்ள முயற்சித்து வருகின்றார்களே. வீரசௌரி
யபராக்கிரமம் வாய்ந்ததீரன் ஒருவனல்லவோ இக்கா
லத்து இத்தேசத்து மன்னனா யிருத்தல் வேண்டும்!
என்றெண்ணித் துயருற்றனர். 25

இவ்விராஜ்யத்து சேனைத் தலைவராய் வெகு காலம்
இருந்து இப்போது சந்திரகிரி சமஸ்தானத்தை ஆண்டு
வந்த சாளுவ நரசிம்ம பூபாலர், மேற்சொன்னவாறு
ப்ரௌட தேவராயனது மதியீனத்தைக் குறித்து மிக
வும் மனம் நொந்தார். இவ்வரசனிடத்தில் முதற் 30
சேனைத் தலைமைவகித்த துளுவ நரச நாயக்கரும்

விசேஷ வியாகுலம் எய்தினர். இவர் குத்தி என்ற பட்டணத்திலிருந்தார். இந்நரச நாயக்கர் திம்மரசின் சாமர்த்தியத்தைக் கேள்வியுற்று அவனைத் தம்மிடம் 35 பிரதானியாய் அமர்த்திக்கொள்ள அவாக் கொண்டு தம் எஜமானனை உத்தரவு தரவேண்டுமெனக் கேட்க அவரும் ஒப்புக்கொண்டார். திம்மரசும் சீக்கிரம் இவனிடம் வந்து சேர்ந்தான்.

அமைச்சர் சிட்டிகங்க நாமாவிடம் தான் செய்த 40 பிரதிக்ஞையைத் திம்மரசு மறக்கவேயில்லை. தென்னிந்தியாவில் ஹிந்து ஸாம்ராஜ்யத்தை எவ்வாறு நிலை நிறுத்தலாம் என்ற எண்ணமே அவனது மனத்தில் என்றும் குடிகொண்டிருந்தது. ஆலோசித்துப் பார்க்குங்கால் இக்காரியத்தைச் செவ்வனே முடிக்கக் கூடியவர் நா 45 சிம்ம பூபாலர் ஒருவரே யெனத் தோன்றியது. ஆதலின் நரச நாயக்கரிடம் ஒரு தினம் சென்று தன்னெண்ணத்தைத் தெரிவிக்க நரசநாயக்கரும் சிந்திக்கலாயினர். 'ஆம் ஆம், திம்மரசு சொல்வது உண்மையே. விஜயநகர மன்னன் சீர்குலைந்திருக்கும் வரை தென் 50 னிந்தியாவில் சமாதானமே இராது. ஹிந்து சிற்றரசர்கள் ஒருவரோடொருவர் போராடுவதற் கன்றி மகம்மதியர்கள் ஆக்கிரமிப்பதற்கும் இடந்தரும். தற்காலம் ஆட்சி புரிந்துவரும் மன்னர்களுக்குள் அத்தகைய ஆபத்தைத் தடுக்கவல்லவர் நம் நரசிம்மபூபால ரொரு 55 வரே. அவர் விசேஷ பராக்கிரமசாலி. நிரம்பவும் நிதான புத்தியையும் உடையவர். குடிகளை ரஞ்சிக்கச் செய்யும் நடுவு நிலைமை பொருந்தியவர். பார்ப்பவர் மனத்தில் பக்தியும், விசுவாசமும் எழச்செய்யும் வசிகரண சக்திவாய்ந்தவர். ஆதலின் விஜயநகர ராஜ்

யத்தை எளிதிற் கைப்பற்றி சிம்மாஸனத்தில் நம் பூபா 65
லரை அமரச்செய்வதே நன்று' எனத் தெளிந்தார்.
பிறகு, திம்மரசின் புத்தி கூர்மையையும் தீர்க்காலோ
சனைத் திறமையையும் மெச்சி மேற்கூறிய அபிப்பிரா
யங்களையும் கண்டு ஓர் கடிதமெழுதி அதை நரசிம்ம
பூபாலருக்கு நாயக்கர் அனுப்பினர். அதைக் கண் 70
ணுற்ற அரசரும் மிக்க ஆனந்தம் எய்தினர். தென்
னிந்தியாவில் பிரஜைகளுடைய அனுகூலத்தை உத்தே
சித்துத் தம் மந்திரி சொல்லியயோசனை சாலவும் நன்
றெனக் கண்டுகொண்டு, 'நீர் சொல்லியவாறே ஆகுக ;
அதற்குத்தக்க முயற்சிகளையும் செய்யக்கடவீர்' என 75
உத்தரம் அனுப்பினர்.

---

## V தண்டயாத்திரை.

தம் அரசரின் ஆணையைச் சிரமேற்கொண்டு நரச
நாயக்கர் படையெழுச்சிப் பிரயத்தனங்களை வெகு
சீக்கிரத்தில் முடித்து ஓர் பெரிய சேனையை சித்தப்
படுத்தினர். பின்பு திம்மரசு சொன்ன யோசனைக்
கிணங்கி ரகசியமாகவே விஜயநகரம் சென்று அந்நக 5
ரைக் கைப்பற்ற வேண்டுமெனத் தீர்மானித்தனர்.
குத்தி நகரிலிருந்து கிளம்பி வெகு விரைவில் விஜய
நகரஞ் சென்று அந்நகரத்தை முற்றுகை போடும்
வண்ணம் சேனையைக் கோட்டையைச் சுற்றி எல்லாப்
பக்கங்களிலும் அமர்த்திப் பிறகு அரசனுக்கும், அவ 10
னுடைய சேனைத் தலைவர்களுக்கும் தாம்வந்த செய்

நிலையும், கொண்டுள்ள அபிப்பிராயத்தையும் தெரி
வித்தனர். மதுபானம் செய்து மதிமயங்கித் தனது
கடமையை மறந்து மகளிர் காமத்தில் மூழ்கிச் சிற்
15 றின்பமே பேரின்பமென மதித்து அந்தப்புரத்தினின்
றும் வெளிவாராது காலங்கழிக்கும் தேவராயன், இந்
தச் சமாசாரத்தைக் கேட்டு என்ன செய்தானெனில்,
வந்த வேலைக்காரர்களை நையப்புடைத்து நிரம்பவும்
வசைமொழிகளால் வைது தன் எதிரில் நில்லா வண்
20 ணம் துரத்தினன். சேனநாயக்கர்களும் போர் வீரர்
களைத் திரட்டச் சக்தியற்றவர்களாகிச் சும்மா விருந்
தனர். பொதுஜனங்களோ 'எவ்வாறாயினும் தேவ
ராயன் தொலைந்தாற் போதும்; வேறு எவ்வரசர் வரி
னும் ராஜ்யம் சிறக்குமேயல்லாது இப்போதிருக்கும்
25 நிலைமை யவ்வளவு கேடுறாது; ஆதலின் போர்
முயற்சி யொன்றும் செய்யவேண்டாம்' என நினைத்து
வழக்கம்போலத் தத்தம் வேலைகளைக் கவனித்து வந்த
னர். அதனல் நரசநாயக்கர் யாதொரு சிரமுமின்
றித் தம் சேனையைக் கோட்டைக்குள் அழைத்துச்
30 சென்றனர். இது தெரிந்த தேவராயன் அந்தப்
புரத்தின் பிற்பக்கத்தி லுள்ள ஓர் வாயில் வழியாய்
வெளிக்கிளம்பிவந்து நகரினின்றும் ஓடிப்போனன்.
உடனே நரசநாயக்கர் தாம் நரசிம்ம பூபாலரது சேனைத்
தலைவராய் வந்து அவருக்காக விஜயநகர ராஜ்யத்
35 தைக் கைப்பற்றியதாக நகரமெங்கும் பறைபறைவித்
துத் தம் அரசருக்கும் இச்சந்தோஷ சமாசாரத்தைத்
தெரிவித்து, சிக்கிரம் விஜயநகரம் வரவேண்டுமென
வேண்டினர். அன்றியும் தேவராயனது உறவினர்க
ளையும், அவனிடத்து விசுவாசம் வைத்துள்ள மற்றவர்

களையும் சிறைசெய்து, சிலரைப் பெனுகொண்டாவுக் 40
கும், வேறு சிலரைக் குத்திக்கும், மிகுந்தவர்களைச் சந்
திரகிரிக்கும் அனுப்பினர்.

---

## VI நரசிம்ம பூபாலரது ஆளுகை.

இச்சந்தோஷ சமாசாரத்தைக் கேட்ட நரசிம்ம
பூபாலர் மிகவும் மனம்பூரித்தார். தமது தளகர்த்த
ராகிய நரசநாயக்கரது தீரத்தையும் திம்மரசின் புத்தி
கூர்மையையும் நினைத்து வெகு ஆச்சரியங்கொண்டார்.
இனிமேல் ஒருவாறு தென்னிந்தியாவில் ஹிந்து ஸாம் 5
ராஜ்யத்தை நிலை நிறுத்தலாம் எனத் தைரியம் கொண்
டார். தம் தளகர்த்தர் வேண்டிக்கொண்ட வண்ணம்
நாராயணவரத்தினின்றும் கிளம்பி வெகு சீக்கிரம் விஜய
நகரம் வந்து சேர்ந்தார். நரசநாயக்கரும், திம்மரசும்,
வேறுசில பிரமுகர்களும் புடைசூழ நகருக்கு வெளியே 10
சென்று, அரசரை வெகு மரியாதையுடன் வரவேற்
றனர். பட்டாபிஷேகத்துக்கு ஓர் நாள் குறிப்பிட்டுச்
சிற்றரசர்களுக்கும், தளகர்த்தர்களுக்கும், கௌரவ
மிக்க வேறுபலர்க்கும் பத்திரிகை அனுப்பினர். அவர்
களும் வர, வெகு விமரிசையாகப் பட்டாபிஷேக 15
மகோற்சவம் நடந்தேறியது.

திம்மரசின்பேர் மேன்மேலும் பெருகியது. இவ
ரது நற்குணங்களுக்கும் சாமர்த்தியத்துக்கும் இவரை
மெச்சாதவர் ஒருவரும் இலர். அரசரும் இவருடன்
ஆலோசியாது ஒரு காரியமும் செய்வதில்லை. ஒரு 20
சமயம் தமக்குப் பிரதான மந்திரியாக கௌரவத்தை
வகிக்கவேண்டுமென்று அரசர் திம்மரசிடம் சொல்ல
அவர், 'ஐயா, பட்டப்பேரில் என்ன இருக்கிறது; நான்

என்றும் தங்களுக்குரியனல்லனோ? பிரதான மந்திரி
25 யாக ஏற்பட்டால் இப்பொழுது செய்யும் ஊழியத்
தில் ஏதேனும் மாறுபாடு ஏற்படுமோ? என்னைக்காட்டி
லும் வயதிலும், அனுபவத்திலும் முதிர்ந்த பெரியோர்
கள் தங்கள் சபையை அலங்கரிக்கின்றனரே. அவர்க
ளது மனங்கோணுதிருத்தல் முக்கியமன்ருே? ஆதலின்
30 தங்களெண்ணத்தைத் தயைகூர்ந்து ஒழிக்கவேண்டு
கிறேன். திம்மரசு பிழைத்திருக்கும் வரையிலும் அவ
னது ஆவியும், உடலும் தங்களுடையனவாகும். இதில்
ஐயம் ஒன்றும் வேண்டாம்' என்ருர். இதைக்கேட்ட
மன்னர் ஆச்சரியமடைந்து மேலே ஒன்றும் சொல்
35 லத் தோன்ருது சும்மாவிருந்தனர். திம்மரசின் செல்
வாக்கு ராஜ்யத்தில் மேன்மேலுயரவே அது கார
ணமாக ஆந்திரர்களுடைய செல்வாக்கும் அதிகரித்துக்
கொண்டே வந்தது.

ஒருநாள் தாம் தனியாக இருக்கும் சமயத்தில்
40 அரசர் திம்மரசை வரச்செய்து அவருடன் பின்வரு
மாறு ஆலோசிக்கலாயினர்: 'திம்மரசே, சிலகாலத்துக்கு
முன்னிருந்ததைதவிட இப்போது நம்ராஜ்யத்தில் செழு
மையும், கலகமின்மையும், பொதுஜனசௌகர்யங்களும்
மிகுந்துள்ளன என்பது உண்மையே. ஆயினும் பாமி
45 னிசுல்தானும், கலிங்கதேசத்துக் கஜபதி ராஜாவும் பல
முள்ளவர்களாயிருக்கும்வரையில் நம் ராஜ்யத்துக்
குப் பயம் இல்லை என்று எவ்வாறு சொல்லலாம்?
அவ்விருவர்களையும் முறியடித்தல், நம்ராஜ்யத்தின்
முன்னேற்றத்துக்கு இன்றியமையாதகாரியம். அதை
50 நாம் எவ்வாறு முடித்தல் சாத்தியம்?' எனக்கேட்டார்.
திம்மரசு 'ஐயே, தாங்கள் சொல்வது உண்மையே.

இடம் பொருள் வலி இவைகளை ஆராய்ந்து பாராது அவசரப்பட்டு நாம் ஒன்றும் செய்தல் கூடாது. பாமினி சுல்தானுக்கு அசுவபதி என்று ஓர் பேருண்டு. 'குதிரை நாயக்கன்' என்பது இதன் பொருளாகும். அவ்வாறு பெயர் வந்ததற்குக் காரணம் அவனது குதிரைப்படையின் வலிமையே. கலிங்கதேசத்து மன்னனுக்கு கஜபதி யென நாமம் வாய்ந்தது தன் யானைப் படைமிகுதியாலன்றோ; ஆதலின் தங்களது குதிரைப்படையும், யானைப்படையும் இவ்வரசர்களது படைவலிக்கு மேற்பட்டாலல்லவோ தங்கள் எண்ணம் நிறைவேறும். இன்று முதல் தேவரீர் தங்கள் படை வன்மையைத் திடப்படுத்தவேண்டும்' எனச்சொன்னார். அரசரும் அவ்விதமே ஆகுக!'' எனத் தீர்மானித்தனர்.

சிக்கிரத்தில் விஜயநகர ராஜ்யத்தில் குதிரை வியாபாரமும், யானை வியாபாரமும் வெகு மும்முரமாய் நடக்கத் தலைப்பட்டன. எவ்வளவு திரவியச் செலவானாலும் சரி, எவ்வளவு உயர்ந்த விலை கொடுக்க நேரினும் சரி, கிடைக்கக்கூடிய அசுவங்கள் யாவற்றையும் வாங்க வேண்டுமென அரசர் கங்கணம் கட்டிக்கொண்டார். ஆயிரக்கணக்கான குதிரைகள் அரபிதேசத்தினின்றும் கொண்டுவரப்பட்டன. இவ்வாறு ஏற்பாடு செய்வதில் அரசருக்கு அபிப்பிராயம் யாதெனில் தம் குதிரைப் படை வலிமையடைய வேண்டுமென்பது மாத்திரமல்ல; பாமினி சுல்தானுக்கு எங்கும் குதிரைகள் கிடைக்காமற் செய்யவேண்டுமென்றும் உறுதி கொண்டார். ஒருவாறு இவ்வெண்ணம் நிறைவேறிய தென்றே சொல்லவேண்டும். 'குதிரையின் வால் நுனியைக் கொணர்ந்தாலும் அதை நம்மரசர் வாங்காது விடார்'

80 என்று பொது ஜனங்கள் சொல்லலாயினர். இதனு லேயே அரசர் குதிரைப்படை திரட்டிய பான்மையை ஊகித்துக் கொள்ளலாமன்றோ? ஆயினும், "ஒன்றை நினைக்கி னது வொழிந்திட் டொன்றாகும்; அன்றி யது வரினும் வந்தெய்தும்" என்னுமுதுரை சத்தியமல்லவா?
85 அவ்வாறே மேன்மேலும் தம் ராஜ்யத்தைப் பெரி தாக்குவோமென எண்ணங் கொண்டிருந்த நரசிம்ம பூபாலர் நீடீரென வியாதிகண்டு காலகதியாயினர். அவ ரது இரு குமாரர்களும் இளம்பிராயத்தின ராதலின், அவர்களில் மூத்தவனைச் சிம்மாஸனமேற்றி நரசநாயக்
90 கர் தாம் ராஜப் பிரதிநிதியாய் நின்று அரசாங்கத்தை நடத்திவந்தார்.

---

## VII நரசநாயக்கர்.

நடுவு நிலை தவறாது நரசநாயக்கர்,

"வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்"

என்ற உண்மையைக் கடைப்பிடித்து ஒழுகிவந்தனர். பிரஜைகளும் மனமுவந்து நரசிம்ம பூபாலரது பிரிவை ஒருவாறு மறந்து இனிது வாழ்ந்துவந்தனர். ஆயினும், தீயார்க்கு நல்லோர் வேம்பாவ ரன்றோ? அவ்வாறே
5 நாயக்கரிடம் பொறாமை கொண்ட ஓர் தளகர்த்தன், எவ்வாறாயினும், அவரது பேரையும்,புகழையும் கெடுக்க எண்ணங்கொண்டு சதியாலோசனை செய்யலானான். முடிவில், மைனரான அரசரைக் கொன்று அப்பழியை நாயக்கர்மீது சுமத்தலே தகுந்தவழி யெனத்தெரிந்து,
10 ஒருநாள் அரசர் தனியா யிருக்குந் தருணம் பார்த்து

அவரைக் கத்திக் கிரையாக்கினன். அந்தோ! அரசர் இறந்த செய்தியைக்கேட்டு ஜனங்களெல்லோரும் வெகுவாய்த் துக்கமடைந்தனர். தீங்கிழைத்த தளகர்த்தன், அங்கங்கே தன் சிநேகிதர்களைக் கொண்டு நரசநாயக்கரே இவ்விபரீதச் செயலுக்குக் காரண 15 மென்றும், தாமே சிம்மாசனமேற வேண்டுமென்ற கெட்ட எண்ணத்துடன் அவ்வாறு செய்வித்தனரென்றும், ரகசியமாகவும், வெளிப்படையாகவும் சொல்லுமாறு ஏற்பாடுசெய்தனன். இதுகேட்ட நாயக்கர் மனம்பதைபதைத்து மிக்கத் துயருற்றார். 'ஐயோ, அர 20 சிளங் குமரன் அநியாயமாய்க் கொலையுண்டானே என ஏங்கி நிற்கும் எனக்கு இந்த அபவாதமும் வரவேண்டுமோ! ஜகதீச, இதுவும் நினது திருவுளமாமோ! நிரபராதியான எனக்கு இத்தண்டனையேன்!' என நினைந்து விம்மி விம்மிக் கதறினர். பிறகு ஒருவாறு மனதைத் 25 தைரியப் படுத்திக்கொண்டு, தம் பிரதான மந்திரியான திம்மாசை வரச்செய்து, இனி நடக்கவேண்டிய விஷயம் யாதென வினவினர். திம்மாசும் விசாரமுற்றவராய், 'ஐய, பயப்படவேண்டாம்; தங்கள் மீது பழிசுமத்துபவர்கள் இவ்விராஜ்யத்தில் மிகச்சிலரேயாவர்; பெரும் 30 பான்மையோர் தங்களது குணங்களையும், சாமர்த்தியத்தையும் அறிந்து கொண்டவர்களே; அவர்கள் தங்களுக்கு சுயமாகவே அரசராகவேண்டுமென்ற கெட்ட எண்ணம் உண்டென்று ஒருநாளும் நம்பவே மாட்டார்கள்; ஆயினும் தாங்கள் உடனே செய்யவேண்டிய 35 காரியம் ஒன்றுளது; அதாவது, இறந்த அரசரது தம்பியை உடனே சிம்மாசனத்தில் ஏற்றிப் பட்டாபிஷேகத்தை முடிப்பதே. இவ்வாறு செய்யின் இப்போது

நப்பபிப்பிராயம் கொண்டுள்ள சிலரும் தங்கள் எண்
40 ணத்தை மாற்றிக்கொண்டு விடுவார்கள்; இது நிச்சயம்'
என்று சொன்னர். நாயக்கரும் வெகு சீக்கிரத்தில்
அவ்வாறே அரசரின் இளைய சகோதரரான இம்மடி
நரசிம்மனைச் சிம்மாசனம் ஏற்றுவித்தார்.

---

## VIII இம்மடி நரசிம்மன்.

சிற் கிறைப்பதிலேயே கண்ணுயிருந்த தளகர்த்
தன், மறுபடியும் நரசநாயகருக்கு எவ்விதம் இடையூறு
செய்விப்பது எனக் கருதலாயினன். இதற்கு முதற்படி
யாய்ச் சிற்சில உபாயங்கள் செய்து அரசரின் தய
5 வைச் சம்பாதித்தனன். 'வெளுந்த தெல்லாம் பால்'
என்று எண்ணும் தன்மையும், அனுபவ மின்மையால்
பசப்பு வார்த்தை யுரைப்பவர் யாவரும் நம்மித்திரர்
எனக் கொள்ளும் இயல்பு முடையவரான அரசர், அத்
தளகர்த்தனுடைய சூழ்ச்சிகளுக்கு ஈடுபட்டார். ஆகவே,
10 நரசநாயக்கரிடத்தும், திம்மரசு மந்திரியிடத்தும் இவ
ருக்குச் சற்று அவமதிப்பு ஏற்பட்டது. இதையுணர்ந்த
திம்மரசு, நாயக்கரிடம் சென்று அரசரின் மதியீனத்
தைக் குறித்துத் துக்கித்து, எவ்வாருயினும் இத்தள
கர்த்தனது மாயவலையில் சிக்காது, அரசரை விடுவிக்க
15 வேண்டிய தவசியமெனக் கூறி, தாமே நேரில் அரச
ரிடம் சென்று, அவரது மனநிலையை மாற்ற முயற்சிப்
பதாக உரைக்க, நாயக்கரும் அதற்கிணங்கினர்.

ஒருநாள் அரசர் ஏகாந்தமா யிருக்கும்போது
திம்மரசு அவரிடம் சென்று பின்வருமாறு சொன்னர்:
20 'அரசே! தாங்கள் இளம்பிராயத்தினர்; இவ்வுலகின்

இயல்பைச் செவ்வையாய் இன்னும் அறிந்திலீர் ; உண்மை நட்பும், பிறர் சுகமாய் வாழக்கண்டு உவக்கும் தன்மையும், தக்கோரை மதித்தலும் இவ்வுலகின்கண் அரியனவாகும். உள்ளொன்று வைத்துப் புறம் பொன்று கூறுதலும், பொறாமையும், பெரியோரை 25 இகழ்தலும் ஆகிய இக்குணங்களே பெரும்பாலும் மானிடர்களிடம் காணப்படும். தாங்கள் உயர்ந்த பதவியில் உள்ளவர். சீக்கிரத்தில் இந்த ஸாம்ராஜ்யத் தைத் தனியே ஆளும் திறமையை அடையவேண்டிய வர். அதற்குத் தக்கவாறு உண்மையும், நெறியும் தவ 30 ருத, 'மூத்தவறிவுடையார் கேண்மை,' யைப் பெறல் வேண்டும்.

> தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
> செற்றார் செயக்கிடந்த தில்,

என்ற ஆன்றோர் வாக்குமுண்டு. இவ்வாறு செய்யாது வீணர்களுடன் உறவுசெய்து 'அகத்தின்னாவஞ்ச' ருடன் கூடிக் காலம் கழிப்பின் சீரும், பேரும் குன்றி 35 நன்மக்களால் இகழப்பட்டு மாண்பின்றி மடியநேரிடும். இது உலகில் அனுபவசித்தமாய் ஏற்பட்ட உண்மை.

தாங்கள் இப்பொழுது வெகுவாய் சிநேகித்து வரும் தளகர்த்தன் எத்தன்மையவன் என அறிவீரோ? அவனே தமது தமயனைக் கொன்றவன் ; இது விஷ 40 யம் நரச நாயகருக்குத் தெரிந்திருந்த போதிலும் நேரில் ஒருவரும் அவன் செய்த கொடிய கருமத்தைப் பாராதது பற்றி அவனைச் சும்மா விட்டுவிட நேர்ந்தது; தாங்கள் அவனுடன் சகவாசம் செய்தல் நியாய மன்று ; இவ்வார்த்தையை அசட்டைசெய்தால் அத 45 னால் தீமையே விளையும். தாங்கள் நன்றாய் இதைக் கவ னிக்க வேண்டுமென்பது எனது வேண்டுகோள்.'

இதைக்கேட்ட அரசர் பதிலொன்றும் சொல்லாது மௌனம் சாதித்தனர். சொன்ன வார்த்தைகள்
50 மனதில் பதிந்ததற்கு அடையாளங்கள் வேறொன்றும் காணப்படவும் இல்லை. இதைப்பார்த்த திம்மரசு, நாயக்கரிடம் சென்று நடந்த விருத்தாந்தங்களை யுரைத்து இனிச் சும்மாவிருப்பது நியாயமன்று. அரசரின் மனம் திருந்துமென்று எண்ண நியாயமே யில்லை; இப்போ
55 துள்ள நிலையிலேயே அவரிருப்பின் நம் ராஜ்யத்துக்கு வெகு சீக்கிரத்தில் கேடுவிளையும்; இதுகாறும் நாம் கொண்டுள்ள ஆசையும் வீணாகும். ஆதலின் தகுந்த உபாயங்கள் செய்து, இம்மாயத் தளகர்த்தனது சூழ்ச்சிகளை நீக்கவேண்டும், என்று சொல்ல, நாயக்கரும்
60 அதற்கு உடன்பட்டனர்.

இது நடந்த சில தினங்களுக்கெல்லாம் நாசநாயக்கர், ஏதோ அவசர காரிய நிமித்தம்போல் பெனுகொண்டாவுக்குச் சென்றார். சீக்கிரத்தில் ஒரு பெரிய சேனையுடன் திரும்பிவந்து, விஜயநகரத்தை முற்றுகை
65 செய்து, அரசரிடம் சென்று, 'நீர் உமது சிநேகித தளகர்த்தனைக் கொல்லுகிறீரா அல்லது இராஜ்யத்தை இழக்க இஷ்டமா?' எனக்கடிந்து கேட்க, அரசர் பயந்து, தளகர்த்தனைக் கொல்வித்து அவன் தலையை நாயக்கரிடம் அனுப்பினார். நாயக்கரும் முற்றுகையை
70 நீக்கி, அரசரை அருகிலுள்ள கோட்டையில் இருக்கச் செய்து, தாம் முன்போலவே ராஜ்ய அதிகாரத்தை நடத்திவந்தார். ராஜ்யத்தில் திம்மரசு வைத்ததே சட்டம். அவரது யோசனையின்றி நாயக்கர் ஒன்றும் செய்யார். பிரஜைகளும் மிகவும் சுகமாக வாழ்ந்து
75 வந்தனர்.

## IX. மகம்மதியரின் மீது வெற்றி.

இக்காலத்தில் பிஜப்பூர் ராஜ்யத்தை ஆண்டு வந்த சுல்தான், அடில்ஷா என்பவன். இந்த சுல்தான், விஜய நகர சமஸ்தானத்தைக் கைப்பற்றச் சூழ்ச்சிகள் செய்து வந்தனன் என்று நாம் முன்னமேயே சொல்லி யுள்ளோம். ஆதலின், அவனுக்கும், விஜயநகர அரசர் 5
களுக்கும் தீராப்பகை யென்றே சொல்லவேண்டும். அடில்ஷாவை யெதிர்த்துப் போர்செய்ய எத்தனங்கள் செய்து வந்த காசிம் பரீத் என்று பெயர் கொண்ட பீடர் மாகாணத்துச் சிற்றரசன். நரச நாயக்கரிடம் வந்து, அவரது உதவியை வேண்ட, நாயக்கர் திம்மர 10
சிடம் ஆலோசித்தார். அரசு நீதிதெரிந்த திம்மரசும்,

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு,

என்ற ஆன்றோர் வாக்கை யொட்டி, இவ்விரு பகைவரது பகைமையை விருத்தி செய்வித்தலே முறை யெனக்கொண்டு, நாயக்கரை அச்சிற்றரசனுக்கு உதவி புரிவதாக ஒப்புக்கொள்ளச் சொன்னார். அவ்வாறே 15
ஒரு சேனையையும் திரட்டி காசீம்பரீத் அரசனிடம் அனுப்ப, அச்சேனை துங்கபத்திரைக்கும், கிருஷ்ணை வுக்கும் நடுவிலுள்ள முதிகல்லு, ரெயிச்சூர் என்ற இரு கோட்டைகளையும் ஆக்கிரமித்துக் கொண்டது. இத னால் பாமினி சுல்தானுக்கு வெகு நஷ்டம் ஏற்பட்ட 20
தென்றே சொல்லவேண்டும். ஏனெனில் இக்கோட்டை கள் விஜயநகர ராஜ்ய எல்லைக்கருகில் உள்ளவைகள். அவை அவ்விராஜ்ய மன்னர் கைவச மிருப்பின், பாமினி ராஜ்யத்தின் மீது எந்தச் சமயத்திலும் படை யெடுத்தல் சாத்தியமாகும். ஆயினும் தம் படைவலி 25

சொற்பமா யிருந்தமையால் அடில்ஷா ஒன்றும் செய்யாது சும்மா விருந்தனன்.

---

## X. திரிசிரபுர அரசர் மீது வெற்றி.

திரிசிரபுர ராஜ்யத்தை இக்காலம் ஆண்டுவந்த மன்னன் கோனேரிநாதர் என்பவர். இவர் சைவ சமயத்தைத் தழுவியவர். எச்சமயமு நற்சமயமெனத் தெளிந்த தாயுமானவர் உறைவிடமான இத்திரிசிர 5 புரத்திலிருந்தும் கோனேரி நாதருக்கு வைணவ மதத்தில் மிகத் துவேஷ புத்தியுண்டு. ஆதலின் ஸ்ரீரங்கத்துக் கோவில் தர்ம கர்த்தாக்களையும், மற்றுமுள்ள வைணவ பக்தர்களையும் மிகக்கொடுமையாய் நடத்திவந்தனர். கொடுமையைத் தாங்கமாட்டாத சில வைண 10 வர்கள் கோவிற் கோபுரத்தின்மீதேறி அங்கிருந்து கீழேவிழுந்து உயிரை மாய்த்துக்கொண்டனர். மதத் துவேஷமற்ற திம்மரசு இதைக்கேட்டு மனம்பொறுதவராய் நாயக்கரிடம் சென்று, எவ்வாறாயினும் இவ் வைணவாது குறையைத் தீர்க்க வேண்டுமெனக் கூற, 15 நாசநாயக்கர் ஒரு சேனையைத் திரட்டி அதனோடு திரிசிரபுரத்தை நோக்கிச் சென்றனர். இதையறிந்த கோனேரி நாதரும் சேனையுடன் எதிர்த்துவர, இருதிறத்தார்க்கும் போர் நேர்ந்தது. கடைசியாய்க் கோனேரிநாதர் போர்க்களத்தில் மாண்டார். நாச 20 நாயக்கரும், அவருடன் கூடவந்த அவரது குமாரரும், நாகமநாயா என்ற வேறொருவரும் ஸ்ரீரங்கத் திருப்பதிக்குச் சென்று, பெருமாளைச் சேவித்து அவரது திருக்கோவிலுக்கு மானியங்கள் விட்டு, வைணவாது குறைகளைத் தீர்த்து விஜயநகரத்துக்குத் திரும்பினர்.

## XI. பாமினி ராஜ்யம்

இவ்விராஜ்யத்தைக் குறித்து எற்கெனவே சிறிது கூறியுள்ளோம். இது ஐந்து மாகாணங்கள் கொண்டது. ஒவ்வொரு மாகாணமும் சுபேதார் என்ற பெயர் கொண்ட அதிகாரியின் கீழிருந்து சுல்தானுடைய ஆளுகைக்கு அடங்கி நின்றது. அம் மாகாணங்களாவன:—

(1) பேரீத் ஷாஹி-இதன் பிரதான நகரம் பீடர். காசிம்பரீத் என்பவன் கீழுள்ளது.

(2) இமாம் ஷாஹி-இதன் பிரதானநகரம் காவிலிகடா

(3) நிஜாம் ஷாஹி-இது மகமத்ஷா என்பவனால் எற்படுத்தப்பட்டது. முக்கிய பட்டணம் ஆமத்நகரம்.

(4) அடில் ஷாஹி-அடில்ஷா என்பவனால் எற்படுத்தப்பட்டது. பிரதான நகரம் பீஜப்பூர்.

(5) குதுப்ஷாஹி-குதுப்ஷா என்பவனால் எற்படுத்தப்பட்டு, கோல்கொண்டாவை முக்கிய பட்டணமாக வுடையது.

காலக்கிரமத்தில் பாமினிசுல்தான் வம்சத்தவர்கள் வலிமை குறைந்துகொண்டே வந்தார்கள். ஆகவே இம்மாகாண சுபேதார்களும் தங்களது அதிகாரத்தைப் பெருக்கிக்கொண்டே வந்தார்கள். கடைசியாய் பாமினி சுல்தானுடைய சம்பந்தம் அடியோடே இவர்களுக்கு அற்றுப்போயிற்று. ஆகவே இக்காலத்தில் இவ்வைந்து மாகாண சுபேதார்களும் தாங்களே தனிச் சிற்றரசர்களாக ஆண்டுவந்தனர்.

இவர்கள் தனித்தனியே இருக்கும் வரையில், விஜயநகர ராஜ்யத்துக்கு நன்றேயெனத் திம்மரசு

தெரிந்து கொண்டு, அவர்களுக்குள் ஒருவருக்கொருவர் நட்பு ஏற்படாவண்ணம் மித்திரபேதம் செய்துவந்
30 தார். ஆயினும் அம்மட்டோடு நின்று விடாமல் தம் ராஜ்யத்தில் உட்கலகம் யாதொன்றும் நேராமலும், ஜனங்களுக்குள் அந்யோந்ய சிநேகபாவம் குறையாம லும் இருக்கும்படி பார்த்துக் கொண்டார்.

பாமினி சுல்தானுக்கு விரோதமாய்ப் போர்புரிய
35 எண்ணங்கொண்ட பீடர் சிற்றரசனுன காசிம்பரீதுக்கு உதவி புரிந்து, ரேய்ச்சூர்க் கோட்டையை நரசநாயக்கர் தம் சேனையைக் கொண்டு ஆக்கிரமித்துக்கொண்டமை முன்னமேயே சொல்லப்பட்டது. அதைச் சுற்றிலு முள்ள சிற்றரசர் யாவருக்கும் இக்கோட்டைமீது
40 கண்ணுண்டு. நரசநாயக்கர், கோனேரி நாதரை எதிர்த் துத் திரிசிரபுரம் போயிருந்த காலத்து, அடில்ஷா ஒரு சேனையுடன் வந்து ரேய்ச்சூர் கோட்டையைப் பிடிக்க முயன்றனன். இதை யறிந்த திம்மரசு தீவிரமாக ஒருசேனையைத் திரட்டி அதை நரச நாய்க்காது தம்
45 பியான திம்ம நாயக்காது வசம் ஒப்பித்து, அதனு டன் சென்று அடில்ஷாவை எதிர்த்துப் போர் செய்ய ஏற்பாடு செய்தார். திம்ம நாயக்கரும் அவ்வாறே ரேய்ச்சூருக்குச் செல்ல அங்கே ஓர் பெரிய யுத்தம் நடை பெற்றது. முதலில் திம்ம நாயக்கருக்கு வெற்றி
50 வரும்போலத் தோன்றினும் இறுதியில் அவர் தோல் வியுற்றார். ரேய்ச்சூர்க் கோட்டையையும் அடில்ஷா கைப்பற்றினன். ஆயினும் அவன் தனது வலியின் மையை உத்தேசித்து, விஜய நகரத்தின்மீது படை யெடுத்துச் செல்லாது நின்று விட்டனன். திம்மரசும்
55 எதிரியுடன் திரும்பிப் போர்புரியக்காலம் சரியல்ல என

உணர்ந்து அடில்ஷாவுடன் சமாதான உடன் படிக்கைச் செய்துகொண்டார். ஆயினும் தமது சதுர்வித சைன்ய பலத்தையும், விஜய நகரத்துக்கோட்டை பலத்தையும் விருத்திசெய்து கொண்டே வந்தார்.

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.
காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

---

## XII. நரச நாயக்கரது குடும்பம்.

நரசநாயக்கருக்கு மனைவியர் மூவர். மூத்தவளான திப்பாம்பா என்பவளிடம் வீரநரசிம்மன் என்ற குமாரனும், இரண்டாம் பாரியையாகிய நாகாம்பாளிடம் கிருஷ்ண தேவராயன் என்ற புதல்வனும், மூன்றும் பத்னியான ஓபாம்பாளிடம் அச்சுத தேவராயன், 5 ரங்கராயன் என்றிரு புத்திரர்களும் தோன்றினர். நரசநாயக்கர் இல்லறத்துக்குரிய தர்மங்களெல்லாம் மிகவும் வாய்ந்தவர். 'அன்பும் அறனும் உடைத்தா னவ' ரென்றும், 'இயல்பினு னில்வாழ்க்கை, வாழ்பவ' ரென்றும் அவரைப் பற்றிக்கூறுதல் நியாயமேயாகும். இவரது 10 இல்லக்கிழத்தியரும் இவரிடம் அன்பு பூண்டொழுகினரென்றே சொல்லல் வேண்டும். ஆயினும் புத்திரர்கள் தோன்றிய பிறகு ஒருவாறு இல்லற மாண்பு மாறியது. ஒவ்வொரு பாரியையும் அரசருக்குப் பின் தன் தன் புதல்வனுக்கு ராஜ்யம் கிடைக்கவேண்டும் என்ற 15 எண்ணங்கொண்டு ஒழுகலாயினள். அது காரணம் பற்றி அந்தப்புரத்தில் கொஞ்சம் சமாதானக் குறைவு ஏற்பட்டது. ஒவ்வொருத்திக்கும் தாதியர் மந்தரை

போன்ற மந்திராலோசனைக் காரிகளாக ஏற்பட, அடிக்
20 கடி அந்தப்புரத்தில் உட்கலகங்கள் நேர்ந்தன. இதை
யறிந்த நாசநாயக்கர் துயருற்று, பிரதான மந்திரி
யான திம்மரசை வரவழைத்துக் குடும்ப விருத்தாந்
தங்களை அவருக்குத் தெரிவித்து 'இனி ராஜ்ய பாண
மேயன்றி, இக்குடும்ப பரணத்தையும் நீரே ஒப்புக்
25 கொள்ளும்' என்றார். திம்மரசும் அரசர் தம்மிடம்
வைத்துள்ள நம்பிக்கையை நினைத்து ஆச்சரியமுற்று,
எவ்வாறு இச்சந்தர்ப்பத்தில் தீதின்றி நடந்துகொள்ள
லாகும் என அதைரிய மனத்தராயினும் ஒருவாறு
துணிந்து, 'ஐய! அஞ்சற்க, நான் ஜாக்கிரதையாக
30 இருந்து தீங்குறுவகை காப்பேன்' எனக்கூற, நாச
நாயக்கரும் விசாரம் நீங்கினர்.

அன்று முதல் அந்தப்புரத்தில் நடக்கும் விருத்
தாந்தங்கள் அனைத்தும் தம் காதுக்கெட்டுமாறு திம்
மரசு ஏற்பாடு செய்து கொண்டனர். இதுவிஷயம் அர
35 சாது ஸ்திரிகளுக்குத் தெரியவே அவர்கள் நடுக்கங்
கொண்டார்கள். 'இனி சும்மாவிருத்தலே நலம்; இம்
மந்திரியின் 'ஆள்வினையு மான்றவறி' வையு நோக்கிப்
பகை மன்னரும் வாளா விருக்கின்றன ரன்றோ? நம்
சூழ்ச்சிகள் இவரது அபார அறிவுக்கெதிரில் எவ்வாறு
40 பயனுறும்?' என்று எண்ணினர்.

இவ்வாறு திம்மரசிடம் பயங்கொண்டு தம் அபிப்
பிராயத்தை வார்த்தைகள் மூலமாயாவது, செய்கைகள்
மூலமாயாவது வெளிப்படுத்ாதவர்கள் அரண்மனையி
லும், இராஜ்யத்திலும் பலருண்டு. ஓடிப்போனப்ரௌட
45 தேவராயனது சந்ததியாரையே அரசராக்கவேண்டு
மென எண்ணங்கொண்டவர் சிலர். வேறு சிலர்

'இதென்ன அநியாயம். இம்மடி நரசிம்மன், பேருக்கு மாத்திரம் அரசரே யொழிய, அரசகௌரவமெல்லாம் நரச நாயக்கரிடத்தன்றோ வுள்ளன. இது எவ்வாறு பொருந்தும்? இம்மடி நரசிம்மனிடமே எல்லா அதி 50 காரங்களையும் விட்டுவிடும் வண்ணம் ஏற்பாடு செய்தல் வேண்டும்' என்று அபிப்பிராயங் கொண்டனர். இதை யும் அறிந்த திம்மரசு, அவர்களை அங்கங்கே உத்தி யோகங்களில் அமர்த்தி, அவர்களால் தீங்கொன்றும் விளையாதவாறு முன் ஜாக்கிரதையுடன் இருந்தார். இவ் 55 வாறு 'வகையறிந்து, தற்செய்து தற்காப்பச்'செய்தலி னால் பகைவர் கொண்ட செருக்குக் குன்றியது.

---

## XIII. திப்பாம்பாளின் சூழ்ச்சி.

தமது இரண்டாம் பத்தினியாகிய நாகாம்பாளிடம் நாயக்கருக்கு விசேஷப் பற்றுண்டு. அவ்வளவு பிரியம் மற்ற இருபாரிபைகளிடத்தும் இல்லை என்று சொல்ல 60 லாம். அதுபோலவே நாகாம்பாளிடம் தோன்றிய கிரு ஷ்ணதேவராயனிடத்தும், மற்றப் புதல்வரிடத்துள்ள வாஞ்சையைவிட அதிக வாஞ்சையை நாயக்கர் வைத் தார். இதுவுமன்றி இப்புதல்வருக்குக் குருவான திம் மரசு, அரசிளங்குமாருள் புத்தி, சாமர்த்தியம், விநயம் 65 இவைகளில் கிருஷ்ணதேவராயனே சிரேஷ்டன் என் றும் அடிக்கடி சொல்லிவந்தார். இவையெல்லாம் திப் பாம்பாளுக்கு விசேஷ வியாகுலத்தை உண்டு பண் ணின. 'ஆ! அரசர் என்னிடம் மாத்திரம் அசட்டையா யிருக்கிறார் என்றில்லையே! என் அருமைப் புதல்வனி 70 டங் கூடவன்றோ பட்சமில்லாமலிருக்கிறார். அதுவேயு மன்றித் திம்மரசும் தேவராயன் கட்சியில் இருக்கின்

றனரே! இதை யெல்லாம் ஆலோசிப்பின் மூத்தவர்க் குரித்தாசெனு முறை' தவறிவிடுமென்றே காணப்படு
75 கின்றது. ஐயோ! என் செல்வச்சேய் அங்கஹீனனு யாவது, புத்தியில்லாதவனுகவாவது, சாமர்த்தியம் குன் றினவனுகவாவது இருப்பின் இக்கஷ்டத்தை ஒருவாறு சகித்துக்கொள்ள முடியும். இப்போது அவன் இருக் கும் நிலைமைப் பார்த்தவர் யார்தான் காலக்கிரமத்தில்
80 அவன் 'கல்வியு மிளமையுங் கணக்கிலாற்றலும், வில்வினை யுரிமையும் வீரமும்' எய்தான் எனச்சொல்லுவார்கள். அத்தகைய மைந்தன் 'அவந்தனுப் வெறு நிலத் திருப்ப', என் சக்களத்தி மகன் 'நிவந்த, வாசனத்தினி திருப்ப' நானும் பார்ப்பேனே! 'அரசரிற் பிறந்து பின்
85 னரசரில் வளர்ந்த', என் அருமைப்புதல்வன் அரசரின் பதவியை அடையாமற் போவானே'! என்று எண்ணி, எண்ணி ஏங்கினுள்.

மேற்கூறியவாறு பலநாள்யோசித்து மனம்நொந்த திப்பாம்பாள், யாதேனும் சூழ்ச்சிசெய்து சிம்மாசனம்
90 தன் குமாரன் பெறுமாறு செய்ய வேண்டுமெனத் தீர் மானித்தாள். இவ்வெண்ணம் நிறைவேற வேண்டில் தேவராயன், திம்மரசு ஆகிய இவர்களிருவருள் எவரே னும் ஒருவர் இறத்தல் வேண்டுமெனக்கண்டாள். பிறகு
95 இவருள் எவரைக் கொன்றால், விளையும் தீங்கு சொற்ப மாகுமென ஆராய்ந்தாள். திம்மரசை மாய்த்தல் சாத் தியமு மன்று. சாத்தியமாயினும் யுக்தமுமன்று. அவர் இறப்பின் இந்த ராஜ்யத்தில் குழப்பங்கள் மிகுதியும் ஏற்படும். அப்பொழுது என்ன தீங்குதான் நடக்கலா
100 காது? என் குமாரனுக்கு ராஜ்யம் சித்திக்கும் என்று எவ்வாறு சொல்ல முடியும்? ஆதலின் திம்மரசை விட்டு

விடவேண்டியதே. தேவராயனையோ வென்றால் அவனைக்கொல்லுதலும் சுலபம்; அவன் இறந்த மாத்திரத்தாலேயே என் எண்ணம் நிறைவேறு மென்றும் சொல்லலாம். ஏனெனில் அவனுக்குப்பின் என் வீரநரசிம்மனுக்கன்றி வேறு யாவருக்கும் அரசர் ராஜ்யத்தைக் கொடுக்கமாட்டார் எனத்தெளிந்தாள். 105

உடனே தனக்கு நம்பிக்கை மிகவாய்ந்த ஒரு தாசியிடம் சென்று அவளைக்கொண்டு தேவராயனது உணவில் விஷத்தைக் கலக்குமாறு பிரயத்தனம் செய்தாள். ஆயினும் திம்மரசின் முன் ஜாக்கிரதையால் அதன் தந்திரம் பலிக்கவில்லை. பலமுறை முயன்றும் இச்சூழ்ச்சி தவறியது. திம்மரசும் இனிக் கிருஷ்ண தேவராயனை அரண்மனையில் வைத்திருத்தல் பிசகெனக் கண்டு கொண்டு அவனைத்தன் னில்லத்திற்கே அழைத்துச் சென்று அங்கேயே அவனை வளர்த்துவந்தனர். ஆகவே பெற்ற தகப்பன் நரசநாய்க்கரெனினும் இச்சிறுவனை வளர்த்தெடுத்து ஞானப்பால் ஊட்டிய தந்தை திம்மரசே யாவார். இது காரணம் பற்றியே கிருஷ்ண தேவராயர் தம் ஆயுள் நாள் முழுமையும் திம்மரசை 'அப்பாஜி,' என்று அழைப்பது வழக்கம்; அப்பாஜி, என்றபதம் 'போற்றத்தகும் தந்தை' எனப்பொருள்படும். 110 115 120

இவ்வாறு கிருஷ்ண தேவராயனிடம் மட்டிலாப் பிரியம் வைத்திருந்தபோதிலும் திம்மரசுக்கு வீரநரசிம்மனிடம் அன்பு குறையவேயில்லை; அவனையும் தம் புத்திரன்போலவே பாவித்து அவனுக்கும் தக்க புத்திமதிகளைச் சொல்லி வந்தார்; வீரநரசிம்மனும் விநயம் குறையாதவனாய்த் திம்மரசிடத்து பயபக்தியுடனேயே ஒழுகிவந்தான். 125

## XIV கிருஷ்ண தேவராயனது படிப்பு.

இளமையிற்கல், 'கேடில் விழுச்செல்வங் கல்வி,' 'கல்வியி னூங்கில்லை சிற்றுயிர்க் குற்ற துணை' என்ற உண்மைகளைத் திம்மரசு சுவானுபவத்தில் அறிந்து கொண்டவரன்றோ! ஆதலின் அவர், அரசிளங்குமாரனது சிறு பிராயமுதற்கொண்டே அவனுக்குக் கல்வி புகட்டத் தொடங்கினர். ஆயினும் வரவர ராஜீய வியவகாரங்களில் தமக்கு நிரம்பவும் காலம் செலவானதுபற்றித் திம்மரசுக்குச் சிறுவனது படிப்பைக் கவனிக்க அவகாசமில்லாமற் போயிற்று. ஆதலின் அவர் தேவராயனது கல்வி விஷயங்களில் மனது செலுத்தி தக்க எற்பாடுகள் செய்யவென்றே தமது சகோதரரான கோவிந்த ராஜுவைப் பிரத்யேகமாய் நியமித்தார்; கோவிந்த ராஜுவும் தமது கடமைகளைச் சிரத்தையாய் நடத்திவந்தார். தேவராயன் நன் மாணாக்கனது குணங்களாம்—குருவினிடத்துச்

சென்று வழிபடுதலு
மறத்துறை வழாமையுங் குறிப்பறிந் தொழுகலுங்
கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலும்
மீட்டவை வினவலும் விடுத்தலு முரைத்தலும்

உடையவனாய் வெகு உற்சாகத்துடன் கல்விகற்று வந்தான். ஆதலின் அவன் பதினெண் பிராயமாகு முன்னரே ஆந்திர கீர்வாண பாஷைகளில் சிறந்த தேர்ச்சியடைந்தான்; அப்பாஷைகளிலுள்ள உயர்ந்த கிரந்தங்களைப்படித்து அவைகளின் சாரங்களை உணர்ந்ததுமன்றித் தானே கிரந்தங்கள் இயற்றும் சக்தியையும் பெற்றனன்; "கல்வியிற் கடலேயானான், கவினுறு கவியேறானான்." இதுவுமன்றிச் சாம்ராஜ்யத்தில் கன்

னடம் பேசும் ஜனங்களும், ஹிந்துஸ்தானியைத் தாய் மொழியாகப்பெற்ற மகம்மதியர்களும் இருந்தகாரணம் 25 பற்றி, அவ்விருபாஷைகளையும் தெரிந்துகொள்ளல் அவசியமெனக்கண்டு அவைகளையும் அப்பியசித்தான். பிறகு திம்மரசு தாமே தேவராயனுக்கு ராஜநீதி, தண்டநீதி முதலிய சாஸ்திரங்களை உபதேசித்தார்.

இவ்வாறு அறிவு, ஞானம் இவைகளைச் சம்பாதிப் 30 பதிலேயே எல்லாக் காலத்தையும் தேவராயன் செலவு செய்தான் என்று எண்ணுதல் கூடாது. தான் ஓர் அரச குமாரனென்றும், ஒரு சமயம் தான் ராஜ்யத்தையே ஆளவேண்டிவருமென்றும், அப்படி யில்லாமற்போனாலும், சைனியத்தைப் போர்க்களத்தில் வைத் 35 துத் தான் தலைவனாய் நின்று தனது புஜபல பராக்கிரமத்தினாலும், அஸ்திர சஸ்திரத் தேர்ச்சியினாலும் தன் வீரர்களது மனத்தில் தைரியத்தையும், உற்சாகத்தையும் விளைத்துப் போர்புரிந்து எதிரியை முறியடிக்க வேண்டிவரும் என்றும் அவன் தெரிந்துகொள்ளாம 40 லிருக்கவில்லை. அவனது குருவும் அது விஷயத்தை நன்றாயறிந்தவரே ; ஆதலின் ஆரம்பமுதற்கொண்டே தேவராயனுக்குத் தக்க மனிதர்களைக்கொண்டு தேகப் பயிற்சியும் செய்வித்தார். ஆகவே வித்யாப்பியாசம் முடிவுற்ற காலத்து அவனைப்போன்ற தோள்வலியுடை 45 யவன் இராஜ்யத்தில் எவனு மிலன். வேட்டையாடுவதில் அவனைப்போலக் கைதேர்ந்த குதிரை வீரனும் இல்லை. அரண்மனையின் பெரிய முற்றங்களில் நடக்கும் போலிச் சண்டைகளில் இவன்மாதிரி போர்புரிபவன் எவனும் இல்லை. ரதசாரத்தியம் செய்வதிலும் 50 இவனை யொப்பாரரியர்.

இவ்வாறு உளத்தின் நலமும், உடலின் நலமும் ஒருங்கே பெற்ற நம் தேவராயன், அதற்கேற்ற ஒழுக்கத்தையும் அடைந்து, 'பாதார சகோதர'னுய்த் தூய 55 மனத்துடனிருந்து, அத்தூய்மையால்வரும் முகவொளி, உற்றுப் பார்ப்போர் மனத்தைக்கவரும் தன்மை வாய்ந்து விளங்கினன். முகத்தில் அம்மை வடுக்கள் செறிந்திருப்பினும் அவனது கம்பீரத்தோற்றம் அவைகளை மறைத்து,

"நெஞ்சத்து
நல்லம்யா மென்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே யழகு"

60 என்ற ஆன்ருேர் வாக்கை உண்மைப்படுத்தியது.

---

## XV நரச நாயக்கரது மரணம்.

1503-ம் வருஷத்தில் நாயக்கருக்கு வியாதிகண்டு இனி தாம் உய்தல் சாத்தியமன்று எனத் தெரிந்து கொண்டார். உடனே திம்மரசை வரச்செய்து அவரிடம் இவ்வாறு உரைத்தனர்: 'நண்பரே! என் காலம் 5 குறுகியதென எனக்குத் தோற்றுகிறது. ஆயினும், இறத்தலில் எனக்குப்பயமொன்றும் இல்லை. பிறந்தவன் இறந்தே தீரவேண்டுமன்ருே? எனக்குப் பின் நம் ராஜ்யநிலை எவ்வாறிருக்குமோ என நினைந்தே ஒருவாறு விசாரமுறுகிறேன். ஆயினும் தாங்கள் உள்ள வரையி 10 லும் அந்த விசாரமும் வேண்டாம் என்ற தைரியமும் என் மனத்தில் இல்லாமலிருக்கவில்லை. வீரநரசிம்மனும், கிருஷ்ண தேவராயனும் மிக்கச் சிறுவர்கள். இது தங்களுக்குத் தெரிந்ததே. இதுகாறும் செய்துவந்தது போலவே இனிமேலும் அவர்களைப் போஷித்துக்

தக்க காலத்தில் மூத்தவனை அரசனுக்கி, அவனுக்கு 15
மந்திரியாய்த் தாங்கள் துணை நின்று இவ்விராஜ்யம்
என்ஞான்றும் நன்கு செழித்தோங்கி வளரும் வண்
ணம், தாங்கள் முயற்சி செய்யவேண்டுமெனக் கேட்டுக்
கொள்ளுகிறேன். மகம்மதிய சுல்தானையும், கஜபதி
மன்னனையும் தென்னிந்தியாவினின்றும் துரத்திபடிக்க 20
நாம் இருவரும் சங்கல்பம் செய்துகொண்டோமாயி
னும் அது இன்னும் நிறைவேறாமலேயிருக்கிறது. எனக்
குப்பிற்காலத்தும் இவ்வெண்ணத்தைத் தாங்கள் மனத்
தைவிட்டு அகலாது வைத்திருந்து, யாதொரு தளர்ச்சியு
மின்றிப் போர் முறைகளைக் கைப்பற்ற வேண்டுமென் 25
பது என் கோரிக்கை. அதை நிறைவேற்றுவதாகத்
தாங்கள் தைரியம் கூறின், நான் ஏதும் விசாரமற்ற
வனாய், சமாதானசித்தனாய் உயிர் நீங்கப் பெறுவேன்.'
இதைக்கேட்ட திம்மரசு, தம்மையும் மீறிக்கொண்
டெழுந்த துக்கத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு, 30
'ஐய! மனக்கவலையை ஒழியுங்கள். தங்கள் மனோபீஷ்
டத்தை என்னால் இயன்றவளவு நிறைவேற்றுவேன்'
எனச் சொல்ல, நாயக்கர் சாந்தமனத்தினராய் உயிர்
துறந்தனர்.

---

## XVI. வீரநரசிம்மன்.

நாயக்கரது மரணங் காரணமாகத் திம்மரசுக்கு
அதிக விசாரம் நேர்ந்தது. வீரநரசிம்மனுக்குப் பட்டங்
கட்டுவது இலகுவான காரியமாகத் தோற்றவில்லை.
நரசிம்ம பூபாலரது குமாரனான இம்மடி நரசிம்மன்
பெனுகொண்டாவிலிருக்க, நரசநாயக்கர் குமாரனை எவ் 5
வாறு அரசனாக்கலாமெனவெண்ணங்கொண்டவர் ஒரு
சாரார். அன்றியும் ப்ரௌடதேவராயனது சந்ததியார்

களே பட்டத்துக்கு உரித்தானவர்; அவர்களுள் ஒரு
வனையே சிம்மாசனம் ஏற்றுவிக்க வேண்டுமெனக் கூறி
10 யவர் மற்றோர்சாரார். இவர்களது எண்ணங்களை
யெல்லாம் புறக்கணித்து அவர்களது மனஸ்தாபத்தை
யும் பொருட்படுத்தாது, வீரநரசிம்மனுக்கே பட்டாபி
ஷேகம் செய்வித்தாலும், அவனுக்குத் தம்மிடத்தில்
உண்மையான பக்தியும், நன்றியறிதலும் இராது என்று
15 திம்மரசுக்கு நன்றாய்த்தெரியும். ஆகவே இச்சமயம்
இவரது மனம் மிகக் குழப்ப முற்றிருந்தது. ஆயினும்
வீரநரசிம்மன், தம்மிடத்து வந்து, அன்புள்ளவன்
போல நடித்துத் தமது உதவியை வேண்டத் திம்மரசும்
தாம் நாயக்கருக்குக் கூறியுள்ள வார்த்தையையுன்னித்
20 தகுந்த பிரயத்தனங்கள் செய்து வீரநரசிம்மனைச் சிம்மா
சனம் ஏற்றுவித்தார். திம்மரசிடம் இருந்த பயம் காரண
மாக விஜயநகரத்து ஜனங்கள் இதற்கு விரோதமாய்
ஒன்றும் சொல்லாது சும்மா இருந்தனர்.

இது விஷயம் தெரிந்த திராவிட ஆந்திர கர்னாடக
25 தேசத்துச் சிற்றரசர்கள் பெரும்பான்மையோரும் வீர
நரசிம்மனை ராஜ்யத்துக்கு அதிபதியாய் அங்கீகரித்து
வழக்கம்போல் கப்பம்கட்டி வந்தனர். ஆயினும்
மைசூர் பிராந்தத்திலுள்ள சிலசிற்றரசர்கள், வீரநரசிம்
மனைத் தங்கள் மண்டலமன்னனாய் ஒப்புக்கொள்வ
30 தில்லை எனச் சொல்லிக் கப்பம் கட்டவும் மறுத்தனர்.
வேறு சிலர் இம்மடி நரசிம்மனை அரசனாக்க எண்ணிச்
சூழ்ச்சிகள் செய்து வந்தனர்.

இவற்றை யெல்லாம் அறிந்த திம்மரசு, சும்மா
இருக்கவில்லை. சிற்றரசரைக் கீழ்ப்படுத்த முயற்சிக்கு
35 முன், இராஜ்யத்திலேயே உட்கலகங்கள் உண்டாகாமலும்,

இதா மன்னர்கள் படையெடுத்து வாராமலும் பார்த்துக் கொள்ளுவது அவசியமாதலின், அதற்கேற்ற முறைகளை முதல் முதலில் அனுஷ்டித்துவந்தார். மகம்மதியர் உட்புகா வண்ணம் துங்கபத்திரை நதிக்கரையில் ஓர் சேனையையும், கஜபதிமன்னன் சேஷ்டை செய்யாதிருக்குமாறு உதயகிரியில் மற்றோர் சேனையையும் வைத்தார். இம்மடி நரசிம்மன் தலை யெடுக்காம லிருப்பதை உத்தேசித்து அவனைப் பெனுகொண்டா பிராந்தத்துக்கு அரசனாகப் பட்டாபிஷேகம் செய்வித்து, மற்றுஞ் சில சௌகரியங்களையும் அளித்து அவனைச் சும்மா இருக்கச் செய்தனர். அன்றியும் பிரதான நகரமான விஜய நகரத்துள்ள சேனையைப் பலப்படுத்தி அதைத் தன் சகோதரனான கோவிந்த ராஜுவின் தலைமைக்குக் கீழ் வைத்தார். மேற்கூறிய சாதனங்களால் ஒருவாறு தேசத்தில் சமாதானம் ஏற்பட்டது. பிறகு வேறொரு சேனையைச்சேர்த்து அதை அரசரது தம்பிகளான அச்சுதராயன், ஸ்ரீரங்கராயன் என்பவர்கள் வசம் ஒப்பித்து, மைசூர் பிரதேசத்துக்குச் சென்று,அங்குக் கப்பம் கட்டமறுத்த தலைக்காடு, உம்மத்தூர்ச் சிற்றரசர்களை வென்று, அவர்களைக் கப்பம் கட்டச்செய்து வருமாறு அனுப்பினர். அவ்வாறே அவர்களும் சென்று கொங்கண தேசத்தில் சில சிற்றரசர்களை வென்று அவர்களிடம் கப்பம் பெற்றுத் தலைக்காடு போய்ச் சேர்ந்தனர். இதை அறிந்த அத்தேசத்துச் சிற்றரசன் இவர்களை எதிர்த்துவர, ஒரு பெரும் போர் நேர்ந்தது. கடைசியில் அரச சகோதரர்கள் தோல்வியுற்றனர். ஆகவே கொண்ட எண்ணம் நிறைவேறாது அவர்கள் விஜய நகரத்துக்குத் திரும்பினர்.

இது நடந்த சில நாட்களான பிறகு, ஒருசமயம் திம்
65 மரசு அரசரிடம் சென்று, 'ஐய! தம்சகோதரர்கள் தலைக்
காட்டுச் சிற்றரசனால் முறியடிக்கப்பட்டுத் திரும்பிவந்
தது ஓர் துக்க சம்பவமே. ஆயினும் நாம் இனிச்சும்மா
இருத்தல் கூடாது. கப்பம் கொடாச் சிற்றரசர்களைக்
கீழ்ப்படுத்தல் வெகு முக்கியம். அன்றேல், இப்போது
70 நகத்தால் கிள்ளி எறியக்கூடியது, சீக்கிரத்தில் கோடரி
கொண்டு வெட்ட வேண்டியதாய் வளரும்.

> இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
> கைகொல்லுங் காழ்த்த விடத்து.

அதாவது, கப்பம் கட்டாச் சிற்றரசர் சிலர் உளர்,
என்ற சங்கதி பலருக்குந் தெரியுமாயின் வேறு சிற்ற
ரசர்களும் கப்பம் கட்ட மறுப்பார்கள். ஆதலின்
75 உடனே செய்யத்தக்க காரியம் ஒன்று உளது. அது
யாதெனின், நீங்கள் தீர்த்த யாத்திரை என்ற வியா
ஜத்தை வைத்துக்கொண்டு அங்கங்கே சென்று, சிற்றா
சர்கள் உங்களது தோள்வலியையும், பராக்கிரமத்தை
யும் காணச்செய்து அவர்களிடமிருந்து வரவேண்டிய
80 கப்பத்தைப் பெற்று வருவதே. எப்பொழுதேனும்
சேனை பலம் குறையின் எனக்குத் தெரிவித்தால் நான்
மனிதர்களை அவ்வப்போதே அனுப்புவேன்' என்று
சொன்னார். வீரநரசிம்மன் சந்தோஷித்து, 'அமைச்
சரே! அப்படியே செய்வேன். என் தந்தை இறக்
85 குங்காலை தாங்கள் சொல்லும் யோசனைகளைக் கைப்
பற்றி நடக்க வேண்டுமென உரைத்தாரன்றோ? அதை
நான் மறப்பேனோ?' என்றான். திம்மரசு உடனே ஒரு
பெருஞ் சேனையை ஆயத்தப்படுத்த, வீரநரசிம்மனும்
தீர்த்த யாத்திரையை உத்தேசித்துத் தென் தேசத்
90 துக்குப் பயணம் புறப்பட்டான்.

## XVII. கிருஷ்ண தேவராயன் திக்விஜயம்.

அரசர் சென்று சில தினங்கள் ஆனதும், திம்மரசு கிருஷ்ண தேவராயனை வரவழைத்து, 'அப்பா! அரசர் தீர்த்த யாத்திரைக்குப் போவதாய் உரைப்பினும், திக் விஜயத்தை உத்தேசித்தே தக்ஷிண தேசம் சென்றிருக் கிறார். நீயும் ஒரு சேனையுடன் மைசூர் பிராந்தம் 5 சென்று, கப்பம் கொடுக்க மறுத்த உம்மத்தூர்ச் சிற்ற ரசனையும், மற்றவர்களையும் கீழ்ப்படுத்தி வருதல் யுக்த மெனத் தோன்றுகிறது. அவ்வாறு செய்யின், உனது வீரம் எங்கும் பிரசித்தமாவது மன்றி நம் ஸாம்ராஜ் யத்துக்கும் பலம் ஏற்படும். ஆதலின் உடனே புறப் 10 பட்டுப்போய் அரசர் வருமுன் திரும்பவேண்டும்' எனவே கிருஷ்ண தேவராயனும் ஒப்புக்கொண்டான். சீக்கிரத்தில் ஒரு சேனையும் சித்தமாயிற்று.

தேவராயன் சேனையுடன் உம்மத்தூர் சென்று அக்கோட்டையை முற்றுகைசெய்தான். இடைவிடாது 15 மூன்று மாதகாலம் போர் செய்து கடைசியில் அதைக் கைப்பற்றினன். பிறகு சிவ சமுத்திரம் சென்று அதை யும் முற்றுகை போட்டான். அக்காலத்தில் அக்கோட் டையை ஆண்டுவந்த சிற்றரசன் கங்கராஜு என்பான். தேவராயன், அச்சிற்றரசனது சத்துருவான சிக்கராஜு 20 என்பவனுடன் சிநேகம் செய்து அவனது துணையை யும் பெற்றனன். ஆகவே கங்கராஜு வெகு தீரமாய் எதிர்த்து ஒரு வருஷகாலம் போர்புரிந்தும் கடைசி யில் தேவராயன் வெற்றியடைந்தான். கோட்டையும் அவன் கைவசம் ஆயிற்று. கங்கராஜுவோ 'மான 25 மழிந்தபின் வாழாமை முன்னினிதே' என நினைந்து காவிரியாற்றில் விழுந்து உயிர் துறந்தனன். பிறகு

வேறு சில சிற்றரசர்களையும் தேவராயன் முறியடித்தான். இவ்வாறு கைக்கொண்ட கருமம் இனிதே
30 முடிவுபெறத் தேவராயன் சந்தோஷம் மிகுந்து, ஜய பேரிகையுடன் ஸ்ரீரங்கப்பட்டணம் சென்று, அதை அப் பிராந்தத்தில் விஜயநகர ஸாம்ராஜ்யத்தின் கீழுள்ள ஊர்களுக்குப் பிரதான நகரமாகச் செய்து, அப்பதியிலுள்ள பெருமானைச் சேவித்து, 'எல்லாம்வல்ல இறைவ!
35 நினது அருட் பிரபாவத்தாலன்றோ எனக்கு வெற்றி கிடைத்தது. நீயன்றி யோரணுவும் இவ்வுலகில் அசையுமோ' என விநயத்துடன் தொழுது, அவரை வழிபட்டு, தனது வெற்றிக்கு அடையாளமாய் அந்நகரில் ஒரு ஸ்தம்பத்தை நாட்டி, அதன் இருபக்கங்களிலும்
40 சங்கு சக்கரங்களின் உருவங்களை அமைப்பித்து, விஜய நகரம் திரும்பி வந்தனன். கப்பமாகக் கிடைத்த ஒரு கோடி வராகனையும் ராஜ்ய பொக்கிஷத்தில் சேர்த்தனன்.

---

## XVIII. வீரநரசிம்மன் திக்விஜயம்.

தக்ஷிண தேசம் சென்ற வீரநரசிம்மனும், தனது புஜபலத்தாலும், கலங்கா நெஞ்சத்தாலும், எதிரியை நடுங்கச்செய்யும் தன்மையாலும் சென்றவிடமெல்லாம் சிறப்பெய்தினன். சேர, சோழ, பாண்டிய மன்னர்
5 களும் இவனுடன் சிநேகம் செய்து கப்பம் கட்டவும் உடன்பட்டனர். இவனை எதிர்த்துப் போர் புரிந்தவர் வெகு சிலரே யாவர்; அவர்களுள் ஒவ்வொருவனும் அடியோடு முறியடிக்கப் பட்டான். ஆகவே வீரநரசிம்மனது கீர்த்தி எங்கும் பரவியது. ஜனங்கள் அவனை ராஜ
10 பரமேசுவரனென்றும், மகாராஜாதி ராஜனென்றும்,

"மூருராயகண்டா" என்றும் பேரிட்டுக் கொண்டாடி னார்கள். தான் சென்ற மார்க்கத்திலிருந்த திவ்ய க்ஷேத்திரங்களுக் கெல்லாம் சென்று, அங்குள்ள கோ வில்களுக்கு மானியங்கள் விட்டுத் தக்கோர்களுக்கு பூதானம், சுவர்ணதானம் முதலியன புரிந்து, சுமார் 15
இரண்டு வருஷம் இவ்வாறு திக்விஜயம் செய்து பிறகு விஜய நகரம் திரும்பி வந்தனன். மேற்கூறியவாறு இவன் தரிசித்த க்ஷேத்திரங்கள் திருப்பதி, காஞ்சிபுரம், பக்ஷிதீர்த்தம், சிதம்பரம், கும்பகோணம், ஸ்ரீரங்கம், ஜம்புகேசுவரம், மதுரை, ராமேசுவரம், காளத்தி, 20
அகோபிலம், ஸ்ரீசைலம் முதலியனவாம். இவ்வூர்க் கோயில்களிலுள்ள சிலாசாஸனங்களினால் மேற்கூறிய விஷயங்கள் விசதமாகின்றன.

---

## XIX. வீரநரசிம்மனது உண்மை மனநிலை.

இவ்வாறு தென்னிந்தியாமுழுதும் தனது பேரும், கீர்த்தியும் விளங்கப்பெற்ற வீரநரசிம்மனைப் பெரி யோன் எனக்கூறுதல் நியாயமாயினும், சில விஷயங் களில் அவனுக்குப் பெருந்தன்மை யென்பதே யில்லா மல் போயிற்று. 5

> வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
> யதற்குரிய னாகச் செயல்

இதன்றோ அரசநீதி; இதையுணராது அவன் திம்மரசிடம் சதா சந்தேகங்கொண்டே ஒழுகினன். கிருஷ்ண தேவராயனிடம் உள்ள அன்புகாரணம் பற் றித் தனக்குப்பின் தன் குமாரனுக்கில்லாது அவனுக்கே திம்மரசு, பட்டம் கட்டுவிப்பர் என்ற ஐயுறவு இவன் 10
மனத்தை விட்டு அகலவேயில்லை. ஆதலின், எவ்வாறு

யினும் கிருஷ்ணதேவராயனைக் கொல்ல வேண்டுமென நினைந்து பற்பல சூழ்ச்சிகள் செய்தான். இதைத் தெரிந்து, தகுந்த உபாயங்களை அப்போதப்போது திம்
15 மாசு செய்து வந்தமையால் தேவராயன் உயிர் தப்பினன். ஆயினும்,

> உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
> னேதம் பலவுந் தரும்

அன்றோ! எப்பொழுது என்ன தீங்கு நேரிடுமோ என்று அஞ்சித் துஞ்சாது விழித்திருக்தல் கலங்கா நெஞ்சத்தார்க்கும் கடின மன்றோ! ஆதலின்
20 திம்மாசும் தேவராயனுக்கு யாதொரு தீதும் வாராத படி காக்கும் விஷயத்தில் மிக்க துன்பம் எய்தினர்.

---

## XX. வீரநரசிம்மனது மரணம்.

இவ்வாறு வீரநரசிம்மன் ஆறுவருஷகாலம் அரசாண்டுவந்தான். புதிதாகத் தான் தேசங்களை ஜயித்து அவைகளைத் தம் ராஜ்யத்தோடு சேர்க்கவில்லை யாயினும், ஏற்கெனவேயுள்ள ராஜ்யம் சிதறுண்ணுது
5 பார்த்துக்கொண்டான். அதுவே கஷ்ட சாத்தியமானது என்று நாம் மேற்கூறிய விஷயங்களினின்றும் விளங்கும்.

தனது மரணகாலம் கிட்டவே, வீரநரசிம்மனுக்குப் புதிதொரு சூழ்ச்சி மனத்துள் எழுந்தது. படுக்கை
10 யிலிருந்தபடியே திம்மரசை வருவித்து அவரிடம் பின் வருமாறு கூறினன்: 'அமைச்சரே! எனக்கு நிர்யாண காலம் வெகு சமீபத்தில் உளது. இதுகாறும் தங்களுடைய மதிநுட்பத்தாலும், ஆன்றமைந்த சொல்லாலும்,

ஆள் வினையாலுமன்றோ என்னாசை நிலைநிறுத்தினீர் கள். தங்களது தயவின்றேல் இப்பதம் எய்தியிருப் 15 பேனோ? இனியும் தங்களது துணையின்றி இவ்விராஜ் யம் என் சந்ததியார்க்கு நிலைக்குமோ? கத்திக்குக் கவ சம்போல என் தந்தையுடன் இடைவிடாது கூடிநின்று அவரது சுகதுக்கங்களை யெல்லாம் தங்களுடையன வாகப் பாவித்தொழுகிய தாங்கள், அவர் இறக்குந் 20 தறுவாயில் தனித்துரைத்த மொழியை மேற்கொண்டு, கிருஷ்ண தேவராயனிடம் கொண்டுள்ள வாஞ்சையை யும் மறந்து, என்னைச் சிங்காதனம் ஏற்றுவித்தனிர் அன்றோ? அவ்வாறே அவரது புதல்வனும் என்னி டத்தும் அன்பு பாராட்ட வேண்டுமென்றது எனது 25 இறுதி வேண்டுகோள்; என்மகன் திருமலை வெகு இளம் பிராயத்தினன். இப்பொழுது அவனுக்கு ஐந்தே வயது. தங்களது போஷிப்பிலிருந்து வளர்ந்தால் சீக்கி ரத்தில் அரசாளும் யோக்கியதையைப் பெறுவான் என் பதில் ஐயமில்லை. அவனிடம் தாங்கள் புத்திர வாஞ்சை 30 வைத்தல்வேண்டும். துணைநின்று அவனைக் காலத்தில் அரசனுக்கவும் வேண்டும். இவ்வெண்ணம் நிறை வேறுது செய்யக்கூடிய தடைகளையும் நீக்கவேண்டும்.

ஐய! இன்னும் ஒரு வேண்டுகோள் உளது; அதுவும் இவ்விஷயத்தை யொட்டியதே. எனக் 35 குப் பின், என் குமாரனுக்கு இடையூறு விளைக்கக் கூடியவன் இவ்விராஜ்யத்தில் ஒருவனேயாவன். அவ னும் தம்முடைய வசத்திலே இப்போதுள்ளான். அவ னுக்கு ராஜ்யம் சித்திப்பது சாத்தியமன்று என்ற தைரியம் ஏற்படின் என்மனம் அமைதியடையும். 40 விசாரமின்றி நான் உயிர் நீங்குவேன்.

அவ்வொருவன் கிருஷ்ண தேவராயனே யாவன். அவன் அரசாளும் திறமையுடன் இருக்கும்வரை என் மகனுக்கு ஆபத்துண்டு. யானைக்கும் அடிசறுக்கு 45 மன்றோ! எனக்குப்பின் இந்த ராஜ்யத்தில் தங்களுக்குச் செலுகை குறையலாம். அப்போது என்னதான் நேரிடலாகாது? ஆதலின் நான் உயிருடனிருந்து, தங்கள் செல்வாக் கிருக்கும்போதே அவ்வபாயத்தை நீக்கிக்கொளல் வேண்டும். தாங்கள் தகுந்த யுக்தி 50 செய்து கிருஷ்ண தேவராயனது இருகண்களையும் அவித்துவிடல் வேண்டும். பிடுங்கிய கண்களைப் பார்த்தா லல்லாது என் ஆவி இவ்வுடலை விட்டு நீங்காது. இப்பேருதவியைத் தாங்கள் எனக்குச் செய்யத்தான் வேண்டும்'.

55 கனவிலும்கூட எதிர்பாராத இம் மொழிகளைக் கேட்டுத் திம்மரசு திடுக்கிட்டு உள்ளங் கலங்கினார். ஆறாத் துயருற்ற விடத்து மதி விளக்கம் மாயமாய்ப் பறக்கு மன்றோ? ஆதலின் அரசருடைய வேண்டுகோளுக்குப் பதில் ஒன்றும் சொல்லத் தோன்றாது 60 சற்றுத் திகைத்தார். சில நிமிஷங்களுக்குள் மனவமைதி அடைந்து பிரகாசம் பொருந்திய முகத்துடன் அரசரை நோக்கி, 'ஐயா! அஞ்சற்க. நிர்யாணகாலத்துத் தாங்கள் அளிக்கும் ஆக்கினைக்கு வேறு கூறுதலும் உண்டோ! தங்கள் உள்ளப்படியே ஆகுக. 65 சீக்கிரத்தில் கிருஷ்ண தேவராயனது இருகண்களையும் கொணர்வித்து இங்கே போடுவேன், எனச்சொல்லி வெளியே சென்றார்.

உடனே ரகசியமாய் ஒரு நம்பிக்கை வாய்ந்த வேலைக்காரனையழைத்துச் 'சீக்கிரமாய் ஒரு வெள்ளாட்

டைக்கொன்று, அதன் கண்களைத் தனியே பிடுங்கி 70
அவைகளை இங்கே கொண்டுவா' என உத்தரவிட்டார்.
அவனும் அவ்வாறே செய்ய, கண்களைக் கொண்டு
போய் வீரநரசிம்மனிடம் காண்பிக்க அவன் சந்தோஷ
முற்றவனாய் உயிர்நீங்கினன்.

பிறகு திம்மாசு, கிருஷ்ண தேவராயனை வரச் 75
செய்து, நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் அவ
னுக்குரைத்து, 'இனி கொஞ்ச நாளைக்கு நீ என் கிரு
கத்திலேயே மறைவில் இரு' என வேண்ட, தேவராய
னும் அப்பாஜியின் அடிவணங்கி, அவர் தனக்குச்செய்த
பரோபகாரத்துக்கு வியந்து, யாதொன்றும் சொல்லத் 80
தோன்றாதவனாய் அவர் செப்பிய வண்ணமே அவர்
கிருகத்தில் இருந்தான்.

1509-ஆம் வருஷத்தின் ஆரம்பத்தில் வீரநரசிம்
மன் தென்னுலகம் அடைந்தான்.

---

## XXI கிருஷ்ணதேவராயரது பட்டாபிஷேகம்.

தாம் எற்கெனவே யெண்ணி யிருந்தவிதமே கிரு
ஷ்ணதேவனை அரசாக்கத் திம்மாசு தீர்மானித்தனர்.
விஜய நகரத்துள்ள பிரமுகர்களும் இதை ஆமோதித்
தார்கள். ஸாம்ராஜ்ய சிற்றரசர்களும் கேட்டு மனம்
உவந்தார்கள். இதைப்பொறாத சிலமதியீனர்கள் உண் 5
டெனினும் அவர்கள் திம்மாசுக்குப்பயந்து சும்மாவிருந்
தனர். 1509-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் 4-ஆம்
தேதிக்குச் சரியான சுக்லநாம ஸம்வத்ஸரம் மாகமாஸம்
சுத்தம் சதுர்த்தசி சுபதினத்தன்று பட்டாபிஷேக
மஹோற்சவம் நடைபெறுமென்றும், யாவரும் வந்து 10
வைபவத்தைக் கண்டு களிக்க வேண்டுமென்றும், பிர

தான நகரத்தில் பறையறைவித்து அயலார் மன்னர்
களுக்கும், சிற்றரசர்களுக்கும், இதர சிரேஷ்டர்களுக்
கும் பத்திரிகைகள் அனுப்பப்பட்டன.

15 பட்டாபிஷேக மகோற்சவத்தன்று விஜயநகரம்
இருந்த கோலத்தை வர்ணித்தல் சுலபமன்று. நான்கு
பக்கங்களிலும் செவ்வனே அலங்கரிக்கப்பெற்று விஜய
நகரம் வாசவனது நகரமென விளங்கிற்று. விசாலமான
ராஜவீதிகளெல்லாம், தண்ணீர் தெளிக்கப்பெற்று எங்
20 கும் மலர்கள் இறைக்கப்பட்டிருந்தன. மாடமாளிகை
களின் மீதும், கூடகோபுரங்கள் மீதும், ஆலயங்களி
லும், மண்டபங்களிலும், கோட்டையின்மீதும், கடைத்
தெருக்களிலும் பற்பல வர்ணங்களமைந்த விசித்திர
மான கொடிகளும், பதாகைகளும் பறந்தன. ஒவ்வொரு
25 வீட்டு வாசலிலும், திண்ணையிலும் கோலமிட்டு, வாசற்
படியில் தோரணங்கட்டி, மஞ்சட்பொட்டும், குங்குமப்
பொட்டும் இட்டு, ஸ்திரீகள் அலங்காரம் செய்திருந்
தனர். வீதிகளில் ஆங்காங்கு, குறுக்கே மலர்த் தோர
ணங்களும், இலைத் தோரணங்களும் உயர்ந்து தொங்
30 கின. ஆடவர், பெண்டிர், குழந்தைகள் யாவரும் சிறந்த
அணிகள் அணிந்து, உயர்ந்த ஆடைகளுடுத்து அங்
கங்கே தெருக்களிலும், திண்ணைகளிலும், உபரிகைகள்
மீதும் கூட்டமாய் நின்று, கிருஷ்ண தேவராயனது
அதிருஷ்டத்தையும், திம்மரசின் சாமர்த்தியத்தையும்
35 குறித்துப் பேசிக் கொண்டிருந்தனர்.

அரண்மனையின் வைபவத்தை விவரித்துக் கூற
முடியுமோ! எங்கு நோக்கினும் தங்கமயமான காட்
சியேயன்றி வேறில்லை. ஆயுதசாலைகளும், அரங்க
மேடைகளும், நாடக மண்டபங்களும், பகற்போது

போக்கிடங்களும், சிலம்பக் கூடங்களும், சித்திரசாலை 40
களும் கொடித் தம்பங்கள் மிகுந்து, அநேக அருங்கல
னிருக்கை செறிந்து சிற்பியர்கள்செய்த தொழில்களின்
அழகு வாய்ந்து விளங்கின. பூப்பந்தர்கள், மலர்த்
தோரணங்களும், மணித்தோரணங்களும், குலைவாழை
களும், கமுகுக் குலைகளும், தென்னங் கூந்தல்களும், 45
மாவிலைக் கொத்துக்களும் செறிந்து அங்கங்கே கமழ்ந்
தன.

அரசனது கொலுமண்டபம் மிகவும் அழகாய்
அலங்கரிக்கப் பட்டிருந்தது. கொடித் தம்பங்களெல்
லாம் இரத்தினங்கள் நிறைந்து விளங்கின. சுவர்களோ 50
அகன்று நீண்டெழுந்த கண்ணாடிகளால் செறிக்கப்
பட்டுத் திகழ்ந்தன. தரையும் நானா வர்ணங்க ளமைந்த
பளிங்குக் கற்களால் அமைக்கப்பட்டுப் பற்பல சித்திர
உருவங்கள் பொறிந்து இலங்கியது. மண்டபத்தின்
நடுவில், 55

"மாணிக்கப் பலகை தைத்து வயிரத் திண்கால்கள் சேர்த்தி
அணிப்பொன் சுற்று முச்சி யழகுறச் சமைத்த பீடம்"

என்று வர்ணிக்கத்தகும் உயர்ந்த சிம்மாசனம்
ஜிலுஜிலு வென்று பிரகாசித்தது. அதற்குப் பின்னும்
இருபக்கங்களிலும், தங்கத்தாலும், வெள்ளியாலும்
இயற்றப்பெற்ற நாற்காலிகள் வரிசையாகப் போடப்
பட்டிருந்தன. அந்தப் புரத்தினின்றும் மண்டபத்துக் 60
குச் செல்லும் மார்க்கம், வரிசை வரிசையாக வகுக்கப்
பட்டுத் தகுந்த கலனணிந்து, ஆயுதமேந்தி யிலங்கும்
படைகளால் மிகுதியும் நிறைந்திருந்தது. வாத்தியம்
வாசிப்பவர் ஒரு புறமும், அரசரைத் துதித்துப் பாடு

65 வோர் ஒரு புறமும், நடனஸ்திரிகள் ஒருபுறமும், வேத பிராமணர்களும் பௌராணிகர்களும் மற்றோர் புறமும் நின்று, முறையே வாத்திய கோஷங்களும் துதிபாடல் களும், கேளிக்கைகளும், வேதபுராண படனங்களும் செய்து வந்தனர். பட்டாபிஷேக சமயம்கிட்டவே,கிரு
70 ஷ்ணதேவராயனைக் கௌரவப்படுத்துவதற் கென்றே விஜயம் செய்துள்ள கண்டிகோட்டா, ஸ்ரீரங்கப் பட்ட ணம், நந்தியால், ஆகுவிடு, கோசர்லகோட்டா முதலிய தேசத்து மன்னர்களும், ஸாம்ராஜ்யத்துள்ள சிற்றர சர்களும், மந்திரி, பிரதானி தளகர்த்தரும், இதர பிரபு
75 சிரேஷ்டர்களும் ஒருங்கே வந்து தங்கள் தங்கள் ஆச னங்களில் அமர்ந்தனர்.

கிருஷ்ணதேவராயனும், அன்று காலையில் வெகு சீக்கிரமே எழுந்து, ஸ்நானம் செய்து வெண் பட்டு உடுத்திக் கோயில் சென்று,தேவபெருமானை வணங்கிக்
80 கிரமப்படி பூஜைசெய்வித்து, 'இறைவ! இன்று நான் பெறவிருக்கும் ராஜ்யத்தைச் செவ்வனே ஆண்டு, தீதி லாது ஒழுகி, மட்டிலாமாட்சியை நானும் பெற்று, நோயிலாவாழ்க்கையும்,தட்டிலாச்சுகமும், பிரஜைகளும் பெருமாறு அருள் புரிக' என மீண்டும் மீண்டும்
85 பிரார்த்தித்தனன். பிறகு தன் மாளிகைக்கு வந்து, அறு சுவையன்னம் உண்டு, அருங்கலனணிந்து, கதிரவன் ஒளிபோல் இலங்கும் திவ்ய ஆடையுடுத்து ஆஸ்தான மண்டபத்துக்கு எகச் சித்தமாயினன்.

புறப்படுந் தறுவாயில் திம்மரசு கிருஷ்ணதேவரா
90 யனிடம் வந்தார். வந்ததும், 'ஐய! சற்று ஏகாந்தமாய் இவ்வறையில் இருப்போம், வாரீர்' எனவே இருவரும் அங்கேசென்றனர்.போனதும்,திம்மரசு தேவராயனது

கன்னத்தில் 'பளீர்' என ஓர் அறை கொடுத்தார். பிறகு, கொஞ்சம் பின்வாங்கித் தலைகுனிந்து சும்மா நின்றனர். தேவாராயனும் ஒன்றுந் தெரியாதவனாய்த் தானும் தலை 100 குனிந்து நின்றனன். சில நிமிஷங்களாயினபின் திம்மரசு, 'ஐய! என்மீது கோபமோ?' என வினவ, கிருஷ்ண தேவாராயன்,

"ஐயநீரென்னிடங் கொண்டருளன்பினை
எங்ஙனம் செப்புவேன் எங்ஙனம் போற்றுவேன்
திங்களிற் குளிர்ந்து திகழ்ந்தருள் நோக்கும்
அருளும் பொறையும் அளவிலா நட்பமும்
ஆன்ற வறிவும் அரும்பெறற் றிட்பமும்
எய்திய நின்றுணை யின்றேல் நானும்
எவ்வா றுய்வேன் எவ்வா றுய்வேன்
பாருக் கொருவனாய்ப் பகருமென் றந்தை
ஓர்ந்தே யன்றோ வென்னை யும்மிடம்
தஞ்சமென் றிருத்தித் தானும் போந்தனன்
தாயும் நீரே தந்தையும் நீரென்
றென்றே நம்பா வினிதா யொழுகின்
சிறப்பே யன்றிச் சிறிதோர் குறையும்
வாரா தெனவே வன்மைகொள் மனத்தேன்
ஓரா தப்பா ஜியைப்பழி யுரைப்பனோ
ஏதோ வென்மதிக் கெட்டிலா மர்மம்
இக்கா ரியத்தினி லியைந்தே யுளதால்
இதிலே யையம் எனக்குச் சிறிதுமில்
அதையு மெனக்கினி யறிவிப் பீரே
என்னுயிர்க் குயிரே எந்தையப் பாஜியே."

என்றான்.

திம்மரசு சந்தோஷ முற்றவராய்ப் புன்முறுவலுடன், ஆம், இதில் ஓர் ரகஸியமுளது என்பது உண் 105 மையே. அதை விவரிப்பேன் கேளும். தாங்கள் செல்வத்தில் வளர்ந்தசேய்; என்றும் சுகமே அனுபவித்தவர்; வறுமை என்பதே தெரியாதவர். கஷ்டத்தின் கொடு

மையும், தேக தண்டனையின் குரூரமும் அறியாதவர்.
110 ஆயினும் இன்று ராஜ்யாதிகாரம் எய்தியபின், நீதி செலுத்து முறையில் ஆயிரக்கணக்கான பேர்கள் குற்ற வாளிகளாய் உங்களிடம் வருவர். அப்போது அக்குற்ற வாளிகளிடம் நீங்கள் தண்டோபாயம் செலுத்தநேரிடும். தண்டனை எத்தன்மையது என்றே அறியீராயின் குற்
115 றத்துக்கு மிகுந்த தண்டனை விதிக்க நேரிடலாம். ஆத லின் தண்டனையால்வரும் தேக கஷ்டமும் மனத்துயரும் எது போலிருக்கும் என சுய அனுபவத்தில் உங்களுக் குத் தெரியவேண்டுமென்றே இக்காரியம் செய்தேன்.

"கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரான் டேய்க்கு மரம்."

அன்றோ?' என்று உரைத்தார். இதைக்கேட்டுத்
120 தேவராயனும் சந்தோஷம் மிகுந்து அமைச்சரை வணங்கி, 'ஐய! இவ்வாறே என்னை எப்போதும் காத்த ருள்க' என வேண்டினன்.

பிறகு இருவரும் வெளியே வந்தார்கள். வெகு அழகாய்ச் சித்திரித்த அம்பாரியுடன் விளங்கிய பெரிய
125 தோர் கஜத்தின்மீது தேவராயன் அமர்ந்தான். அதற் குப்பின் நின்ற மற்றொரு யானையின்மீது திம்மரசு ஏறிக் கொண்டார். சங்கு, தாரை, தம்பட்டம் முதலிய போர் இசைக் கருவிகளும், வீணை, மிருதங்கம் முதலிய இன் னிசைக் கருவிகளும், மற்றுமுள்ள வாத்தியங்களும்
130 கோஷிக்க, 'ஜய, விஜயீபவ' என்று எங்கும் குழுமிய ஜனங்கள் ஆரவாரிக்க, கடல்போல் ஒலிக்கும் ராஜவீதி மார்க்கமாய் இனிதே பவனிவந்து, அரண்மனை புகுந்து சபா மண்டபம் சேர்ந்தனர். பிறகு குறித்த சுபமுகூர்த் தத்தில்,

"மங்கல கீதம் பாட மறையொலி முழங்க வல்வாய்ச்
சங்கினங் குமுறப் பாண்டி றண்ணுமை யொலிப்பத்
பொங்குபல் லியங்க ளார்ப்பப் பூமழை பொழிய" [தாவில்
தேவராயன் மகுடம் தரித்தான்.

---

## XXII திம்மரசின் காருண்யம்.

வீரநரசிம்மன் இறந்ததும் திம்மரசு, கிருஷ்ண
தேவராயன் பட்டத்துக்கு வரவேண்டியதை முன்
னிட்டு வீரநரசிம்மனது புதல்வனையும், கிருஷ்ணதேவ
ராயனது தம்பிகள் இருவர்களையும் சிறைசெய்வித்தனர்.
பிறகு தேவராயன், சிம்மாசனமேறிச் சிலகாலம் ஆன 5
தும் ஒருநாள் திம்மரசு அரசனிடம் சென்று, 'ஐய! நம்
ராஜ்யத்தில் இப்போது சமாதானமே அமைந்துள்ளது.
உட்கலகங்கள் ஏதேனும் விளையுமோ என்று அஞ்ச
இடமில்லை. தாங்கள் பட்டத்துக்கு வரக்கூடாது என்
றெண்ணங் கொண்டவர்களும், இப்போது தங்களது 10
பராக்கிரமத்தையும், உதார குணத்தையும் அறிந்து
கொண்டு பூர்வம் உள்ள மதியீனத்தைப் போக்கிக்
கொண்டனர். ஆதலின் சிறையிலிருக்கும் தங்கள் தமை
யன் குமாரனையும், தங்கள் தம்பிகளையும் சிறையினின்
றும் விடுவிக்கலாம் எனத் தோன்றுகிறது. 'கருமஞ் 15
சிதையாமற் கண்ணோடல்' அரசரின் முக்கிய தரும
மன்றோ! அவர்களைச் சிறையினின்றும் நீக்கிச் சந்திர
கிரிக்கு அனுப்பி, அங்கே அவர்கள் ஒவ்வொருவருக்
குஞ் சில கிராமங்களைத் தந்து, சொல்ப சேனையையும்
அவர்கள் வசம் வைத்துச் சுகமே காலம் கழிக்கச் செய் 20
வதே நலம்' என்றார். கிருஷ்ண தேவராயன் இவ்வபிப்
பிராயத்தை உடனே அங்கீகரித்தனன். அவ்வாறே
திம்மரசு அவர்களை விடுவித்து, சந்திரகிரிக்கு அனுப்பி
அவர்கள் அங்கே விசாரமின்றிக் காலக்ஷேபம் செய்வ
தற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்தார். 25

## XXIII திம்மரசின் நிபுணத்துவம்.

தம் தந்தையின் வழியைக் கடைப் பிடித்துத் தென்னிந்தியா முழுவதையுமே ஒரு குடையின்கீழ்க் கொணர்தல் வேண்டும் என்பதே கிருஷ்ணதேவராயரது முக்கிய நோக்கம். இதுவிஷயமாய் ஆலோசித்த காலத்து திம்மரசு, 'ஐய! அவசரப்படற்க. தம் வலியுணராது போர் செய்து எதிரிவசப்பட்டு மடிந்தவர் பலர் உளர்.

"உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்."

நாம் அத்தகைய குற்றம் செய்தல் கூடாது. மேலும் நம்மிடம் அதற்கு வேண்டிய படை வலிமையில்லை. திரவியமும் இல்லை. இவ்விரண்டு சாதனங்களைத் தேடிச் சேகரித்த பிறகே போர் முயற்சி இயற்றல் தகும். அவ்வாறு செய்யச் சுமார் இரண்டு வருஷங்களேனும் ஆகும் என்பது என் எண்ணம். அதுவரையில் சும்மா இருத்தலே நலம். படை சேர்ப்பதிலேயே நம் கவனம் முழுவதையும் செலுத்துவோம்' என்று சொல்ல தேவராயரும் ஒப்புக் கொண்டார்.

இக்காலத்தில் ஸாம்ராஜ்ய சிற்றரசர்களில் பெரும்பாலார் தேவராயரிடம் அன்பும், விசுவாசமும் பூண்டொழுகினராயினும், அவர்களுள் பிரமுகர்கள் சிலர், எதிரி மன்னர்களுடன் உறவாடி ஸாம்ராஜ்யத்தைச் சிதறச் செய்யச் சூழ்ச்சி செய்து வந்தனர். இதற்கென்றே சிற்சில பிரயத்தனங்களும் நடந்துவந்தன. தேவராயர் இதை ஒரு சமயம் கேள்வியுற்றார். அச்சமயத்தில் திம்மரசு அவருக்கு அருகில் இல்லை. ஆதலின் சில சேவகர்களை அனுப்பி அவரை உடனே தம்மிடம்

அழைத்துவா எவினர். சேவகர்கள் சென்ற காலத்துத் திம்மரசு தேவபூஜையில் இருந்தனர்; அரசர் வரச் சொன்னர் என்றுகேட்டவுடன் பதில் ஒன்றும் கூருது சரேலென்று எழுந்து கொல்லைப்பக்கம் சென்றுர். சேவகர்களும் பின் தொடர்ந்தனர். அங்கே கீரைப்பாத்தி 30 ஒன்றிருந்தது; அமைச்சர் அப்பாத்தியில் உயரமாய்ப் பருத்துக் கிளம்பியிருந்த தண்டுகளை யெல்லாம் பிடுங்கி எறிந்து விட்டு, மிகுதியா யிருந்தவற்றுக்குச் செவ்வனே நீர்பாய்ச்சினர். அரசர், தமது வரவை எதிர் பார்த்துள்ளார் என்ற எண்ணம் இல்லாதது போலவே 35 அவ்வேலையைச் செய்துவந்தனர். வெகு நேரமாயும் அவர் புறப்படுவதாகத் தோன்றவில்லை. இதைப் பார்த்த சேவகர்கள் ஒன்றும் சொல்லத் தோன்றுதவர்களாய் இனிக் காலதாமதம் செய்யின் அரசர் கோபங்கொள் வார் என்று பயந்து அவரிடம் ஓடித் திம்மரசு கிருகத் 40 தில் நடந்த விருத்தாந்தங்களைச் சொன்னர்கள். புத்தி நுட்பம் வாய்ந்த மன்னரும் தம் அமைச்சரின் உட் கருத்தைத் தெரிந்துகொண்டனர். பிறகு திம்மரசு குறிப்பித்தவண்ணமே தம்மிடம் விசுவாசமின்றி ஒழு கிய சிற்றரசப் பிரமுகர்களை உடனே அதிகாரத்தி 45 னின்று நீக்கி அவர்களுக்குப் பதிலாகத் தமக்கு நம் பிக்கை வாய்ந்த வேறு சிலரை நியமித்தார்.

இக்காலத்தில் ஸாம்ராஜ்ய மன்னருக்கு இருந்த படைவலி இருதன்மையது. விஜயநகரத்திலேயே அரசரது முக்கிய தளகர்த்தாது மேற்பார்வையில் உள்ளது 50 ஒருசேனை. அஃதன்றி, அவசரம் நேர்ந்தகாலத்துச் சிற் றரசர்களால் அனுப்பப்பட்டது மற்ருெருசேனை. சிற்ற ரசர்களுக்கு இக்காலத்தில் நாயக்கர்கள் என்று பேர்.

இவர்கள் இருவகைப்பட்டவர்கள்; தமக்குட்பட்டமாகா
55 ணத்தில் கிரமப்படி வரியை வசூல்செய்து அதில் ஒரு
பாகத்தைத் தமக்குச் சம்பளமாக வைத்துக்கொண்டு,
பாக்கியை 'ஹொரு'ருக்கு அனுப்பியவர் ஒருசாரார்.
மற்றொருசாரார், அவ்விதம் செய்யாது, தம்மாகாணத்
தில் தாமே எல்லா அதிகாரங்களும் செலுத்தி, ஸாம்
60 ராஜ்யமன்னருக்கு அவசியமான காலத்துக்கு வேண்டிய
சேனாபலத்தைத் தந்து அச்சேனையைப் போஷிக்க
வேண்டிய திரவியத்தையும் கொடுத்து வந்தனர். பிற்
கூறிய நாயக்கர்களுக்கு 'அமர நாயக்கர்கள்' என்று
பெயர். இவர்கள் வம்சபரம்பரையாய்த் தம் மாகாணங்
65 களை ஆண்டுவந்தனர். சூட்சும தரிசியான திம்மரசு,
ஸாம்ராஜ்ய மன்னர் தமக்குவேண்டிய சேனாபலத்துக்கு
அமர நாய்க்கர்களது கை பார்த்து நிற்க வேண்டியிருக்
குங் காலம் வரையில் ஸாம்ராஜ்யத்துக்கு பலக்குறைவு
நிச்சயமே எனத்தெளிந்தார். இதை அரசரிடம் தெரி
70 வித்து அம்முறையை மாற்றினர். 'இனி அமரநாயக்கர்
கள் நமக்கெனச் சேனையைத் தத்தம் மாகாணங்களில்
வைத்திருக்க வேண்டாம். ஸாம்ராஜ்யத்துக்கு வேண்
டிய சேனையை நாமே சேகரித்துக் கொள்ளுவோம்.
அதிகப்படிச் சேனையைப் போஷிப்பதற்கு வேண்டிய
75 திரவியத்தை அமர நாயக்கர்கள் தத்தம் விகிதாசாரப்
படி கொடுக்கவேண்டும்' எனத் தேவராயர் அமரநாயக்
கர்களுக்கு ஸ்ரீமுகம் அனுப்பினர். அவ்வாறே அமர
நாயக்கர்களும் ஒப்புக்கொள்ள, அவர்களிடம் இருந்த
சேனைகளை யெல்லாம் விஜயநகரத்துக்குத் தருவித்து,
80 அவைகளை ராயர் தம் மேற்பார்வையிலேயே வைத்
துக் கொண்டார். பிறகு திம்மரசு வெகு விரைவில்

சேனையின் பலத்தைப் பெருக்கினர். அது காரணமாகப் பத்துலட்சம் காலாட்படையும், முப்பத்தினுயிரம் குதிரைப்படையும், எண்ணூறு யானைப்படையும் சித்தமாயின. இவைகளுக் கெல்லாம் தலைவர் கிருஷ்ண 85 தேவராயரே, படை, வலிமை குன்று திருக்குமாறு அடிக்கடி பழக்கப்பட்டது. அதுவு மன்றிப் பிரதி வருஷமும், விஜயதசமி காலத்தில் பந்தயங்கள் பல ஏற்படுத்தி, ஜயித்த போர்வீரர்களுக்கு வெகு உயர்ந்த பல பரிசுகளும் கொடுத்துவந்தார். 90

---

## XXIV கிருஷ்ணதேவராயரது வித்யாபிமானம்.

பாலபருவத்திலேயே ராயர் வெகு சிரத்தையுடன் வித்தியாப்பியாசம் செய்துவந்தார் என முன்னரே கூறியுள்ளோம். ஆனதனுல் இவருக்கு ஆந்திர ஸம்ஸ்கிருத பாஷைகளில் மிகுந்த பிரியம் உண்டு. அப்பாஷைகளில் தேர்ச்சி பெற்ற கவிகளையும், மற்றுமுள்ள 5 வித்வான்களையும் மிகவும் ஆதரித்தனர். அவ்வாறு போஷிக்கப்பட்டவர்களுள் முக்கியமானவர்கள், அல்லசானி பெத்தன்னு, நந்தி திம்மன்னு என்ற இருவர்கள். அவர்கள் கவித்திறமை வாய்ந்தவர்களா யிருந்தது மன்றி ராஜ்ய வியவகாரங்களிலும் விசேஷ ஞானம் 10 பொருந்தியவர்கள். ஆகையால் அவர்களை ராயர் சிறு மாகாணங்களை ஆண்டுவரும்படி நியமித்து மண்டலாதிகாரிகள் எனப்பெயரும் சூட்டினர். அன்றியும், கவி பெத்தன்னுவுக்கு 'ஆந்திரகவிதா பிதாமகர்' என்ற பிருதையும் அளித்தனர். தாமே கவி இயற்றும் சாமர்த்தி 15 யம் வாய்ந்தவராதலின் தம்மை நாடி ஆஸ்தானத்துக்கு வரும் வித்வான்களது கவித்திறத்தை வெகு எளிதில்

ராயர் தெரிந்துகொண்டார். அவரவர்களுக்குத் தகுந்தவாறு ஸர்வமானியங்களும், இநாமபரிசுகளும் அளித்
20 தனர். சுருங்கச்சொல்லின், இவரது ஆஸ்தான மண்டபம். பூர்வம் காளிதாஸர் முதலிய கவிசிரேஷ்டர்களால் அலங்கரிக்கப்பெற்ற போஜராஜரது சபைபோல் விளங்கிற்று. ராயர், தாமே 'ஆமுக்தமால்யதா' என்ற கிரந்தத்தை இயற்றியதுமன்றிப் பாலபாரதம் என்ற
25 கிரந்தத்துக்கு வியாக்கியானமும் எழுதியுள்ளார்.

ராயருக்குச் சொக்கட்டான் ஆடுவதில் மிக ஆசையுண்டு. பொழுது போக்கு நேரங்களில் இவ்விளையாட்டையே அவர் கைக்கொள்வார். இதில் நிபுணரான பொட்டுச்சேர்லதிம்ம என்றவரைத் தம் பக்கத்தில்
30 எப்போதும் இருக்கச்செய்தார். அந்தத் திம்மர் சொக்கட்டான் ஆடுவதில் அஸஹாயசூரர். எத்தனைபேர் தமக்கு எதிர் கட்சியில் நின்று ஆடினாலும், அவர்கள் யாவரையும் வெகு சுலபமாய்த் தோல்வியடையச் செய்வர். அவரது சாமர்த்தியத்தை மெச்சி அவருக்கு
35 ராயர் ஓர் கிராமத்தை மானியமாக அளித்து அக் கிராமத்துக்குக் கிருஷ்ண தேவாராயபுரம் எனப் பெயரும் இட்டனர்.

ஒருசமயம் ராயரது பேட்டி காண, பட்டுமூர்த்தி என்ற க்ஷத்திரிய கவி வந்தனர். எக்காரணம் பற்றியோ
40 அவருக்குச் சரியாய் அரசரது தரிசனம் கிடைக்கவில்லை. இதனால் பட்டுமூர்த்தி மிகக் கோபங்கொண்டவராகி அரண்மனை அதிகாரிகள் பலரையும், அவர்களுள் முக்கியமாய் மந்திரி திம்மாசையும் வெகுவாய் நிந்தித்தனர். மற்றோர் சமயத்தில் ராயரையே நேரில்
45 கண்டு தம் குறைகளை அவரிடம் சொல்ல, அவர் நான்

வேண்டுமென்று உம்மை அவமதிக்கவே இல்லை; வீணே கோபம் வேண்டாம் என்று உரைத்தனர். ஆதலின் திம்மரசே தம் அவமானத்துக்குக் காரணமாயிருத்தல் வேண்டுமென்று நினைத்து, அவருக்கு எதிரிலேயே,

> *தந்தையை யிழந்து தாயு மிழந்து*
> *சந்திர கிரியிற் சந்தியி னின்றும்*
> *குத்திக் கப்பா லேகியு மாங்கே*
> *தத்தளிப் புடனே தாங்கியு மதுகாம்*
> *பெனுகொண் டாவிற் பிச்சை யெடுத்தும்*
> *அரசர் பலர்பல ரடிகளில் வீழ்ந்து*
> *தாம்பூல வட்டிலுந் தாங்கி யவர்க்கே*
> *ஏதேதோ பலதொழிலு மியற்றிய*
> *திம்மா சும்....................*

என்று பொருள்படும்படி ஆந்திரத்தில் ஒரு கவியைப் பாட, திம்மாசு அப்பாட்டு முடியுமுன்னரே தனது கழுத்திலிருந்த முத்துமாலையை யெடுத்துப் பட்டு மூர்த்தி கழுத்தில் போட, அக்கவி அகமகிழ்ந்து, முக மலர்ந்து, கைகூப்பி, 50

> *.................வெகு மாண்பினிற் றேறித்*
> *தஞ்ச மடைந்தவர் தவிப்பற வுதவிப்*
> *பூமியை யாளும் பாக்கியம் பூண்டு*
> *பாருக் கொருவனுப் படைத்தனன் புகழே.*

என்று பாடி அச்செய்யுளை முடித்தனர். 55

---

## XXV ராயரது வெற்றிகள்.

வீரநரசிம்மன் காலத்திலேயே ராயர் ஒரு சேனையுடன் மைசூர் பிராந்தத்துக்குச் சென்று, பல சிற்றரசர்களை முறியடித்து, அவர்களைக் கப்பம் கட்டுமாறு செய்வித்தனர் என்று முன்னரே கூறியுள்ளோம்; தாம்

5 பட்டத்துக்கு வந்து சிலகாலமானதும் திம்மரசு, விஜயப்ப நாயக்கர், வேங்கடப்ப நாயக்கர், கிருஷ்ணப்ப நாயக்கர் என்ற மூன்று தளகர்த்தர்களையும் தகுந்த சேனுபலத்துடன் தென்தேசத்துக்கு அனுப்பி, அங்குள்ள அரசர்களை ஸாம்ராஜ்யத்துக்கு உட்பட்டுக்
10 கப்பம் கட்டுவிக்குமாறு செய்ய அனுப்பினர். ஒரு லட்சம் போர்வீரர்கொண்ட சேனையுடன் விஜயப்ப நாயக்கர்சென்று, வேலூர் பிராந்தத்திலுள்ள ஊர்களைப் பிடித்து, அவ்வாறு ஏற்பட்ட மாகாணத்துக்கு வேலூரையே பிரதான பட்டணமாகச் செய்து தாமே அங்
15 குச் சிற்றரசராய் ஆட்சிசெய்து வந்தனர்; அவ்விதமே சிற்றூர், தொண்டை மண்டலம், தஞ்சாவூர், திரிசிராப்பள்ளி, மதுரை, திருநகரி குடகு, மலையாளம் இவ்விடங்களிலுள்ள சிற்றரசர்கள் தாங்கள் ஸாம்ராஜ்யத்துக்கு உட்பட்டுக் கப்பம் கட்டுவதாக
20 ஒப்புக் கொண்டனர். தென்னிந்தியாவை மூன்று பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்திலும் தமது பிரதிநிதிகளை நியமித்தார். நெல்லூர் முதல் கொள்ளிடம் வரையிலுள்ள பிரதேசத்தில் செஞ்சியை முக்கிய பட்டணமாகக்கொண்டு கிருஷ்ணப்ப நாயக்கரும், வளம்
25 மிகு காவிரி பாயும் நாட்டில் விஜயராகவ நாயக்கரும், குடகுமலையாளம்சேர்ந்த தேசத்தில் வேங்கடப்பநாயக்கரும் ராஜப்பிரதிநிதிகளாய் ஆண்டு வந்தனர். ஆகவே கர்நாடக திராவிடதேசங்கள் முழுதும் கிருஷ்ணதேவராயரது செங்கோல் முறைக்குட் பட்டவையாயின.

## XXVI. போர் முயற்சிகள்.

ஆயினும் கிருஷ்ண தேவராயரும் திம்மரசும், ஆதி முதல் கொண்டுள்ள முக்கியநோக்கம் இன்னும் நிறைவேறவில்லை. ஏனெனில் ஸாம்ராஜ்பத்து எல்லையிலுள்ள ரேய்ச்சூர், முதிகல்லு கோட்டைகள் இன்னும் பீஜப்பூர் சுல்தான் வசத்திலேயே இருந்தன. அன்றியும் கிழக்கில் உதயகிரி பிராந்தத்தில் கஜபதி ராஜனான பிரதாபருத்திரனும் அட்டஹாஸம் செய்துகொண்டிருந்தனன். இவர்களை முறியடித்து, கிருஷ்ணாநதிக்குத் தெற்கில் வேற்றரசர் இராதபடி செய்தநாளில் அன்றோ இவர்களது சங்கல்பம் நிறைவேறியதெனக் கூறலாம். 10

அக்காலமும் விரைவில் வந்தது. முன்பு தாம் கூறிய வண்ணமே ராயர் சிம்மாசனம் ஏறி இரண்டு வருஷங்களுக்குள் தகுந்த சேனையைத் திம்மரசு சேகரித்தனர். பத்துலட்சம்காலாட்படையும் முப்பதினாயிரம்குதிரைப் படையும் அதற்கேற்ற யானைப்படையும் சித்தமாயின. 15 அவசியம் நேர்ந்தகாலத்து மற்றொரு பத்து லட்சம் சேனையைச் சேர்க்க இடமும் இருந்தது. இனிக் காலதாமதம் வேண்டாம் எனத்தெளிந்து, திம்மரசு, ராயரிடஞ்சென்று, 'அரசே! தாங்கள் இனிப் போர் முயற்சியை மேற்கொள்ளலாம்; தேர்ந்தெடுத்த போர் வீ 20 ரும், தளகர்த்தரும் வாய்ந்த நம்சேனை எவராலும் முறியடிக்கக் கூடியதன்று. ஆகவே தாங்கள் தலைமைபூண்டு இச்சேனையைப் போர்க்களத்தில் நிறுத்தி, மாற்றலர் மன்னரை மீளாவண்ணம் முறியடித்துத் தங்கள் தந்தையும், தமையனும் தேடியும் அடையாக்கீர்த்தியையும், 25 பேரையும் பெறுமின்' எனமொழிந்தனர். ராயரும் அடங்கா மகிழ்வடைந்து ' அப்பாஜி! தாங்கள் செய்த

இப்பெருதவிக்கு நான்என்னகைம்மாறுஇயற்றுவேன்! தாம் ஒருவர் இலீராயின் என்னிலை யென்னாகும்! இந்த ஸாம்ராஜ்யந்தான் சிதைவு படாது நிற்குமா! தங்களுக்கு நிகரானவர் இப்புவியிலும் உளரோ!' என்று அமைச்சரைப் புகழ்ந்து, 'ஐயா! அப்படியே ஆகுக! இப்போது முதலில் யாரை வெல்வோம்ம? கம்மதிய சுல்தானையா? கஜபதி மன்னனையா?' எனக்கேட்டனர். அதற்குத் திம்மராசு கூறியதாவது: 'அரச! பிரதாபருத்திரனையே முதலில் முறியடித்தல் வேண்டும். பீஜப்பூர் சுல்தானைவிட அவன் அதிக பலம் வாய்ந்தவன். அவனது தேசமும் பெரியது. பிரஜைகளுடைய அன்பையும் மிகுதியாக அடைந்தவன்; ஆதலின் நம் சேனை வீராவேசம் குன்றாது குதூஹல மாயிருக்குஞ் சமயத்திலேயே பிரதாபருத்திரனைப் போர்முனையில் முறியடித்தல் வேண்டும். பிறகு பீஜப்பூர் சுல்தானையோ எளிதில் வெல்லலாம். அவ்வாறன்றி முதலில் சுல்தானையே எதிர்க்கப்போய் நாம் ராஜ்யத்துக்கு வெளியே யிருக்கும் சமயத்தில் பிரதாபருத்திரன் நம்தேசத்தின் மீது படையெடுத்துவரின் பிரதான நகரத்திலுள்ள சேனை அவனை எதிர்க்கமுடியாது பின்வாங்கும். மேலும் பீஜப்பூர் சுல்தானுடன் நாம் ஏற்கெனவே ஓர்வித உடன்படிக்கை செய்துள்ளோம். வெகுவாய் அவன் அதை மீறி நம்தேசத்தின்மீது படையெடுக்க மாட்டான். எதிர்த்துவரினும் விஜயநகரத்திலுள்ள சேனை அவனைத் தோல்வியுறச்செய்யும்; அதுவிஷயத்தில் பயமேதும் எனக்கில்லை.

ஆயினும் தற்சமயம் மனக்கவலையொன்று எனக்கு உளது. அது யாதெனில் நாம்வெளியே பிரதாபருத்திரனுடன் போர்புரியுங்கால் விஜயநகரத்தில் யார்இருந்து

ராஜ்ய முறைகளைக் கவனிப்பார் என்பதே; நம்பிக்கை வாய்ந்தவர் எனத்தகும் வீரர் அநேகர் இருப்பினும்,

"எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான் வேறாகு மாந்தர் பலர்"

உளர் அன்றோ? ஆதலின் அவர்களையே முழுதும் நம்பிப்போதல் யுக்தமென எனக்குத் தோன்றவில்லை. இன்னுங் கொஞ்சம் நிதானித்து யோசிப்பேன். கடைசியில் தகுதியானவர் ஒருவரும் இலர் எனத் தோன்றின் நானே ராஜதானியில் தங்கிவிடுவேன். தாங்கள் மாத்திரம் சென்று கஜபதி மன்னனோடு போர் செய்ய வேண்டிவரும்.' 60 65

இதைக்கேட்ட ராயர் பதில் கூறியதாவது:—'அப்பாஜி! நான்தனியே செல்வது நடவாதகாரியம். என்பக்கம் தாங்கள் இல்லையேல் வலக்கை யிழந்த முடவன் போல் ஆவேன். அன்றியுந் தங்களுக்கு இவ்வளவு விசாரம் உண்டாவதற்குக் காரணமில்லை. புஜபலமும், படை நடாத்தும் வன்மையும், கூரிய அறிவும், நிதான குணமும் நிறைந்த தங்கள் தம்பி கோவிந்தராஜுகாரு இலரோ? கைத்தலத்தில் வெண்ணையை வைத்துக்கொண்டு நெய்க்கு அழுவாரும் உளரோ. தங்கள் தம்பியாயினும் அவரது சாமர்த்தியம் தங்களுக்குத் தெரியாதிருக்குமோ! என்னையும் தாங்கள் இவ்வாறு சோதிக்கலாமா! அது நியாயமன்று. கோவிந்தராஜுகாருவையே விஜயநகரத்தில் நம் பிரதிநிதியாய் நியமித்து நாம் வெளிச்செல்வோம். படைக்குத் தாங்களே தலைமை வகிக்க வேண்டும். நான் தங்கள் பக்கம் நின்று தங்கள் கட்டளைகளை யெல்லாந் தவறாது நிறைவேற்றுவேன். இது 70 75 80

என் முடிவான தீர்மானம். தாங்கள் என்ன சொல்லி அம் நான் அதை மாற்றமாட்டேன்.'

திம்மரசு புன்னகைசெய்து, 'ஐயா! நான் பிராமண 85 னேயன்றோ! போர்க்குரிய குணங்கள் என்னிடத்து இலவே!' என, ராயர் 'ஆம்! ஆம்! பாரதப்போரில் பெரும்புகழ் எய்திய துரோணாசாரியர் அந்தணரன்றோ! கிருபாசாரியரும், அசுவத்தாமாவும் எவ்வர்ணத்தைச் சேர்ந்தவர்? பூர்வகாலத்தில் நியோகிப்பிராமணர் பலர் 90 போர்முனையில் வெற்றிபொருந்தினர் என நாம் கேட்டதில்லையோ! தங்களிடத்தில் க்ஷத்திரியதருமம் குறைவாயுமுளதோ! இல்லை, இல்லை, நான் தீர்மானித்தவண்ணமேதான் தாங்கள் செய்யவேண்டும்' என மறுமொழி கூறினர். திம்மரசும் அதை அங்கீகரித்தனர்.

95 பிறகு ஒரு சுபதினத்தில் ராயர் திம்மரசைப் படைக்கு முக்கிய அதிகாரியாக அபிஷேகம் செய்வித்தனர். அந்தச்சமயம் திம்மரசு அங்குக் குழுமியுள்ள தளகர்த்தர்களையும், மற்றைய போர்வீரர்களையும் பார்த்துப் பின்வருமாறு பேசினர்: 'நண்பர்களே! ராஜவிசுவாசமும், 100 போர்த்திறனும் நிறைந்த உங்களுக்குச் சிலவிஷயங்கள் சொல்ல விரும்புகிறேன். பிஜப்பூர் சுல்தானன அடில்ஷா நம் ஸாம்ராஜ்ய எல்லையிலுள்ள சிலகோட்டைகளைத் தன் கைவசம் வைத்திருக்கிறான். கோல்கொண்டா சுல்தான் குடுப்ஷா, பூர்வம் நமக்குக் கீழ்ப்பட்டு நம்மரசர் 105 நியமித்த பத்ம நாயக்கர்களால் ஆளப்பட்டு வந்த, தேவரகொண்டா, பானகல்லு முதலிய கோட்டைகளைப் பிடித்துக்கொண்டு மேற்சொன்ன பத்ம நாயக்கர்களைத் துரத்திவிட்டான். பிரதாபருத்திரனே கிழக்கில் உதயகிரிவரையில் தன் ராஜ்யத்தை விஸ்தரித்துக்கொண்டு

நம் நாட்டுக்கு இடையூறு செய்துகொண்டு வருகிறான். 110
இவர்கள் யாவரையும், போரில் முறியடித்துக் கிருஷ்ணா
வுக்கு வடக்கே அவர்களை ஓட்டி, அந்நதிக்குத் தக்ஷிண
பாகத்தில் இதர மன்னர்களுக்கு ஒரு அடி நிலங்கூட
இல்லாமற் செய்து, ஹிந்து ஸாம்ராஜ்யத்தை நிலை
நிறுத்த வேண்டுமென்றே நம் அரசர் கங்கணம் கட்டிக் 115
கொண்டுள்ளார். நானும் அதற்கு இணங்கித் தகுந்த
பிரயத்தனங்களைச் செய்வதாக வாக்களித்து விட்
டேன். ஆயினும் சிங்கத்தை யொத்த பராக்கிரமம்
பொருந்திய போர்வீரர்களான உங்களுடைய உதவி
யின்றி எதுதான் முடியும்? ஆதலின் நீங்கள் எல்லாரும் 120
ஒருமனப்பட்டு ஸாம்ராஜ்ய செழிப்புக்காகவும், நம்
ஹிந்துமத அபிவிருத்திக்காகவும் பாடுபட வேண்டு
மென்பது எனது கோரிக்கை. அதற்கு அனுகூலமான
உற்சாகத்தையும், பலத்தையும், வெற்றியையும் நமக்கு
ஜகதீசன் அருள்புரிவாராக'! இதைக்கேட்ட போர் 125
வீரர்களெல்லாம் சந்தோஷித்துக் கடல்போல் ஆர
வாரஞ்செய்து திம்மாசு சொல்லிய வண்ணம் செய்யச்
சித்தமா யிருப்பதற்கு அறிகுறியாக ஊரத்துக் கர
கோஷம் செய்தனர்.

பிறகு திம்மாசு, சேனையை ஏழு பாகங்களாகப் 130
பிரித்து, ஒவ்வொரு பாகத்திலும் முப்பதினாயிரம் காலா
ட்படை, நாலாயிரம் குதிரைப்படை, முந்நூறு கஜப்
படையையுஞ் சேர்த்து, ஒவ்வொரு பாகத்துக்கும்
தனித்தனியேஒவ்வொரு தளகர்த்தரையும்நியமித்தார்.

ஒருலட்சம் போர்வீரர் சேர்ந்த படையை விஜய 135
நகரத்தில் வைத்து, கோவிந்தராஜுவை அதற்குத் தலை

வாராகச் செய்து, தாமும், அரசரும் வெளியில் இருக்குங் காலத்தில் வெகு ஜாக்கிரதையா யிருந்து ராஜ்யத்தில் கலகங்கள் நேரிடாமலும், எதிரிகள் படையெடுத்து வாராமலு மிருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டுமெனத் திம்மரசு தம் தம்பியைப் பலவாறு வேண்டிக்கொண்டனர். கோவிந்தராஜுவும் அவ்வாறே செய்வதாக வாக்களித்தனர்.

---

## XXVII தண்ட யாத்திரை.

மறுநாள் சூரியோதயம் ஆகுமுன்னரே திம்மரசு பறை அறைவித்தனர். போருக்கு எழ விருந்த வீரர்கள் யாவரும் தத்தம் சாமான்களுடன் சடிதியில் குறித்த இடத்தில் வந்து சேர்ந்தனர். அவர்களின்தொகை மூன்று லட்சம். அவர்களன்றி அரசர்து படைக்கு மூத்தவரும், திம்மரசின் பரிவாரமும் அனேகம் ஆயிரவர். யுத்த தளவாடங்களையும், உணவுப் பொருள்களையும் மற்றும், தட்டுமுட்டுச் சாமான்களையும் ஒட்டகங்களின்மீதும், வண்டிகளின் மேலும் ஏற்றிச்செல்ல விருந்தவர் வெகு ப்லர். ஆயிரக்கணக்கான துரகங்களும், நூற்றுக் கணக்கான கஜங்களும் யாத்திரைக்கு ஆயத்தமாயின.

குறித்த சமயத்தில் கிருஷ்ணதேவராயர், போர் ஆடையுடுத்துத் தம் மனைவியர்களிடம் விடைபெற்று வெகு உற்சாகத்துடன் அரண்மனைக்கு வெளியே வந்தனர். திம்மரசும் கவிசிரேட்டரான அல்லசானி பெத்தன்னவும், நந்தி திம்மன்னவும், ரங்கநாத தீக்ஷிதர்

குல குருவாகிய ரங்கநாத தீக்ஷிதரும், மற்றுமுள்ள
பிராமணர்களும் அவருடன் கூடப் புறப்பட்டனர்.
பேரிகை, சங்கம், கொம்பு முதலிய போர் வாத்தியங் 20
கள் முழங்கிக் கடல்போல் ஒலிசெய்ய, வந்தியர்கள்
'ஜய விஜயீபவ, ஜய விஜயீபவ' என்று அறைய, வீதிக
ளில் ஆயிரக் கணக்காய் குழுமிய நகரத்தவர்கள், 'ஜேய்,
ஜேய்' என்று கூவிக் கரகோஷம் செய்யப் பலர் பூமாரி
பொழிய, வேறுபலர் சோபனுக்ஷதைகளை யிறைத்துத் 25
திருஷ்டிதோஷ பரிகாரஞ்செய்ய, கிருஷ்ணதேவராயர்,
இனிதே பவனிவந்து படைநின்றவிடம் சேர்ந்தனர்.
உடனே ஆகாயத்தையு மூடுருவுமாறு, 'ஜேய், ஜேய்'
என்ற பேரொலி எழும்ப, அக்குழாத்தவர் யாவரும் தத்
தம் சாமான்களைத் தூக்கிக்கொண்டு புறப்பட்டனர். 30
நெடிது தூரம் ஒரே வரிசையாய் நின்ற அச்சேனை நட
ந்து செல்வதைப் பார்த்தால் ஒருபெரு நகரமே இடம்
பெயர்ந்து சென்றது எனுமாறு தோன்றியது.

அச்சேனை வெகுவிரைவில் உதயகிரிநகரை நெருங்
கியது. அக்காலத்தில் அந்நகரில் கஜபதி ராஜனுக்குப் 35
பிரதிநிதியாயிருந்தவன் அவ்வரசனுக்குச் சிற்றப்பனுன
திருமலை காந்தராயன் என்போன். அவன் கிருஷ்ண
தேவராயர் படையெழுச்சிக் கோலத்தில் வருவதைத்
தன் வேவுகாரர்க ளிடமிருந்து தெரிந்துகொண்டு,
கலிங்கதேசத்தி லிருந்த பிரதாபருத்திர மன்னனுக்குச் 40
செய்தி அனுப்பிப் பிறகு கோட்டையைப் பாதுகாப்ப
தற் குரிய முயற்சிகளைச் செய்தனன். கோட்டைச்
சுவர்களைச் செவ்வனே பழுது பார்ப்பித்தனன். பதினு
றுயிரம் காலாட்களும், நானூறு குதிரை வீரர்களும்
கொண்ட ஓர் சேனையைத் திரட்டினன். கோட்டையி 45

ளுள்ளவர்களுக்கு ஆகாரநிமித்தம் எவ்வளவு உணவுப்
பொருள்களைச் சேகரிக்க முடியுமோ அவ்வளவையும்
விரைவில் சேர்த்தனன். கோட்டையைச் சுற்றி உட்
பக்கத்தில் போர்வீரர்கள் யுத்த சன்னத்தராய் எதிரி
50 யின் வரவை எதிர்பார்த்து நின்றனர். உள்ளே செல்
லுவதற்கு ஒரு குறுகிய பாதையே இருந்தது. வேறெ
ங்கும் இடை வெளி யென்பதே யில்லை. கிருஷ்ண
தேவரது சேனையும் சீக்கிரத்தில் வந்து கோட்டையை
முற்றுகை போட்டது. உள்ளிருந்த படை, அளவில்
55 குறைந்த தெனினும் வீரத்திலாவது, பலத்திலாவது
குன்றியதன்று. ஆகவே கிருஷ்ணதேவர் அக் கோட்
டையை எளிதிற் கைக்கொள்ள முடியவில்லை.

இந்தச் சந்தர்ப்பத்தில் பிரதாபருத்திரனால் அனுப்
பப்பட்ட லட்சம் போர்வீரர் அடங்கிய சேனை உதய
60 கிரியை நோக்கி வருவதாகத் திம்மாசுக்குச் சமாசாரம்
கிடைத்தது. உடனே அவர் ராயரிடம் சென்று விஷ
யத்தைத் தெரிவித்துத் தம் சேனையை இருபாகமாகப்
பிரித்து ஒரு பாகத்தைக்கொண்டு ராயர் முற்றுகையை
நடத்தவேண்டுமென்றும் தாம் மற்றொரு பாகத்துடன்
65 வடக்கேசென்று எதிரிசேனையுடன் போர் புரியவேண்டு
மெனவும் சொன்னார். ராயரும் அதை அங்கீகரிக்க,
திம்மாசு பிரதாப ருத்திரனது படையை நோக்கி வடக்
குத் திக்கில் பிரயாணமானார்.

உதயகிரியை முற்றுகைசெய்து பதினெட்டு மாதங்
70 கள் ஆகியும் அது ராயரது கைவசமாக வில்லை. உள்
ளிருந்த போர்வீரர்கள் வெகு சாமர்த்திய மாகவும்,
தைரியமாகவும் போர்புரிந்து வந்தனர். ஆயினும்
சேகரித்து வைத்த உணவுப் பொருள்கள் குறையவே,

வேண்டிய ஆகாரமின்மையால் அவர்களது பலம் வர
வரக் குன்றியது. கடைசியாய் ராயர் வெகு பாடுபட்டுக் 75
கோட்டைச் சுவரின் ஒருபாகத்தை உடைத்தெறிந்த
னர்; உள்ளிருந்த திருமலை காந்தாராயனும் கை சலித்து
நின்றனன். ராயர் கோட்டையைப்பிடித்துத் தம்வசமாக்
கிக்கொண்டு திருமலை நாயக்கனேயும் இதர தளகர்த்தர்க
ளேயும் கைதி செய்தனர். பிறகு விஜயநகரத்தி லிருந்து 80
ஒருகாப்புச் சேனையைத் தருவித்து அதை உதயகிரியில்
இருத்தித் தமது முக்கிய தளகர்த்தனை அங்கே தம்
பிரதிநிதியாக நியமித்தனர். பிறகு சேனையுடன் திம்மாசு
இருக்கு மிடத்தை நோக்கிப் புறப்பட்டனர். திம்மாசு
பிரதாப ருத்திரனது படையை எதிர்த்து இரண்டு 85
வருஷகாலம் போர்புரிய நேர்ந்தது. தேகபலம், ஆண்
மை, ஆத்தும கௌரவம் இவைகள் நிரம்பிய வீரர்களும்,
காரிய நிபுணத்வம், தைரியம், சமயத்திற் கேற்ப நடந்து
கொள்ளும்நுட்பபுத்தி இவைவாய்ந்த தளகர்த்தர்களும்
அடங்கிய அச்சேனை எளிதில் எதிரி வசப்படுமோ! 90
ஆயினும் திம்மாசு கொஞ்சங் கொஞ்சமாய் அப்படை
யைப் பின்னேக்கிச் செல்லுமாறு துரத்திக்கொண்டே
வந்து அத்தங்கி, வினுகொண்டா, பெல்லம் கொண்டா'
தங்கேடு, கேதவரம் முதலிய கோட்டைகளைக் கைப்
பற்றினர். பிறகு கொண்டவீடு கோட்டையையும் 95
முற்றுகை செய்தனர்; கிருஷ்ணா நதிக்குத் தென்பாகத்
தில் கஜபதி ராஜனுக்குள்ள கோட்டைகளுள் முக்கிய
மானது அக்கொண்டவீடு கோட்டையே; ஆதலின்
அது திம்மரசின் வசம் விழா வண்ணம் எதிரிகள் பெரு
முயற்சிகள் செய்தனர். பிரதாப ருத்திரனது குமார 100
னுன வீரபத்திர கஜபதியே போர்முனையில் நின்று

படையை நடத்தினன். ஆயினும் என்ன? வீரலட்சுமி யின் பலம் முழுதும் ராயரிடமன்றோ நின்றது. கோட் டைக்குவெளிநின்றுபோர்செய்த வீரபத்திரன்தளர்ந்து 105 போய்த் தன் சைன்யத்துடன் கோட்டைக்குள் புகுந்துகொண்டான். பிறகு அங்கிருந்தபடியே திம்மரசை எதிர்த்தனன் என்றாலும் வெகுகாலம் கோட்டையைக் காத்துநிற்கச் சாத்தியப்படவில்லை! திம்மரசு, கோட்டையைப் பிடித்துக்கொண்டனர். வீரபத்திரன் முதலிய 110 பிரதானமானவர்களைக் கைதிசெய்தனர். பிரதாப ருத்திரனது மருமகன் ஒருவனே கிருஷ்ணாநதியைத் தாண்டித் தப்பி போடியவன்.

1515 ஆம் வருஷம் மார்ச்சு மாதத்தில் திம்மரசு, கொண்டவீடு கோட்டையை முற்றுகைபோட ஆரம் 115 பித்தனர். உதயகிரி பிராந்தத்துள்ள கோட்டைகள் யாவும் போயினவென்றும், கொண்டவீடே எதிரிவசம் விழுமாறு ஆபத்து நேரிட்டுளதென்றும் கேட்ட பிரதாப ருத்திரன் வெகு கோபங்கொண்டு, இனிச் சேனையை அனுப்புவது மாத்திரம் போதாதென்று நினைத்து, 120 தானே ஒரு பெருஞ்சேனையைச் சேகரித்துக்கொண்டு, தக்ஷிண திக்கை நோக்கிப் புறப்பட்டனன். அவனது சேனை, ஐந்துலட்சம் காலாட்களும், இருபதினாயிரம் குதிரைகளும் ஆயிரத்து முந்நூறு யானைகளுங் கொண்டது. பார்ப்போர் மனம் திகைத்து, 'அம்மம்ம! 125 இதையும் எதிர்த்து ஜயிக்கவும் முடியுமோ!' என ஆச் சரியமுறுந் தன்மையது. அத்தகைய படை எதிர்நோக் கிவருவதெனக் கேட்ட திம்மரசு தஞ்சேனையை இருபங் காய்ப் பிரித்து ஒரு பங்குடன் தாம் கொண்ட வீட்டி லிருந்துகொண்டு மற்றொரு பங்குடன் கிருஷ்ணதேவர்

வடக்குத் திசை நோக்கிச் சென்று பிரதாப ருத்திரனு 130
டன் போர்புரியுமாறு எற்பாடு செய்தனர். ராயரும் சடி-
தியில் கிருஷ்ணா நதியைத் தாண்டிச் செல்ல, மேடுருக்
கருகில் ஓர் மிகக்கோரமான யுத்தம் நடந்தது. ஆயிரக்
கணக்கான வீரர்களும், நூற்றுக் கணக்கான அசுவங்
களும், கஜங்களும் காலனுக் கிரையாயின. கடைசியில் 135
ராயர் பிரதாபனை அடியோடு முறியடித்துப் புறங்காட்டி
யோடும்படி செய்தனர். அவனது படையும் சின்னபின்
னமாய்ச் சிதறுண்டது. ஜூன்மாதம் 23-ஆம் தேதியில்
கொண்டவிடு கோட்டையும் திம்மரசின் வசமானது.
பிறகு ராயர் கொண்டபல்லிக் கோட்டையையும் பிடி- 140
த்து, அதிலிருந்த பிரதாபனது மனைவி ஒருத்தியை
யும் கைதி யாக்கினர்.

ஆகவே, பாலிய பருவ முதல் இடைவிடாது தம்
மனத்திலிருந்து தூண்டிவந்த பேரவா பூர்த்தி யான
தால் திம்மரசும், ராயரும் பேரானந்தம் எய்தினர்; 145

> முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
> யின்மை புகுத்தி விடும்.
> வாளாடு கூத்தியர் கண்போற் றடுமாறுந்
> தாளாளர்க் குண்டோ தவறு.

ராயர், திம்மரசு தாம் பிறந்த விடமான கொண்டவீட்டி-
லேயே கொஞ்சநாள் அரச கௌரவம் பெற்று விளங்க
வேண்டுமென அவாக்கொண்டவராய் அவ்வூரிலே தம்
பிரதிநிதியாய் இருக்கவேண்டு மெனத் திம்மரசைக்
கேட்டுக்கொள்ள அவரும் எற்றுக்கொண்டனர். 150

## XXVIII

## கஜபதியினது பிரதானநகரை எதிர்த்துச்செல்லல்.

வெற்றியெனும் மதுவை உட்கொண்ட தேவராய ருக்கு வீராவேசம் மிகுந்தது. பிரதாபருத்திரனது நகராம் கட்டக்குக்குச் சென்று அதைக் கைப்பற் றிக் கஜபதி மன்னனைச் சிறைசெய்ய வேண்டுமென விருப்பங்கொண்டார். திம்மரசிடம் அதைத் தெரிவிக்க அவர் அவ் வாலோசனையை முதலில் அங்கீகரிக்கவில்லை. 'ஐயா! நாம் நம் ராஜதானியினின்றும் வெகுதூரம் வந் துள்ளோம் என்றதைத் தாங்கள் மறக்கக்கூடாது. வடக் கே செல்லச்செல்ல எதிரியின் தேசமத்தியில் அன்றோ நாம் புகவேண்டிவரும். அங்கே அவனுக்குச் செல்வா க்கு மிகுதியும் உண்டு. ஜனங்களது பிரீதியை அடைந் தவனாதலின் வெகு பேர்கள் அவனுக்கு உதவியாக நின்று நம்மை எதிர்ப்பார்கள். நமக்கோ அவ்விடத்தில் பரிசிதர் ஒருவருமிலர். ஆதலின் தனியே யிருந்து போர் செய்ய நேரிடும். அப்போதைக்கப்போது வேண்டிய போர்வீரர்களையோ அல்லது உணவுப் பொருள்களை யோ தருவித்துக் கொள்ளலும் அசாத்தியமாகிவிடும்; 'உள்ளூர்ப் புலியும் வெளியூரில் பூனையாகி விடும்' அன் றோ!

காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

இனி நாம் வடக்கே செல்வோமாயின் நம்பலம் குறைவுபடுதலன்றி எதிரியின் வலியு மிகும்; ஆதலின் இதுகாறும் நாம் அடைந்துள்ள வெற்றியோடு திருப்தி யடைந்து திரும்பிச் செல்வதே நலம்.

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்,

எனத் திம்மரசு சொல்லியும் ராயர் இணங்க வில்லை. 'எவ்வாருயினும் ஆகுக. நான் படையெழுச்சி 25
செய்தே தீருவேன். வெற்றிக்குரிய முயற்சிகளைத் தாங்கள் செய்தே தீரவேண்டும்', என்று அவர் பிடிவா தம் செய்தார். திம்மரசும் பதில் சொல்ல முடியாதவ ராய்ச் சேனையை வடக்கே நடத்திச் சென்றனர்.

'வெற்றியைப்போல் வெற்றி தருவது வெருென் 30
றிலது' எனப் பொருள்படும் ஆங்கிலப் பழமொழி உண் மையே யன்ருே? விஜயநகரப் போர்வீரர்கள் உற்சாகம் மிகுந்து, எதிரி பின்னேக்கி ஓடுமாறு செய்துகொண் டே போய், ராஜமகேந்திரபுரம் சென்று அதைக் கைப் பற்றினர். புதிதாய் ஒரு சேனையும் விஜயநகரினின் 35
றும் வந்து இவ்விடத்தில் சேர்ந்துகொண்டது. பிறகு கோதாவரியைத் தாண்டி விசாகபட்டணக் காட்டுப் பிராந்தத்துள்ள போட்னூர் என்ற ஊரையும் பிடித் தனர். தங்களது வெற்றிக்கு அறிகுறியாய் அவ் ஊரில் ஓர் உயர்ந்த ஸ்தம்பத்தைத் தேவராயர்நாட்டினர். 40
அப்பால் சிம்மாசலம் சென்று அம்மலைமீது எழுந்த ருளியிருக்கும் பெருமானைத் தரிசித்தார். இதுகாறும் எதோ ஒருவிதமாய்ப் போர் செய்துவந்த பிரதாபனது சேனை இவ்வூர் சேர்ந்ததும், சிதறுண்டு, கண்ணுக்குத் தெரியாது மறைந்தது. K. K. R. agaran 45

'இப்பொழுதேனும் ஊருக்குத் திரும்புவோம். இனி நாம் செல்லும் மார்க்கம் அடர்ந்த காட்டுப் பிர தேசம்; துஷ்ட மிருகங்களாலும் உணவுப்பொருளின் குறைவாலும் நமக்கு உபத்திரவம் நேரிடலாம்' என்று திம்மரசு சொல்லியும் ராயர் உடன்படவில்லை. மேன் 50
மேலும் சேனையை நடத்திக்கொண்டே சென்ருர்.

பிரதாப ருத்திரனது சிற்றரசர்கள் இதைக் கேள்வியுற்று அருக் கோபங்கொண்டு எவ்விதமேனும் தேவராயரை முறியடித்து, பிரதாபனது கௌரவத்தைக்
55 காப்பாற்றவேண்டுமென மனவுறுதி கொண்டனர். உடனே லட்சக் கணக்கான போர்வீரர்களைச் சேகரித்துக் கொண்டு தேவராயரை எதிர்த்து வந்தனர். பிரதாப ருத்திரனும் தன் ராஜதானியிலுள்ள சேனையுடன் வந்து தன் சிற்றரசர்களுடன் சேர்ந்துகொண்டான்.

60 இச்சமயத்தில் தான் தேவராயருக்குத் தமது மதியீனம் விளங்கியது. வெகு மாதங்களாய் இடைவிடாது போர்புரிந்த காரணம்பற்றித் தம்போர்வீரர்கள் தளர்ச்சியடைந்து நின்றனர். தளகர்த்தர்களுள் சிலர் வியாதியால் வருந்தினர். 'எப்போது ஊருக்குச்செல்வோம்,
65 பெண்டு பிள்ளைகளைப் பார்ப்போம்' என நினைந்து ஏங்கினர் வேறு சிலர். சுற்றி எங்கு பார்த்தாலும் திக்குத் திசை அறியவொண்ணு அடவியே. எதிரிகளோ வென்ருல் வெகு வலிமை வாய்ந்து நின்றனர். சேனை புதிதாய்த் திரட்டப்பட்டு வெகு உற்சாகமும் மனவுறு
70 தியும் நிரம்பப் பெற்றிருந்தது. போர்செய்யும் பிரதேசம் காடா யிருப்பினும் தம்தேசமாதலின் நகரம்போலேயே அவர்களுக்கு அனுகூலமாக விருந்தது. இதையெல்லாம் பார்த்த தேவராயர் மனம் கலங்கினர். 'என் அப்பாஜி உரைத்த யோசனையைக் கேட்காமற்போனே
75 னே' என்று மனம் நொந்தார்.

> 'உடைத்தம் வலியறியா ருக்கத்தி னூக்கி
> யிடைக்கண் முரிந்தார் பலர்.'

எனப் பொருள்ப்டும் புத்தியை அவமதித்தேனே! ஆதலின்,

அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

எனும் முதுரைக்கு நானே சாட்சியாம் நிலையிலன்றோ இப்பொழு துள்ளேன்! எனச் சிந்தனை தடுமாறித் திம் மாசைத் தம்மிடம் வருவித்தனர். 80

திம்மாசு வந்ததும், ராயர் அவரை வணங்கி, 'அப் பாஜி! தாங்கள் சொன்ன புத்தியைக் கேட்காது பிடி வாதம் செய்தேனே! ஆ! அது எவ்வளவு மதியீனம்! இப்பொழுதன்றோ என் மடத்தனம் எனக்குப் புலப்படு கின்றது! தங்களது எண்ணத்துக்கு மீறி நடந்தமை 85 யைப் பொறுத்தருள வேண்டும். இந்த இக்கட்டினின் றும் என்னை விடுவித்தருள வேண்டும்;' எனப் பணிவு டன் வேண்டினர். 'பொல்லாத சேயெனினும் தாய்தள் ளல் நீதமோ' மன்னன் முனிந்தனன் எனினும், மந்திரி முறை வழுவலாமோ! 'அற்றமறைக்கும் பெருமை' 90 அன்றோ! 'இடுக்கண் களைவதா நட்பு' அன்றோ! இவ் வுண்மைகளுக்கு உறைவிடமாகிய திம்மாசும் அச்சம யத்தில் அரசரிடம் கடுமொழிகள் செப்புவரோ! தம் பிரதாபத்தைப்பற்றிப் பிதற்றுவரோ! அன்று அன்று. 'அழிவினவை நீக்கும்' யுக்திகளை ஆராய்ந்து மனந்தேர் 95 ந்து ராயரை நோக்கி, 'அரசே! அஞ்சற்க அஞ்சற்க; எளிதில் இவ்வபாயத்தை நீக்குவேன். எதிரி, தங்களி டம் வந்து தன் புத்திரியைத் தங்களுக்கு மணப்பெண் ணைப் அளிப்பது மன்றித் தாங்கள் போரை நிறுத்த வேண்டுமெனவும் பணிவுடன் கேட்குமாறு உபாயம் 100 செய்வேன்' என மொழிந்தார். ராயரும் விசாரம் நீங்கினர்.

பிறகு, தமது காரியாலயத்துக்குச் சென்று கஜானுவுக்குச் சேவகனை அனுப்பிப் பதினாறு பெரிய பெட்டிக
105 ளும், அவை நிரம்பிய வெள்ளி நாணயங்களும், தங்கநாணயங்களும் தம்மிடம் வரவேண்டுமெனக் கட்டளையிட்டார். சீக்கிரத்தில் அவைகள் கொணரப்பட்டன. உடனே அப்பெட்டிகள் ஒவ்வொன்றி னுள்ளும் ஒவ்வோர் கடிதத்தை வைத்தனர். பின்பு நம்பிக்கை வாய்ந்த
110 பதினாறு சேவகர்களைக் கூப்பிட்டு அவர்கள் தலைமீது பெட்டிகளை வைத்து, அவர்கள் அவற்றைத் தூக்கிக் கொண்டு, எதிரி சேனைகளும், தளகர்த்தர்களும் குழுமியுள்ள இடம் சென்று, அங்கே பிரதாப ருத்திரன் அமர்ந்திருக்கும் ஸ்தானத்தை நோக்கி ஓடவேண்டுமென
115 உத்தரவிட்டார். அவர்களும் அவ்வண்ணமே செய்யப் பிரதாப மன்னனது ஊழியர்கள், அவர்களைப் பிடித்துக் கொண்டு போய்த் தம் அரசன் முன்னிலையில் நிறுத்தினார்கள். பிரதாபன் அப்பெட்டிகளைக் கீழ் இறக்கி, அவைகளைத் திறந்து பார்க்கவே, அவைகள் ஒவ்வொ
120 ன்றினுள்ளும் ஒவ்வோர் கடிதம் இருக்கக் கண்டான். அவைகளெல்லாம் நற்காலத்தில் தன்னுடன்கூட நின்று போர் நடத்திய தனது பதினாறு சிற்றரசர்களது விலாசத்துக்கு எழுதப்பட்டிருந்தன. அதைப்பார்த்து ஒருவாறு ஆச்சரிய முற்றான். லிகிதமொன்றைப் பிரித்து
125 அதில் வரையப்பட் டிருந்ததைப் படித்தான். அதில் பின்கண்ட விஷயம் எழுதப்பட் டிருந்தது. 'தேவராயர் தாங்கள் செய்த உதவிக்கு மிக வந்தனம் அளிக்கிறார். அதற்குக் கைம்மாறாகக் கொஞ்சம் திரவியம் அனுப்பப் பட்டுள்ளது. அதைத் தயவுடன் அங்கீகரிக்க வேண்
130 டும். தாங்கள் ஒப்புக்கொண்டுள்ளபடியே எல்லாவிஷ

யங்களும் நடந்தேறினல், தங்களுக்கு வெகு கிராமங்களையும், ஆடையாபரணங்களையும் வெகுமதியாய் அளிக்கச் சித்தமா யிருக்கிருர்; தாங்கள் சீக்கிரத்தில் தகுந்த பிரயத்தனங்களைச் செய்யவேண்டும்.' இதைப் படித்த பிரதாபன் மதிமயங்கினன். என் சிற்றரசர்களும் இத் தகைய வஞ்சகர்களோ எனப் பயமுற்றன். அமர்க்களத்தில் என்னை நிறுத்தி வீரத்துடன் போர்புரிவது போல் நடித்து, பிறகு நட்டாற்றில் என்னைவிட்டு ஓடவோ பார்த்தீர்கள் மன்னர்காள்! என எண்ணினன். நான் போர் முயற்சி ஆரம்பிக்குமுன் என்னிடம் ஓடிவந்து, 'ஐய! தேவராயனை அடியோடு முறியடிக்கவேண்டும்; காலதாமதம் வேண்டாம் உடனே புறப்படுங்கள்' என்று வேண்டின காலத்தும் இத்திய எண்ணம் உங்கள் மனத்தில் உள்ளதோ! எனச் சந்தேகித்தனன். ஒரு சமயம் தான் படித்ததுதான் தவருே என நினைந்து மற்றுமொருதரம் கடிதத்தை வாசித்தான். அதில் ஒன்றும் வித்தியாசமில்லை. அர்த்தத்திலும் சந்தேகமில்லை. ஆ! என்ன செய்வான்!

> ஏங்கின னிளைத்தான் திகைத்தான் மனம்
> வீங்கினன் விம்மினன் விழுந்தா னரோ
> வீழ்ந்தான் வீழாவெந்துய ரத்தின்கடல் வெள்ளத்
> தாழ்ந்தா னுழா வக்கட லுக்கோர் கரைகாணுன்.

எவருடனுயினும் கலந்து யோசிப்போம் என்றுலோ ஒருவரையும் நம்பலாம் என்ற நம்பிக்கை எழவில்லை. எவரும் வினைவேறு சொல்வேறு பட்டார்போன்றே தோன்றினர். கடைசியில் கள்ளுண்டவன்போலும், வெறி பிடித்தவன்போலும் முழுதும் மதிகலங்கினவனுய்ப் போர்க்களத்தினின்றும் ஓடிப்போய் யாருமறியாத ஓர் இடத்தில் ஒளிந்து கொண்டனன்.

155 வேவுகாரர் மூலமாய் இது விஷயத்தைத் தெரிந்து கொண்ட திம்மரசும் தாம்முதலில் ஊகித்த வண்ணமே காரியங்கள் நடைபெற்று வருவதைக்கண்டு மகிழ்ந்து தாமே நேரில் பிரதாபனைப் பார்ப்பதற்குச் சென்றனர். அவன் மனம் இன்னும் நிதானப்படாமல் பயத்தின் வச
160 ப்பட்டுக் கலங்கிநின்றது. வெகு சாதுர்யமாய், திம்மரசு அவனிடம் சம்பாஷித்து எவ்விதத்திலாயினும் கிருஷ்ணதேவருடன் சமாதானம் பண்ணிக்கொண்டாலல்லது தனக்கு உய்வில்லை என்று அவன் மனத்தில் படியுமாறு செய்தனர். பிறகு ஜாடையாகவும், சங்கேதமாகவும்,
165 'குறித்தது கூறுமை கொள்ளு' மாறும் ஒரு சமயம் தேவராயரிடம் சென்று தான் தோல்வி யுற்றதாய்க் கூறி, உடன்படிக்கை செய்து கொள்வதில் சிரத்தை காட்டி, அதற்கு அறிகுறியாய்த் தன் குமாரத்தியை அவருக்கு மணம் செய்விப்பதாக வாக்களித்தால் அவர் அவ்
170 வெண்ணத்தைப் பூர்த்திசெய்து போர்த் தொழிலை நிறுத்துவார் எனத் திம்மரசு தேற்றுவித்தனர். 'மூழ்கும் தறுவாயிலுள்ளவன் த்ரணத்தையும் கைப்பற்றுவானன்றோ!' பிரதாபன் உடனே தேவராயரிடம் ஓடி, தன் மகளை அவருக்கு மனைவி யாக்குவதாய் ஒப்புக்கொண்டு
175 சமாதானஞ் செய்துகொண்டனன். அவ்வாறே விவாகமும் நடைபெற்றது. பிறகு தேவராயர் கோதாவரி நதிவரையி லுள்ள தேசத்தைப் பிரதாபனுக்கு அளித்து 1516-ஆம் வருஷத்தில் விஜயநகரத்துக்குத் திரும்பி வந்தார்.

180 இச்சமயத்தில் கிருஷ்ணதேவர் தம் அப்பாஜியிடத்தில் தாம் கொண்ட பக்தியை இவ்வாறென விவரித்தல் முடியுமோ?

## XXIX. மகம்மதியரை ஜயித்தல்.

ராயர் விஜயநகரஞ்சேர்ந்து கொஞ்சகாலமானதும், கோல்கொண்டா சுல்தானான குடுப்ஷா ஒரு லட்சம் போர்வீரர்களுடன் கொண்டவீடு ஸமஸ்தானத்தை நோக்கி வருவதாகத் திம்மரசு கேள்வியுற்றார். உடனே அவர் இரண்டு லட்சம் ஆட்கள் அடங்கிய ஓர் படையுடன் அவனை எதிர்க்கச் சென்றார். அவர் கொண்டவீடு போய்ச் சேருமுன்னரே, குடுப்ஷா கிருஷ்ணா நதியைத் தாண்டி, பெல்லங்கொண்டா கோட்டையைக் கைப்பற்றிப் பிறகு கொண்டவீடை நோக்கி வந்துகொண்டிருந்தான். இருசேனைகளும் அக்கோட்டைக்கு அருகில் சந்திக்கவே ஒரு பெரும் போர் விளைந்தது. இருதிறத்தாரும் வெகு வீராவேசத்துடனுங் கைகலந்து போர் செய்ய, அநேக மாயிரம் பேர்கள் உயிரிழந்தனர். கடைசியில் சுல்தானுடைய சேனை சிதறுண்டது. அவனும் புறங்காட்டி ஓடநேர்ந்தது. சுல்தானது படைத்தலைவனையும், அவனது மனைவியையும் திம்மரசு கைதிசெய்து அவர்களை விஜய நகரத்துக்கு அனுப்பினர். பிறகு தாம் கொண்ட வீட்டிலேயே சிறிதுகாலம் வசித்திருந்து ஸமஸ்தானத்தில் குடிகள், விசாரமும், பயமு மின்றித் தங்கள் தங்கள் தொழில்களை நடாத்திச் செவ்வனே தம் வாழ்நாளைச் சுகமாகக் கழிக்குமாறு தகுந்த சீர்திருத்தங்களை யியற்றினர்.

பிறகு தம் மருமகனான அப்பன்னாவை அங்கே ராஜப்பிரதிநிதியாய் இருத்தித் திம்மரசு விஜயநகரத்துக்குத் திரும்பினர். இவரது வேறொரு மருமகனான கோபன்னா, குத்தி ஸமஸ்தானத்தில் ராஜ்யாதிகாரம்

செலுத்தி வந்தனன். இருசகோதரர்களும் வெகு யோக்கியதை வாய்ந்தவர்கள்; தெய்வபக்தி மிகுந்தவர்கள். ஆதலின் வித்வான்களுக்கு மானியங்கள் விட்டும்,
30 கோவில்களைப் பழுது பார்ப்பித்தும், தேவஸ்தானங்களைச் சீர்ப்படுத்தியும் வந்தனர். புதிதாய்க் குளங்களையும், கிணறுகளையும் வெட்டுவித்தனர். இவைபோன்ற சற்காரியங்களை யியற்றியதால் பிரஜைகள் யாவராலும் மிக நன்கு மதிக்கப்பட்டனர் என்று வினுகொண்டா
35 விலும், கொண்டவீட்டிலும் உள்ள சிலா சாஸனங்களினின்றும் தெரியவருகிறது.

---

## XXX ரேய்ச்சூர்க் கோட்டை முற்றுகை.

கொஞ்சகாலம் திம்மரசு ஸாம்ராஜ்யத்தின் க்ஷேமத்துக்கு அவசியமான சீர்திருத்தங்களைச் செய்து கொண்டு வந்தனர். ஆயினும் போர்முயற்சிக்குக் காரணம் மாத்திரம் இல்லாமற் போகவில்லை. ஸாம்ராஜ்யத்
5 தின் எல்லைக்கு வெகு அருகிலுள்ள ரேய்ச்சூர்க் கோட்டையும், முதிகல்லுக் கோட்டையும் பீஜப்பூர் சுல்தான் வசம் இன்னும் இருந்தனவன்றோ? அவைகளையும் கைப்பற்றித் தம் வசம் செய்துகொண்டா லன்றி ஸாம்ராஜ்யத்துக்குத் தீங்கு என்றும் நேரிடாது என்று சொல்
10 வதற்கில்லை. ஆதலின் 1520-ஆம் வருஷத்தில் கிருஷ்ண தேவர் ஒருபெரிய படையுடன் சென்று மேற்சொன்ன இருகோட்டைகளையும் பிடித்துக்கொண்டு, சுல்தானை முறியடித்து பீஜப்பூரை விட்டு ஓடும்படி செய்தனர். பிறகு சுல்தானுடன் ஓர் உடன்படிக்கை செய்து
15 கொண்டதனால் இருவரும் சிநேகமாய்ச் சிலவருஷங்கள் இருந்தார்கள்.

## XXXI. திம்மரசின் ராஜ்ய நிர்வாகம்.

மூன்றுதலைமுறையாக அமைச்ச கௌரவம்பெற்று அரசாங்கத்தை இயற்றிவந்த திம்மரசின்பெருமையைப் போற்றுதார் ஒருவருமிலர். இவரது கியாதியும், விஜய நகர ஸாம்ராஜ்யத்தின் மேன்மையும் இந்தியதேச முழுதுமே யன்றிப் பிறதேசங்களிலும் பரவியது. பிரஜைகள் செவ்வனே சுகமெய்தினர். உட்கலகம் யாதொன்று மில்லை. பிறதேசத்து மன்னர் இவரிடம் வெகு மரியாதையுடன் நடந்துகொண்டனர். ஜனங்களது நன்மையின்பொருட்டு வாய்க்கால்களும், தடாகங்களும், கிணறுகளும் வெட்டப்பட்டன. பிரயாணிகளது சௌகரிய நிமித்தம் சத்திரசாவடிகள் கட்டப்பட்டன. புதிதாய்க் கோவில்களும், மந்திரங்களும் நிருமிக்கப்பெற்றன. தேவஸ்தானங்கள் சீர்திருத்த மடைந்தன. ஸாம்ராஜ்யத்தினுள்ள நன்செய், புன்செய் நிலங்கள் சரியாய் அளக்கப்பட்டு அவைகளுக்கு உரியவர் யாவரென ஒழுங்காய் நிர்ணயிக்கப்பட்டன. அநாவசியமெனக் கருதக்கூடிய வரிகள் நீக்கப்பட்டன. உதாரணமாகத் தம் மக்களுக்கு விவாகம் இயற்றும் ஒவ்வொருவருங் கொடுக்க வேண்டியதாயிருந்த தீர்வை அடியோடு ஒழிக்கப்பட்டது. பிற நாட்டார்களுடன் வியாபாரம் மிகவும் பெருகியது.

பிரதான நகரமான விஜயநகரமோ எல்லாச்செல்வங்களும் மிகுந்து, சகல சௌகரியங்களும் நிறைந்து, சான்றோர்கள் உவந்து வசிக்கப்பெற்று விளங்கியது. விசாலமான வீடுகளும், உயர்ந்த கோபுரங்களும், அழகமைந்த மாளிகைகளும், அகன்ற தடாகங்களும் ரமணீயமான உத்தியானவனங்களும் நிறையப்பெற்ற அந்நகர்

மேற்றிசை நாட்டினின்றும் வந்த ஐரோப்பியர்களுக்கும் அச்சரியத்தை உண்டாக்கியது. 'இதுபோன்ற நகரம் வேறெங்கும் இன்று' என்றனர் அவர்களுள் பலர்.

திம்மரசுக்கு மதத்துவேஷம் என்பதே யில்லை. வைஷ்ணவர்களென்றுஞ் சைவர்களென்றும் அவர் வித்தியாசம் யாதொன்றும் பாராட்டுவதில்லை. ஜைனர்களுங்கூட அவரால் ஆதரிக்கப்பட்டு வந்தனர். மகம்மதியர்கள் அவரைத் தங்களுக்குச் சிநேகிதர் என்றே மதித்து வந்தனர். போர்த்துகல் தேசத்திலிருந்து வந்த ஐரோப்பிய வியாபாரிகளிடத்தும் அவர் பிரியமாய் நடந்துகொண்டனர். ஆகவே ஸாம்ராஜ்யத்தில் எவ்வகுப்பின ராயினுஞ் சரி, எச்சமயத்தின ராயினுஞ் சரி, எத்தேசத்தவ ராயினுஞ் சரி, யாவராலும் அவர் வெகுவாய் நன்கு மதிக்கப் பெற்றார்.

தாம் பிரஜைகளின் க்ஷேமத்தின்பொருட்டே யுள்ளோம் என்றும், கதிரவன் தன் கிரணங்களால் நீரைப் பருகித் திரும்பவும் அந்நீரைப் பூமியின் நன்மையின் பொருட்டுப் பதின்மடங்காய் மழை ரூபமாய்ப் பொழிவதுபோலப் பிரஜைகளிடம் இருந்து வசூலித்த பணத்தை அவரது சுகத்தை விருத்தி செய்யவே செலவிட வேண்டும் என்றும், அவர் நினைந்து அதற்கு இயைந்தவாறே எப்பொழுதும் ஒழுகிவந்தார்.

---

## XXXII. திம்மரசின் அந்தியகாலம்.

புருஷார்த்தங்கள் யாவும் ஒருங்கே கிடைக்கப் பெற்ற தேவராயர், சிலவருஷங்கள் வெகு விமரிசையாய் அரசாட்சி நடத்திவந்தனர். திம்மரசின் மனப்பூர்வமான துணையைப்பெற்ற அவர்க்கு, இது ஓர் அதிசய

மாகுமோ? ஆயினும் ஈசனது திருவுள்ளத்தை யாரே அறியற்பாலர்? வெகுபுத்திவாய்ந்த தேவராயருக்கும் மனநிலை மாறுபட்டது. இவருக்கு ஒரே புதல்வன். அவனுக்கு இக்காலத்தில் சுமார் ஆறு வயது. தமக்குப் பின் அச்சிறுவனுக்கு ஸாம்ராஜ்யம் கிட்டுமோ எனும் ஓர் அச்சம் அவர் மனதில் எழுந்தது. 'கலக்கத்தைக், கையாளுக் கொள்ளாதா மேல்' என்ற உண்மையை அடியோடு மறந்தனர். மேன்மேலும் நினைந்து நினைந்து மனத்தைப் புண்படுத்திக்கொண்டு தம் மைந்தனுக்குச் சிம்மாசனங் கிடைக்காமலே போய்விடுமென்று நிச்சயஞ் செய்துகொண்டார். ஆதலின் தாம் உயிரோடிருக்குங் காலத்தே, அவனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்துவிடவேண்டுமென ஆசை கொண்டார். திம்மரசிடம் அவர் தமது எண்ணத்தைத் தெரிவிக்க அவர் அதை அங்கீகரிக்கவில்லை. ராயர் தாமாகவே ராஜ்யாதிகாரத்தைவிட்டுவிடுவதில் திம்மரசுக்குக் கொஞ்சமும் சம்மதமில்லை. இதனைக் கேட்ட தேவராயருக்கு முன்னிருந்த அவா மிகுதியும் பெருகிற்று. காரணம் என்னவெனில், தமக்குப்பின் தமது குமாரனுக் கின்றித் திம்மரசு தம் மகனுக்குப் பட்டம் சூட்டவேண்டுமென்ற கெட்ட எண்ணத்துடனேயே, தம் அபிப்பிராயத்துக்கு இணங்கவில்லை என்ற தீய எண்ணம் கிருஷ்ண தேவராயர் கொண்டார். "ஆசையெனும் பெருங்காற்றூடிலவம் பஞ்செனவு மனதலையுங் காலம், கற்றதுங்கேட்டதுந் தூர்ந்து நிற்பர் அந்தோ" எனத் தாயுமானவர் கூறியதும் உண்மையே யன்றோ! பேராசையின் வசப்பட்ட தேவராயருக்குத் தம்மிடம் தாயினும் இனிதே அன்புகாட்டித், தந்தையினும்மிகவே பரிவுடன் தன்னை

ப்போற்றிக், குருவினும் அதிகமாய்க் கலைகள் பயிற்றி, உடல் இரண்டெனினும் உயிரொன்றுமெனை யாவரும் 35 போற்றுமாறு ஒழுகிவந்த திம்மாசிடத்தே வெகுவிபரீதமான சந்தேகங்கள் உண்டாயின. ஆதலின் அவரது யோசனையை அசட்டைசெய்து தமது குமாரனை வெகு ஆடம்பரத்துடனும், கோலத்துடனும் சிம்மாசனம் எற்றுவித்துப் பட்டாபிஷேகத்தையுஞ் செய்வித்தனர். 40 அவ்வபிஷேக சம்பந்தமான உற்சவங்கள் எட்டுமாத காலம் விஜயநகரத்தில் நடந்தேறின. ஆயினும் என்ன!

"மணவணி யணிந்த மகளி ராங்கே
பிணவணி யணிந்து தம் கொழுநரைத் தழுவி
உடுத்த ஆடை கோடி யாக
முடித்த கூந்தல் விரிப்பினும் விரிப்பர்"

என்றவாறே, அச்சிறுவன் சிம்மாசன மேறின சிலமாதங்களுக்குள் ஏதோ வியாதியினுல் பீடிக்கப்பட்டு இறந்து போனுன்.

45 'போதாதகாலத்தில் பழுதையும் பாம்பாகும்' என்ருெரு பழமொழியுண்டு. தற்காலத்தில் திம்மாசுக்குக் காலம் வெகுவிபரீதமா யிருந்ததென்றே சொல்லவேண்டும். எவரோ சில வீணர்கள் தேவராயரிடஞ் சென்று திம்மாசின் சூழ்ச்சியாலே விஷமிடப்பட்டு அரசன் 50 இறந்துபோனுன் என்றுரைத்தனர். இதைக் கேட்ட தேவராயரது உள்ளம், நெய் பெய்யப்பெற்ற அக்கினி போல் கோபத்தால் பொங்கியது. சற்றேனும் ஆலோசியாது அவரையும், அவரது புதல்வன் முதலிய நெருங்கிய பந்துக்களையுஞ் சிறையில் அடைப்பித்தனர். 55 அந்தோ' நாற்பது வருஷகாலம் விஜயநகரத் தாசர்க

ளுக்குத் தம் ஆவியையும், உடலையும் அர்ப்பணஞ்செய்து ஊழியஞ்செய்த திம்மாசுக்கு இதுவும் ஓர் கைம்மாறே!

சிறையில் புகுந்த பிறகேனும் தம்கஷ்டம் திம்மாசுக்கு நீங்கியதோ? இல்லை, இல்லை. அநுபவ ஞானம் சிறிது மில்லாத அவரது மகன் சிறையினின்றும் தப்பியோடிப்போய்ச் சில போர்வீரர்களைத் திரட்டி அவர் களுடன் கிருஷ்ணதேவராயரை எதிர்க்க வந்தனன். அவர் ஒரு சேனையை யனுப்பி அச்சிறுவனை முறியடித்து மறுபடியும் அவனைச் சிறையில் அடைப்பித்தனர். அல்லாமலும் தகப்பன், பிள்ளை இருவரது கண்களையும் பிடுங்கச் செய்தனர். இதனினுங் கொடிய செயல் வேறுமுண்டோ! காலத்தின் கொடுமைக்கு வேறு அத்தாட்சியும் வேண்டுமோ! 60 65

கண்ணிழந்த திம்மாசு பிறகு மூன்று வருஷகாலம் சிறையிலிருந்து கடைசியில் தேகம் துறந்தனர். ஆ! என்ன கஷ்டம்! 70

---

## XXXIII முடிவுரை.

சகலவித போகமும், சொல்லவொண்ணுச் செல்லுகையும், ஒப்பில்லா மாட்சியும், குறைவில்லாக் கீர்த்தியும், 'எட்டுக்கண்ணும் விட்டடிக்கும்' என்னுமாறு அதிகாரமும் வாய்ந்த திம்மாசுக்கும் அந்திய காலத்தில் இத்தகைய கஷ்டமும், தீமையும் நேரிடல் தருமமாமோ! என நாம் ஆராய்தல் சகஜம். ஆயினும் நம் சிற்றறிவுக்குப் புலனும் வண்ணம் காரணம் தெளிந்தறிதல் சாத்தியமன்று; என்றாலும், 5

'கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கு மெய்யன்,

காரணமின்றியோ, குரூர சித்தத்துடனே உயிர்களை
10 வாட்டுவான்' என மதித்தல் மாத்திரந் தகுதியன்று.
அவ்வாறு என்றாது, எதுவரினும் அது, ஆன்ம லாபத்தைக் கருதியே வருமென உறுதி கொண்டு, எல்லாம் வல்ல இறைவனிடம் அன்பு மிகுந்து.

தருதுயரம் தடாயேலுன் சரணல்லால் சரணில்லை
விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக் கோட்டம்மானே
அரிசினத்தா லீன்றதாய் அகற்றிடினு மற்றவள் தன்
அருள் நினைந்தே அழுங்குழவி யதுவேபோன் றிருந்தேனே.
வாளால் அறுத்துச் சுடினு மருத்துவன் பால்
மாளாத காதல்நோ யாளன்போல் மாயத்தால்
மீளாத் துயர்தரினும் வித்துவக்கோட் டம்மாநீ
ஆளா வுனதருளே பார்ப்பன் அடியேனே.
எனத்துதித்து அவனடி பணிந்து வாழ்தலே நலம்.

---

## ஷாப்ட்ஸ்பரி பிரபு-ஓர் தேசோபகாரி.

## 1804—1885

### 1 இளமைப் பருவம்.

இவர் 1801-ஆம் ஹூ எப்ரல் மாதம் 28-ஆம் தேதி லண்டன்மாநகரில் பிறந்தார். தொன்றுதொட்டுப் பிரபுத்துவம் வகித்த பரம்பரையைச் சேர்ந்தவர்; இவரது தந்தை வெகு சமர்த்தர்; புத்தி நுட்பம் வாய்ந்தவர். ஆயினும் ராஜகிய விஷயங்களில் மிகவும் பாடுபட்டு வந்தவ ராகையால் தமது குமாரரது பாலிய நடவடிக்கைகளைக் கவனித்து, அவைகளைச் சீர்திருத்தி, அவருக்கு நன்னடக்கை படியுமாறு பிரயத்தனங்கள் யாதொன்றுஞ் செய்யவில்லை. இது விஷயத்தில் இச்சிறுவரது தாய்க்கும் அதிக ஊக்கமிருந்ததாகத்தெரியவில்லை. இவ்வா றிருப்பினும், குழந்தை மாத்திரம் சுவபாவமாகவே நல்லவ ராகையால் நெறி தவறாமலே நடந்து வந்தார். அன்றியும், வீட்டில் வெகு காலமாகப் பணிவிடை செய்துவரும் மேரியா மில்லிஸ் என்ற ஓர் கிழவி, இக்குழந்தையினிடம் விசேஷ அன்பு பாராட்டி, அடிக்கடி இவருக்கு நற்புத்தியும், ஈசுவர பக்தியும் புகட்டிவந்தாள். இந்த ஸ்திரீ மகா ஸாத்வீ. கபடமற்ற மனதும், மாசிலா ஹ்ருதயமும், இனியசொல்லும், ஒழுக்கமும் வாய்ந்தவள். ஆகையால் குழந்தையும் இவளிடத்தில் பிரியம்மிகுந்து, இவள் கூறிய வண்ணம் நடந்துவருவர். காலையிலும், மாலையிலும் குழந்தையினிடஞ் சென்று கடவுளைத்தொழுவோமெனச்சொல்லி, மண்டிபோட்டு

உட்காரச்செய்து, அவரது கரங்களைக் கூப்புவித்து, நியாயபரமான வாக்கியங்களைச் சொல்லச் செய்வாள்;
25 தன் ஆயுள் நாள் முழுதும் ஈசுவரனைத் துதிக்கும்போ தெல்லாம் இவ்வாக்கியங்களையே இவர் சொல்லிவந்தா ரென்றால் மேரிய மில்லிஸின் பெருமையைச் சொல்லல் வேண்டுமோ !

ஏழாவது பிராயத்தில் இக்குழந்தையைப் பிதா,
30 மானர் ஹவுஸ் என்னுமிடத்திலுள்ள கல்விச்சாலைக்கு அனுப்பினர். அது ஒரு போர்டிங் ஸ்கூல். அதாவது பிள்ளைகள் பாடங்கள் படிப்பது மல்லாமல் உண்பதும் உறங்குவதும் அங்கே தான். அக்காலத்தில், கலா சாலைகளில் மிகவும் அதிகமாகக் கற்பிக்கப் பட்டவை
35 கள், லத்தீன், கிரீக்கு என்ற இரண்டு பாஷைகளே. சுவபாஷையாகிய இங்கிலீஷுக்கு விசேஷ கௌரவ மில்லை. பூசாஸ்திர, தாவர சாஸ்திர, ரஸாயன சாஸ்திர சம்பந்தமான படிப்பு மிகக்குறைவு. மேற்சொல்லப் பட்ட லத்தின், கிரீக்கு பாஷைகளிலுள்ள பாடல்களை
40 மொழிபெயர்ப்பதே முக்கிய நோக்கமாகக் கொண்டு மாணுக்கர்கள் கல்வி பயின்று வந்தார்கள். இவ்வாலி பரும் அவ்வாறே இப்பாஷைகளைப் படித்துவந்தார். ஆயினும், இப்பள்ளிக்கூடத்தில் இவருக்கு அதிகவிருப் பமில்லை. கூடப்படிக்கும் இதர பிள்ளைகள் இவரை
45 அடிக்கடி பிடித்துத் துன்புறுத்தினர்கள். போஜனமும் சரியாகக் கிடைக்கவில்லை. பிற்காலத்தில் இக்கலா சாலை ஞாபகம் வரும்போ தெல்லாம் இவருக்கு மயிர்க் குச்செறிவும் வெறுப்பும் உண்டாகுமாம். ஒருநாள், தமது மாற்றுந்தாயென மதித்து மிகவும் நன்றிபாராட்டி
50 வந்த மேரிய மில்லிஸ், இறந்தனள் என்றசெய்திவந்தது. அதைக்கேட்டதும், இச்சிறுவர் அடைந்த துக்கம் இத்

தன்மைய தெனச் சொல்லல் அரிது.'என்தாயே! இனி
உன்னை யொத்த நண்பரை எங்குக் காண்பேன்! எனக்
கதறினர். இறக்குந் தருணத்திற் கூட மேரியமில்லிஸ்,
குழந்தை ஞாபகம் மறவாதவளாய்த் தனது பொன் 55
கடிகாரத்தை ஒருவரிடங் கொடுத்து, 'இதை என்
குழந்தையினிடஞ் சேர்ப்பி' என்றனள். ஷாப்ட்ஸ்
பரி பிரபுவும் அக்கடிகாரத்தைத் தம் ஆயுள் நாள் முழு
தும் ஜாக்கிரதையாகக் கூடவே வைத்திருந்து இஃது
என் அருமை நண்பர் அளித்தபரிசு' எனத் தம் சுற்றத் 60
தார்களுக்குஞ் சினேகிதர்களுக்கும் மிகுந்த களிப்புடன்
சுட்டிக் காண்பிப்பாராம். K. R. Rajam

பன்னிரண்டாவது வயதில் இவர் மானர்ஹவுஸ்
ஸ்கூலைவிட்டு மேற்படிப்புக்காக ஹாரோ பட்டணஞ்
சென்றார். இங்கே டாக்டர் பட்ளர் என்ற கல்விமான் இவ 65
ரைத் தனது அகத்தில் ஏற்றுக்கொண்டார். இவருடன்
வேறு சில உயர்குலத்துச் சிறுவர்களும் கல்விப் பயிற்சி
செய்து வந்தார்கள். மானர் ஹவுஸ் ஸ்கூலிற் போலல்
லாமல், இச்சிறுவர்கள் நன்னடக்கை யுடையவர்களாய்
ஷாப்ட்ஸ்பரியுடன் சினேகமா யிருந்தார்கள். அதனல் 70
இவர் சுலபமாய்ப் பாடங்களைக் கற்று விரைவில் மனத்
தேர்ச்சி யடைந்தார். அதுவுமின்றி, பக்கத்திலுள்ள
காடுகளிலும், தோட்டங்களிலும், கிராமங்களிலும்
அடிக்கடி உல்லாஸமாகக் காலங்கழிக்க நேரிட்டதனல்
இவர் ஈசுவர சிருஷ்டியின் அற்புதங்களை யெல்லாம் 75
நன்ருய்த் தெரிந்துகொண்டது மல்லாமல் பூமியிலுள்ள
ஜீவராசிக ளெல்லாம் கடவுளின் படைப்புப் பொருள்
களாதலால் அவைகளுக்குத் தீங்கியற்றல் மனிதனுக்கு
த்தகாது, தம்மாலியன்றவளவு அவைகளை அன்புடன்

80 பாதுகாப்பதே கடமையென்ற உயரிந்த ஞானத்தை யும் பெற்றார்.

ஒருநாள் ஹாரோ பட்டணத்தில் ஒருபெரியதெரு வின் வழியாய் ஷாப்ட்ஸ்பரி தனியாய்ப் போய்க்கொண் டிருந்தார். அகஸ்மாத்தாய்த் திடீரென்று 'ஹோ' என்ற 85 கூச்சலும், கைகொட்டலும், கட்குடியர்களது பாட்டுக் களும் அவரது காதில் விழுந்தன. சத்தம் வந்தவழியே சென்று பக்கத்திலுள்ள சந்திற் பார்க்கையில், மது பானத்தால் மயக்கங் கொண்ட சிலவெறியர்கள், மேற் கூறிய சத்தங்களைச் செய்து பிரேதமடங்கிய பெட்டி 90 யொன்றைத் தூக்கிக்கொண்டு போவதைக் கண்ணுற் றார். இறந்தவனது உறவினரோ, சினேகிதரோ எவரே னும் கூடவிருந்ததாகத் தோன்றவில்லை. சந்தின்மூலை திரும்பினதும், அவ்வெறியர்கள் அப்பெட்டியைக் கீழே யெறிந்துவிட்டு, முன்னிலும் மிகுதியாய் ஆரவாரஞ் 95 செய்து அகோரமான சில பாட்டுக்களைப் பாடத் தொடங்கினார்கள். இதைப்பார்த்த ஷாப்ட்ஸ்பரி மனங் கரைந்து மிகத்துயரமுற்று, 'அந்தோ! இறந்தவன் அகதியாதலாலல்லவோ அவனது பிணத்தை யிவ்வாறு அவமதிக்கிறார்கள். அவனையும் ஈசன் படைக்கவில் 100 லையோ! அவரது சிருஷ்டிக் கிரமத்தில் எளியர்கள் இருப்பது சகஜமாயினும், இறந்தவனைப் போன்ற திக் கற்றவர்களும் பூமியில் திரிதல் வேண்டுமோ! தனிகர் கள் தயைமிகுந்து தங்கள் கடமையைச் செய்தால் வறுமையின் கொடுமை நீங்காதோ!' என ஆலோசித்து, 105 'இனி என் ஆயுள்நாள் முழுதும் என்னாலியன்றவளவு ஏழைகளின் கொடுமையை, இந்நாட்டார்களுக்கு வற் புறுத்தி அவர்களது நிலைமையைச் சீர்திருத்தமுயல்

வேன்; இது ஸத்தியம்' என்று தம்மனத்தில் உறுதிப்பாடு செய்து கொண்டார்.

பதினறுவது பிராயத்தில் ஹாரோ பட்டணத்தை விட்டு நீங்கி இரண்டு வருஷகாலம் டார்பிமாகாணத்தில் மதபோதகாசாரியர் ஒருவரிடம் உயர்தரக் கல்வி பயின்று வந்தார். 1819ஆம் வரு ஆக்ஸ்பர்ட் க்ரைஸ்ட் சர்ச் கலாசாலையிற் சேர்ந்து, 3வருஷகாலம் படித்து பி. ஏ. பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினர். 110

---

## II யௌவனதசை.

கலாசாலையை விட்டுத் திரும்பித் தமது ஊருக்கு வந்த காலத்து ஷாப்ட்ஸ்பரிக்கு வயது இருபத்திரண்டு. தந்தை மிகுந்த செல்வரா யிருந்ததனுல் இவருக்கு உடனே வேலையிற்புகுந்து குடும்ப காலக்ஷேபத்துக்குத் திரவியம் சம்பாதிக்கவேண்டிய அவசியம் இல்லா திருந்தது. தமது மனோபாவங்களைச் சாவதானமாக ஆலோசித்து நன்றுபுணர்ந்து, எவ்வித மார்க்கங்களில் பிரவர்த்தித்தால் தமது மனோரதங்களைப் பூர்த்தி செய்வதுமல்லாமல் லோகோபயோகமான காரியங்களையுஞ் சாதிக்கலாம் என்று நிதானித்து, அதற்கு அநுகுணமான பிரயத்தனங்கள் செய்வதற்கு அவருக்குத் தக்க அவகாசமிருந்தது. அவ் வவகாசத்தை ஷாப்ட்ஸ்பரி வீண்போக்கவில்லை. ஹாரோவில் இவர் செய்துகொண்ட த்ருட ஸங்கற்பத்தைப் பற்றி ஏற்கெனவே சொல்லியிருக்கிறோம். அச்சங்கற்பமே மேன்மேலும் இவரது மனத்தைக்கவர, பார்லிமெண்ட் ஸபையில் மெம்பராகி, ஏழைகளின் நிலையைப் பண்படுத்துவதும், நாட்டில் 5 10 15

மதம் விருத்தியாகி, ஈசுவரபக்தி செழித் தோங்கச் செய்வதும் ஆகிய இவற்றை உள்நோக்கமாகக் கொண்டு பாடுபடுவதே தமது கடமையாகுமெனத் துணிந்தார்.
20 இக்காலத்தில் இவரது மனத்தில் தோன்றிய எண்ணங் கள் இத்தன்மையன வென இவரது தினசரிப் புத்தக மூலமாய்த் தெரிய வருகின்றது. "ஈசுவர கிருபை யால் என் செல்வத்தைப் பூமியில் சுகவிருத்தியின் பொருட்டும், மதச் செழிப்பின் பொருட்டுமே செலவு
25 செய்ய வேண்டுமெனத் தோன்றுகின்றது" என்றும், "பிறர் பரிகசித்தால்தான் என்ன, அவமதித்தால்தான் என்ன, தர்மத்தையே கடைப்பிடித்து ஒழுகுவதல்ல வோ மனிதன் கடமை; என் ஆசையெல்லாம் ஈசுவர கிருபைக்குப் பாத்திரமாகி நாட்டுக்கு உபயோகமாயி
30 ருத்தலே" என்றும், இப்புத்தகத்தில் கண்டிருக்கிறது.

1826-ஆம் வருஷத்தில் உட்ஸ்டாக் மாகாணத்து ஜனங்கள், இவரைத் தங்கள் பிரதிநிதியாகப் பார்லி மெண்டுக்கு அனுப்பினர்கள். அச்சபையில் முதலில் ஒரு வருஷகாலம் இவர் ஒன்றையுங் கவனியாமலே
35 இருந்துவிட்டார். அடுத்த வருஷம் கார்டன் என்ற ஓர் மெம்பர் சித்தப்பிரமை கொண்டவர்களுக்கென்று ஏற் பட்ட வைத்திய சாலைகளின் சீர்திருத்த சம்பந்தமாய் ஓர் மசோதா கொண்டுவர, அம்மசோதாவைப் பார்லி மெண்டார்கள் அங்கிகரித்தல் மிகவும் நியாயம் என
40 ஷாப்ட்ஸ்பரி வற்புறுத்திப் பேசினர். லண்டன் நகரத் திலும், வேறு சில விடங்களிலுமுள்ள சிகித்ஸா சாலை களை நேரே போய்ப்பார்த்து அங்குள்ள குறைகளை வெளிப்படுத்தினர். பிரதிவாரமும் சனிக்கிழமை சாயங் காலம் முதல் திங்கட்கிழமை காலைவரையில் விடுமுறை

யாதலால் இந்தச் சிகித்ஸாசாலைகளில் வைத்தியர்களும், 45
வேலையாட்களும் அக்காலங்களில் இருப்பதில்லையாம்.
ஆனால் அங்கிருக்கும் சித்தநோயாளிகள் ஒருவரை
யொருவர் வருத்தாமலிருக்கும் பொருட்டு அவர்கள்
ஒவ்வொருவரையும் சங்கிலிகளால் ஒவ்வோரிடத்தில்
கட்டி, கைக்கெட்டிய தூரத்தில் கொஞ்சம் ஆகாரத்தை 50
வைத்துவிட்டுப் போய் விடுவார்களாம். அன்றியும்,
வெறிபிடித்த பைத்தியக்காரர்களையுங் கொஞ்சம் சாந்
தமா யிருப்பவர்களையும் பிரித்துத் தனித்தனி இடங்
களில் வைப்பதில்லையாம். அச்சிகித்ஸா சாலைகளும் மிக 55
அசுத்தமாகவும், துர்நாற்றம் நிரம்பியும் இருக்குமாம்.
இதையெல்லாம் பார்த்த ஷாப்ட்ஸ்பரி மிக்க விசன
முற்றவராய் மேற்சொன்ன மசோதாவைப் பார்லி
மென்டார்கள் அங்கீகரிக்கும்படி செய்வதற்குத் தகுந்த
முயற்சிகளை ஊக்கத்துடன் செய்ய, 1828-ஆம் வரு 60
ஷத்தில் அந்த மசோதா ஏற்றுக் கொள்ளப்பட்டது.
பிறகு இவரது விடாமுயற்சியாலேயே 1845 - ஆம்
வருஷத்தில் வேறொரு சிறந்த சட்டமும் இறற்றப்பட்
டது. அச்சட்டம் காரணமாகச் சித்தப்பிரமங்கொண்ட
நோயாளிகளுக்கென்றே ஒரு கோடி பவுன் செலவு 65
செய்து, அங்கங்கே சிகித்ஸா சாலைகள் அமைக்கப்பட்
டன. அவைகள் சரியாய் நடக்கும் பொருட்டுப் பிரதி
வருஷமும் 15 லக்ஷம் பவுனும் கவர்ன்மெண்டாரால்
அளிக்கப்பட்டது.

இவ்வருஷத்திலேயே இவருக்கு நம் இந்திய தேச 70
சம்பந்தம் கொஞ்சம் ஏற்பட்டது. 1858-ஆம் வருஷத்
துக்கு முந்தி ஆங்கிலேயர்கள் இத்தேசத்தில் தங்கள்
ஆளுகைக்கு உட்படுத்திய மாகாணங்களெல்லாம் பிரிட்
டிஷ் அரசாட்சிக்கு நேரே கீழ்ப்பட்டவைகளல்ல. இங்கி

75 லாந்து தேசத்தில் ஏற்பட்ட ஓர் வர்த்தக சங்கத்தா ராகிய ஈஸ்ட் இந்தியா கம்பெனியாருக்குச் சொந்த மானவை. ஆயினும் இந்தக் கம்பெனியார்கள் சரிவர இந்திய மாகாணங்களை ஆண்டுவருமாறு தகுந்த யோசனைசொல்லப் பார்லிமெண்டார்கள் ஓர் சிறு கமிட்டி 80 ஏற்படுத்தி யிருந்தார்கள். அக்கமிட்டியில் ஓர் மெம்பராக நம் ஷாப்ட்ஸ்பரியைத் தேர்ந்தெடுக்க, அவரும் இவ்வதிகாரத்தை இரண்டு வருஷம் நடத்தினர்.

1829 ஆம் வருஷம் தாம் பிறந்த நாளாகிய எப்ரல் மாதம் 28-ஆம் தேதி ஷாப்ட்ஸ்பரி பின்வருமாறு தம் 85 தினசரிப் புத்தகத்தில் எழுதி யிருக்கிறார். "என்ன ஆச்சரியம்! கடவுள் எனக்கு எவ்வளவோ நன்மைகளை யெல்லாம் அளித்திருக்கிறார்; கோடிக் கணக்கான ஜனங்கள் நிறைந்த இந்திய தேசத்துக்கு எனது சிரத்தையினாலோ, அசிரத்தையினாலோ சுகமோ, துக்கமோ 90 ஏற்படும்படியான பதவியி லல்லவோ என்னை வைத்திருக்கிறார். நான் அப்பதவியில் எவ்வாறு இனிநடந்து கொள்ள வேண்டுமென யோசிப்பேன். முதன்மையாய்க் கவனிக்க வேண்டிய விஷயம் யாதென்றால், எக்காரியம் செய்யப் புகினும், சர்வேசுவரனது கீர்த்தி 95 யும், பெருமையும் செழித்தோங்கப் பார்த்தல்; இரண்டாவது, மானிட கோடிகளின் சுகத்தை விருத்தி செய்தல்; இவ்விரண்டு காரியங்களும் நிறைவேறுமாறு விடாமுயற்சியுடன் உழைத்தல் வேண்டும். பிறர் மெச்சிக் கொள்ள வேண்டுமென்ற அற்ப ஆசைகூடாது. கம்பீர 100 புத்தியுடனிருந்து, விஷயங்களைத் தீர விசாரித்தறிந்து நடுவு நிலைமை தவறாது நடக்க வேண்டும்" என்பது. இவ்வித உள்நோக்கங்களுடன் இருந்து இடைவிடாது

ஜனங்களுக்கு நன்மை செய்து வந்த ஓர் பிரபுவை ஜனங்கள் மிகக் கொண்டாடித் துதித்தார்கள் என்றால் அது ஓர் ஆச்சரியமோ? 105

1830-ஆம் வருஷம் டார்ஸட் மாகாணத்து ஜனங்கள் இவரைத் தங்களது பிரதிநிதியாய்ப் பார்லிமெண்டுக்கு அனுப்பினார்கள். அவ்வருஷமே இவர் எமிலி கௌபர் என்ற ஓர் பெண்மணியை மணம் புரிந்தார். இவ்வம்மையும் உயர்குடிப்பிறந்தவளே. சிறந்த உத்தம 110 குணங்களையுடையவள். தன் கணவாது மனப்போக்கு எத்தன்மையதோ அவ்வண்ணமே நடந்துகொள்ளும் இனிய சுபாவ முடையவள். கோபம் என்பதே அவளிடத்தில்லை. தருமத்திலேயே எப்போதும் சிந்தையுள்ளவள். கணவர் புரிந்த நற்காரியங்களி லெல்லாம் அவ 115 ருடன் முன் நின்று தைரியம் சொல்லி, பிறர் அவமதித்தால் அது துச்சம் எனத் தேறுதல் சொல்லி அந் நற்காரியங்களில் ஊக்கத்தை விருத்திசெய்து வந்தாள். 'தருமத்தைச் செய்வதே நம் கடமை. அவ்வாறு செய்வதால் ஏற்படும் சுக துக்கங்களை நாம் கவனிக்கவே 120 கூடாது. கடைசியில் ஜயம் பெறுவோம் என்பதில் ஐயமுமில்லை', என்று அடிக்கடி தன் கணவருக்கு உரைத்தல் அவளுக்கு வழக்கமாம். அவ்வாறு நாற்பது வருஷகாலம் பாலுந் தேனும்போல மனமொத்து இல்லறம் நடாத்தி, ஆறு புதல்வர்களையும், நான்கு புதல் 125 விகளையும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்து கடைசியில் தேக வியோகம் ஆயினள். தம் அருமை நாயகியை நினைக்கும்போதெல்லாம் ஸாட்ட்ஸ்பரி பிரபு மனம் பூரித்துக் கண்ணீர் ததும்பி, கைகூப்பி, 'இறைவா! நீர் எனக்குச் செய்த நன்மை எத்தன்மையதென என்றால் 130

சொல்லப்படுமோ! இல்லற வாழ்வில் என்னிலும் மே
லான சுகத்தை அநுபவித்தவரு முண்டோ! என் கண்
மணியை எனக்கு நீர் கருணைபுரிந்தது அதிசயமன்றோ!
என ஆனந்த பரவசராய் ஈசனைத் துதிப்பார்.

---

## III. பரோபகார முயற்சிகள்.

இனி ஷாப்ட்ஸ்பரி பிரபு, பார்லிமெண்டுமெய்பரா
ய்ப் பாடுபட்டு நிறைவேற்றிய சில முக்கிய சீர்திருத்தங்
களைக் குறித்து விவரமாகச் சொல்லுவோம்.

இவரது காலத்தில் கைத்தொழில் மிகுந்த லண்
5 டன், மான்சஸ்டர், பர்மிங்காம் முதலிய பட்டணங்கள்
மேன்மேலும் விருத்தியாய்க் கொண்டே வந்தன. யந்
திரசாலைகள் ஏராளமாகிக் கைத்தொழிற் சாமான்கள்,
விசேஷமாய்ச் செய்யப்பெற்றுப் பிறதேசங்களுக்கு
ஏற்றுமதி அதிகமாயிருந்தபடியால் வர்த்தகர்களும், யந்
10 திரசாலைகளுக்கு உரிமைபெற்றவர்களும் விசேஷலாபத்
தை அடைந்து வந்தார்கள். அது காரணம்பற்றி இங்
கிலாந்து தேசமே, பணம் பெருத்த சீமையெனப் பிற
தேசத்தார் கொண்டாடும்படியான கௌரவத்தையும்
அடைந்தது. ஆயினும், ஜனசமூகத்தினுடைய சுகம்
15 மாத்திரம் அதிகரித்தது என்று சொல்வதற்கில்லை. யந்
திர சாலைகள் மிகவே, அச்சாலைகளில் வேலையாட்களும்
அதிகரித்தனர். இவர்களெல்லோரும் தாங்கள் வேலை
யிலமர்ந்திருக்கு மிடங்களுக்கு அருகிலேயே இருக்க
வேண்டியிருந்தமையால், அச்சாலைகளுக்குச் சுற்றுப்
20 பக்கங்களிலெல்லாம் வீடுகள் ஏற்பட்டு, ஒவ்வொரு வீடு
களிலும் ஏராளமான ஜனங்கள் குடியிருக்க நேர்ந்தது.

வெற்றிட மென்பதே கிடையாது. வீதிகளும் மிக நெருக்கமாய் விட்டன. ஆகையால் வெளிச்சமும், சுத்தவாயுவு மில்லாமற் போக யந்திரசாலைப் புகையும், கரியமில வாயுவும் கலந்தகாற்றையே உட்கொள்ள நேரி ட்டதனல் ஜனங்களுக்கு ஆரோக்கியம் மிகக் குறைந்து வியாதிகள் அதிகரித்தன. 25

இதுவுமன்றி, இவ்யந்திர சாலைகளில் கூலியாட்கள் செய்ய வேண்டியிருந்த வேலையும் மிகக் கடுமையாயிருந் தது. தினந்தோறுமே காலை 6-மணி முதல் 12-மணி நேரம் வரையில் அவர்கள் அச்சாலைகளில் வேலையில் அமர்ந்திருந்தார்கள். காலை சுமார் 8-மணிக்குமேல் அரை மணியும், மத்தியானத்தில் 12-மணிக்குமேல் ஒரு மணியும் தவிர வேறு விடு முறைக்காலமே கிடையாது. ஆகாரமும் போதுமான வளவு கிடைக்காது. இங்கி லாந்து போன்ற குளிர்மிகுந்ததேசங்களில் ஆகாரம்புஷ் டியாயும், ஸத்துள்ளதாயும் இருத்தல் அவசியம். அவ் வாறன்றி இவ்யந்திரசாலைகளி லுள்ளவர்கள் வெகுவாய் ஓட்ஸ் கஞ்சியையும் உருளைக்கிழங்கையும் தேயிலைக் க ஷாயத்தையுமே புசித்துவந்தனர். மாமிசத்தை வாங்கிச் சாப்பிடக்கூடிய சம்பளக்காரர்கள் மிகவும் சிலரே. 30 35 40

அது மாத்திரமே யல்லாமல் ஒவ்வொரு வேலையா ளும் காலை முதல் மாலை வரையிலும், வருஷாரம்பமுதல், வருஷ முடிவு வரையிலும் ஒரே வேலையையே திருப்பத் திரும்பச் செய்யவேண்டி வந்தமையால், அவர்களெல் லோரும் உற்சாகமென்பதே யில்லாமல் அலுத்துச் சலித்துத் தேகவலிமை குன்றிப் போனார்கள். 45

இம்மாதிரி சுத்தமான காற்று இல்லாமையாலும், தக்க உணவு கிடையாமையாலும் தாங்கவொண்ணாது

50 கஷ்டப்பட்டு ஒவ்வொரு நாளும் 12-அல்லது 15-மணி
வேலை செய்தவர்கள், ஆண்மக்கள் மாத்திரமல்லர்.
ஸ்திரீகளும், இளங்குழந்தைகளுங் கூட அவ்வாறு
செய்யவேண்டியிருந்தது. இக்குழந்தைகள் பட்டபாடு
சொல்லற்பாலதோ! அநேக யந்திரசாலைகளில் 5 வய
55 துள்ள சிறுவர்களும் உழைத்து வந்தனர். இப்படிப்
பட்டவர்களுக்குக் கொடுத்துவந்த கூலி மிகச்சொற்ப
மாகையால் இளம்பிள்ளைகளை வேலைக்கு அமர்த்துவதில்
யந்திரசாலை அதிபர்களுக்கு அவா மிகுந்தது. ஆகவே
தங்கள் மனுஷ்யர்களைப் பல கிராமங்களுக்கும், பட்ட
60 ணங்களுக்கும் அனுப்பி அங்குள்ள எளிய பேதை
ஜனங்களை நோக்கி, "உங்கள் சிறுவர்களுக்கு உண்ணச்
சோறும் உடுக்க உடையும்" ஏராளமாய்த் தருகிறோம்;
கைத்தொழில்களையும் கற்பிக்கிறோம் என்றும், இன்
னும் பலவிதமான புரட்டுக்களையெல்லாம் சொல்லி ஆடு
65 மாடுகளை விலைக்கு வாங்குவதுபோல் அவர்களது சிறு
பாலர்களை வாங்கிவரச்செய்து தங்கள் யந்திரசாலை
களில் கடுமையான வேலைக் குட்படுத்தினார்கள். இவ்
வாறு வந்த சிறுவர்கள் சட்டப்பிரகாரம் அச்சாலைக
ளில் தாங்கள் இருபத்தோராம் பிராயம் வரையிலும்
70 வேலைசெய்யக் கடமைப்பட்டவர்கள். ஐயோ! இவர்
கள் என்னபாடு பட்டார்கள்! பகல் முழுதும் உழைத்
தவர் சிலர்; இரவு முழுதும் உழைத்தவர் வேறு சிலர்;
இதுவுமன்றிப் பகலிலும், இரவிலும் சேர்த்து
வேலை செய்யவேண்டி வருவதும் உண்டு. சோர்
75 வினாலோ, தள்ளாமையாலோ சிறிதுநேரம் வேலையின்றி
யிருக்கவும் முடியாது. அவ்வாறிருப்பின் அவர்களைப்
பக்கத்திலிருக்கும் காவலாளர்கள் காலாலுதைத்துக்

தடிபா லடிப்பார்கள்! தம் கஷ்டங்களைச் சொல்லிக்
கொள்வதற்கும் இடம் இல்லை. கவர்ன்மெண்டு அதி
காரிகள் வந்தகாலத்தில தெரிவித்துக்கொள்ளலாமென் 80
ருலோ, அவர்கள் வந்துபோன பிறகு இவர்களுக்கு
முன்னிலும் பதின் மடங்காக வல்லவோ தீமையுங் கஷ்
டமும் விளையும்! ஆகவே எதும் திக்கற்றவர்களாய்த்
தேகம் மெலிந்து, மனங் களைத்து, வியாதியி லடிபட்டு
அளவற்ற சிறுவர்கள் மடிந்தார்கள். அவ்வாறு மடி 85
யாது உயிரோடிருப்பினும், அங்கங் குறையாமலும்
ஆரோக்யத் தாழ்வில்லாமலும் தப்பியவர் ஒருவருமிலர்
என்றே சொல்லலாம். இந்தக் கொடுமையை யெல்லாம்
கண்ணுற்று மனங்கரைந்த எலிஸபெத் பாரெட் ப்ரௌ
னிங் என்ற ஆங்கிலப் புலவர் சிகாமணி பின் வரு 90
மாறு கதறினர்:—

பாலகர் புலம்பல்.

1. என்னே சோல்வேன்! என்னே சொல்வேன்!
இப்பா லகர்தாம் அடையுந் துன்பம்
அன்னைமார் மடிமீ தேறி யவாது
முகமே நோக்கி யோவெனக் கதறி
ஓல மிட்டு விழிநீர் சொரிய
யாரே மனமும் கரையா தீண்டு
பார்த்திட வல்லோ ராவரிப் புவியில்?
நண்பர்காள்! நீங்கள் பார்க்கவு மிலையோ?
வனப்பு மிகுமிவ் வனத்தினில் மேவும்
புள்ளிமான் குட்டியும் பொருக்கென வெழுந்து
தன்னிழல் தன்னோ டுலவி யாடும்.
கூட்டினில் குலவி வாழுங் குஞ்சுகள்
மகிழ்வுடன் மழலை பேசிக் கொஞ்சிடும்.
நறுமணம் எங்கும் வீசிக் கொண்டே

மேற்றிசை தன்னை யலரச் செய்யும்
சிறுமல ரினிதாய்த் திகழ்வதைக் காணீர்.
பசும்புற் படர்ந்த தரையின் மீதே
இனிது வந்துறங்கி யியல்பாய் மீண்டும்
கதிரவன் பொன்னொளி கண்டு களிக்கச்
சட்டென வெழுந்து தாவியே யோடி
இனத்துட னினமே சேர்ந்து விளையாடி
இனிதே பவனி யாக வெங்கும்
பார்ப்போர் கண்ணும் மனமுங் குளிரப்
போகுதே* தகரின் புனிற்றிளங் குட்டியும்
அரிதென அறிஞர் கூறிடும் இந்த
மானிடப் பிறப்பை மதியுடன் தாங்கிப்
பாவமே யாதென வறியா வளரும்
இவ்விளங் குழவிகள் இடருறல் தகுமோ!
யாமார்க் குங்குடி யல்லே மென்றும்
வறியவன் துரைமக ஞவனே யென்றும்
அவனுறை யில்லம் அடையலர் சேர
ஒண்ணு தொளிருங் கோட்டை தானே
என்றிரு மாந்து பேசு நம்மவர்க்கும்
இதுவோ தருமம் இதுவுமோ ரழகோ !

2. விரைவினி விறத்தல் விழுமிதென் றுணர்ந்தோம்
ஆலிஸ் சவக்குழி யருகினிற் கண்டோம்;
ஆங்குப் பணி செயற் கிடமிலை யதனல்
இன்றுயில் கொள்ளு மியல்புட னவளும்
கதிரவன் எழுமுன் கண்ணிய தொழிற்கு
விதியொடு செல்ல விரைந்தெழு 'கென்று
அதட்டி யெழுப்புவோர் ஆண்டில ரெவரும்
அன்றி யடிக்கடி யக்குழிக் கருகே
செவிகளை வைத்துச் சிரத்தையாய்க் கேட்டோம்;
பணியை யுணர்த்தும் பண்பொலி யொன்றும்
எங்கள் செவியில் எற்றது மில்லை;

*ஆடு

ஆலீஸ் ஈண்டே யரிதினில் வரினும்
ஆலீஸ் அவளென் றறிந்திட லரிதாம்
தொழிலை யியற்றுந் துயரில் லாமையால்
எழிலுறு மவள்மெய் இன்முக மொளிரும்
எல்லையி லின்ப மெய்திடு மாதலின்
நாங்களு மிறத்தல் நலமென் றுணர்ந்தோம்
என்றிக் குழவிக ளியம்பக் கேட்ட
யாமு மிங்ஙனம் இனிதுறல் தகுமோ!

ஷாப்ட்ஸ்பரி பிரபு இப்பாலர்கள் படும் இடும்பையை நீக்கவேண்டுமென்று மனந்துணிந்தார். நேரில் யந்திர சாலைகளுக்கும், சுரங்கங்களுக்கும், மற்றுஞ் சிறுவர்கள் அமர்ந்துள்ள தொழிற் சாலைகளுக்குஞ் 95 சென்று அவர்கள் படுந் துயரத்தைக் கண்ணுற்றார். அங்கங்கே பொது ஜனக்கூட்டங்களைக் கூட்டி, அச்சிறுவர்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டுமென வற்புறுத்தினர். யந்திரசாலை வேலையாட்களையே தங்கள் கஷ்டங்களை நீக்க வேண்டுமென, பார்லிமெண்டு சபை 100 யோர்களுக்கு விண்ணப்பஞ் செய்து கொள்ளச் செய்தார். தமது சினேகிதர்களுக்கும் இவ்விஷயத்தில் சிரத்தை யுண்டாகுமாறு தக்க முயற்சிகளுஞ் செய்தார். எதைச் செய்தால் தான் என்ன? பணலாபமே உள் நோக்கமாகக் கொண்ட யந்திரசாலை அதிபர்கள் 105 இவைகளைக் காதில் போட்டுக் கொள்ளவே யில்லை. அவர்களும் அவர்களது இஷ்டப்படி நடப்பவர்களுமே பார்லிமெண்ட் அங்கத்தினர்களாய் மிகுந்திருந்தமையால் ஷாப்ட்ஸ்பரி பிரபுவை ஆதரித்துப் பேசுபவர் மிகச் சிலரேயாயினர். ஆகையால் 1833-ஆம் ௵ இவர், 110 யந்திரசாலைகளிற் சிறுவர்கள், தினம் 10 மணி நேரத்

றுக்குமேல் வேலை செய்யும்படி செய்யலாகாது; அவ்வாறு செய்தால் குற்றமாகும் என்று கருத்துள்ள ஓர் மசோதாவைப் பார்லிமெண்ட் ஸபையில் கொண்டு
115 வந்த காலத்தில் அது அங்கீகரிக்கப் படவில்லை.

ஆயினும் ஷாப்ட்ஸ்பரிக்கு மாத்திரம் தைரியம் குறையவில்லை. தாம் மேற்கொண்ட காரியம் தருமத்தைத் தழுவினதே யன்றி வேறல்ல என்ற உறுதியான நிச்சயத்தாலும், உலகத்தில் ஸத்தியமும், நியாயமும் ஒரு
120 காலும் அழியா என்ற பூர்ண நம்பிக்கையாலும், தமது முயற்சிகள் வீண்போகா என மனவுறுதி கொண்டு, முன்னிலும் அதிக சிரத்தையுடன் இவ்விஷயத்தில் உழைத்து வந்தார். அது காரணமாக, 1840-ஆம் வருஷம் பார்லிமெண்ட் ஸபையார் ஓர் கமிட்டி ஏற்படுத்தி, அக்
125 கமிட்டியார்கள், தேசத்தில் யந்திரசாலைகளில் மாத்திரமல்லாமல் மற்றுஞ் சிறுவர்கள் அமர்ந்துள்ள பிறதொழில்களிலும், வியாபாரங்களிலும் புகுந்து அவைகளையெல்லாம் நன்றாய்ச் சோதித்துத் தக்க சாட்சிகளையும் விசாரித்துச் சிறுவர்களுக்கு நன்மை யுண்டாகுஞ் சீர்தி
130 ருத்தங்களைக் குறித்துத் தங்களுக்குத் தெரிவிக்குமாறு விதித்தார்கள். 1842-ஆம் வருஷத்தில் இக்கமிட்டியார்கள் தங்கள் ரிபோர்ட்டை விளம்பரப் படுத்தினார்கள். அதைப் படித்த பிறகுதான் பொது ஜனங்களுக்குப் பாலர்படும் கஷ்டங்களெல்லாம் விசதமாய்த் தெரிய
135 வந்தன. கனிச் சுரங்கங்களிலும், கரிச் சுரங்கங்களிலும் ஆயிரக் கணக்கான சிறுவர்கள் வேலைசெய்து வந்தார்கள். அவர்களில் பெரும்பான்மையோர் ஏழு அல்லது எட்டுப் பிராயமுள்ளவர்களே. நான்கு, ஐந்து வயதுச் சிறுவர்களும் அநேகர் இருந்தனர்களாம். தினந்தோ

றும் நாள்முழுதும் சுரங்கங்களி னுள்ளேயே வேலை 140
செய்து வந்தார்க ளாதலின் இவர்கள் சூரியனை வாரத்
துக்கு ஒரு முறையே பார்க்கலாயினாராம். எப்போதுங்
குனிந்துகொண்டே வேலை செய்தாராதலின், சிறுவர்
களிற் பெரும்பான்மையோர் முதுகு கூனி, சுவாசா
சயந் திடமாய் வளராமல் விகாரிக்குட்பட்டார்களாம். 145
சுரங்கங்கள் நில மட்டத்துக்கு மிகத் தாழ்ந்திருந்
தமையால், நீர் பெருகி மண்ணுடன் கலந்து, தரை சேறு
கு மாதலால் சிறுவர்கள் சேற்றிலேயே பன்னிரண்டு
மணி நேரமுஞ் சஞ்சரிக்கும்படி நேரிட்டதாம். ஆகை
யால் தேகவலிமை மிருந்தவர்களும், சீக்கிரத்தில் காசம், 150
முடக்குவாயு முதலிய வியாதியி லடிபட்டு வெகுவாய்
இறந்தனர்களாம். இவ்வாதாரங்களைக்கொண்டு 1842-
ஆம் வருஷத்தில் பார்லிமெண்ட் ஸபையில் ஓர் மசோ
தாவைப் பிரேரேபித்துக் கல்லும் கரையுமாறு ஓர் உபந்
நியாஸம் செய்தார். அதைக் கேட்டவர்க ளெல்லாம் 155
மிகவும் மனம் நொந்து, தாங்கள் இதுகாறும் ஒருவித சீர்
திருத்தமுஞ் செய்யவில்லையே யெனத் துக்கித்து, ஷாப்
ட்ஸ்பரி பிரபுவின் மசோதாவை அங்கீகரித்தனர்.
அச்சட்டத்தின் முக்கிய நோக்கம் ஸ்திரீகளையும், பத்து
வயதுக்குட்பட்ட சிறுவர்களையுஞ் சுரங்கங்களில் வேலை 160
யிலமர்த்தக் கூடாதென்பதே; 1843-ஆம் வருஷத்தில்
இம்மசோதா அங்கீகரிக்கப்பட்டுச் சட்டமாயிற்று. 1847
ஆம் வருஷம் யந்திரசாலைகளில் ஒருவரையும் தினம்
பத்துமணி நேரத்துக்குமேல் வேலைசெய்யக் கட்டாயப்
படுத்தக்கூடாதென்ற வேறோர் சட்டமும் நிறைவேறி 165
யது. 1861-ஆம் வருஷம், வேறொரு கமிட்டியார்களைப்
பார்லிமெண்டார் நியமிக்கும்படிசெய்து அவர்களது

ரிபோர்ட்டை ஆதாரமாகக்கொண்டு வேலைசெய்யுஞ்
சிறுவர்களுக்கு வேறு சில நன்மைகளுங் கிடைக்கு
170 மாறு செய்தார். 1878-ஆம் வருஷத்தில், இது சம்பந்த
மாக வேறொரு சட்டத்தையும் பார்லிமெண்டார் ஒப்
புக்கொண்டதனால், தொழில் செய்யும் சிறுவர்களது
கஷ்டங்க ளெல்லாம் வெகுவாய் ஒழிந்தனவென்றே
சொல்லலாம். அக்காலத்தில் ஷாப்ட்ஸ்பரி பிரபு
175 அடைந்த ஆநந்தம் இவ்வளவெனச் சொல்ல முடியாது.

அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில—குறள்.

---

## IV இந்தியதேச ஸம்பந்தம்.

ஷாப்ட்ஸ்பரி பிரபு 'இந்தியா போர்ட் ஆப் கண்ட்
ரோல்' ஸபையில் கமிஷனர் உத்தியோகத்தை, இரண்டு
வருஷகாலம் வகித்தனர் என்று முன்னமேயே சொல்லி
யிருக்கிறோம். அக்காலத்தில் இந்தியா தேசத்தில்
5 பயிர்த்தொழில் செவ்வையாய் நடைபெறுமாறு சில
பிரயத்தனங்கள் செய்தார். கிறிஸ்த மதத்தில் உண்
மையான பக்தி நிறைந்தவராதலின் இந்தியாவில் தம்
மதம் பரவவேண்டுமென்னும் அவா இவருக்கு மிகுதி.
மதபோதகர்கள் இத்தேசத்துக்கு வருங்காலத்தி லெல்
10 லாம் அவர்களுக்கு மிக்க உதவிசெய்து வந்தார்.

1843-ஆம் வருஷத்தில், வேறொரு விஷயத்திலும்
இவர் தமக்கு இந்தியாவிலுள்ள சிரத்தையை வெளிப்
படுத்தினார். பதினெட்டாவது நூற்றாண்டின் இறுதி
யில், ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் நம்தேசத்தின் மிகு
15 தியான பாகத்தை ஆண்டு வந்தார்கள். அக்காலத்தில்

கம்பெனி அதிகாரிகள் சொந்தத்திலுங்கூட வியாபாரஞ்
செய்து விசேஷ திரவியம் சம்பாதிக்க லானார்கள். மத்
திய இந்தியாவிலும், வேறு சில இடங்களிலுங் கஞ்சாச்
செடியைச் சாகுபடி செய்து, இலையைப் பதஞ் செய்து
டச்சு வியாபாரிகளுக்கும், மற்றவர்களுக்கும் விற்று 20
அதிக லாபத்தை அடைந்தார்கள். கம்பெனியார்கள்
இதைக் கேள்வியுற்று இனி உத்தியோகஸ்தர்கள் சொந்
தத்தில் கஞ்சாவைச் சாகுபடி செய்யக்கூடாதென்று
உத்தரவுசெய்து, தாங்களே அவ்வியாபாரத்தைக்
கைக்கொண்டார்கள். இதனால் அவர்களுக்கு வருஷத் 25
தில் இருபது லக்ஷ ரூபாய்க்குமேல் அதிக லாபம் கிடை
த்து வந்தது. கஞ்சாச் சரக்கு விசேஷமாய் விலைபோன
தேசம் சினதேசம். அத்தேசங்களில் பெரும்பாலார்
கஞ்சாவைத் தின்று தேகவலிமையும், மனவலிமையுங்
குறைந்து தத்தம் தொழில்களைச் சரிவா நடத்துவதற் 30
குச் சக்தி யற்றவர்க ளானார்கள். இதைப்பார்த்த சின
கவர்ன்மெண்டார், கஞ்சாச் சரக்கு தந்தேசத்தில்
இறக்குமதி யாகா வண்ணம் பிரயத்தனங்கள் செய்யலா
னார்கள். என்ன செய்தும் அச்சரக்கு வியாபாரம்
குறையவேயில்லை. தாழ்ந்த ஜனங்களே யல்லாமல் 35
வரவர அதிகாரிகளும், தனிகர்களும் கூடக் கஞ்சா தின்
னுங் கெட்டவாடிக்கையை அனுசரிக்க லானார்கள்.
சின சக்கரவர்த்தி மிகத் துக்கித்து எவ்விதத்தினலா
வது இவ்வியாபாரத்தை அடியோடு நிறுத்திவிடவேண்
டுமென நிச்சயஞ்செய்து, 1840 ஆம் வருஷம் கான் 40
டன் துறைமுகத்தில் இருபதினுயிரங் கஞ்சாப் பெட்டி
கள் அடங்கிய ஓர் ஆங்கிலேயக் கப்பல் வந்திருப்பதாகக்
கேள்வியுற்றுத் தம் அதிகாரிகளைத் துறைமுகத்துக்கு

அனுப்பி அப்பெட்டிகள் யாவற்றையுஞ் சமுத்திரத்தில்
45 விழுத்தும்படி செய்தார். உடனே இங்கிலீஷ்காரர்
களுக்குஞ் சீனதேசத்தவர்களுக்கும் சண்டை யேற்பட்
டது. கடைசியில் சீனதேசத்தவர் தோல்வி யடைந்து
1842-ஆம் வருஷத்தில், சமாதானம் செய்துகொண்
டார்கள். உடன்படிக்கைப் பிரகாரம் ஹாங்காங் தீவு
50 ஆங்கிலேயர் வசமானது. ஆங்கிலேயர் யாதொரு நிபந்
தனையுமின்றி வியாபாரச் சரக்குகளைச் சீனதேசத்தில்
ஐந்து துறைமுகப் பட்டணங்களில் இறக்குமதி செய்ய
லாமென அனுமதியும் பெற்றனர். சமுத்திரத்தில்
மூழ்கிப்போன கஞ்சாப் பெட்டிகளுக்காக 60 லக்ஷம்
55 ரூபாய்க்குமேல் ஈடுகொடுப்பதாகவும் சீன கவர்ன்
மெண்டார் ஒப்புக்கொண்டார்கள். ஆகவே அக்கவர்ன்
மெண்டாருடைய விருப்பம் சிறிதேனும் நிறைவேற
வில்லை. முன்போலவே கஞ்சா வியாபாரம் தடையில்லா
மல் நடந்துகொண்டே வந்தது.

60 ஆயினும் இம்மாதிரி சீன ராஜாங்கத்தாரது இஷ்ட
மில்லாமல் அவர்கள் தேசத்தில் வியாபாரஞ் செய்து
இக்கெட்ட சரக்கை வாங்கி உண்டு, இகத்துக்கும், பரத்
துக்கும் யாதொருவித உபயோகமுமாகாதவராகும்படி
ஆயிரக் கணக்கான ஜனங்களைச் செய்தல் அதர்மமென்
65 றும், தங்கள் மதத்துக்கு நேர்விரோதமான ஒழுக்க
மென்றும், பல அதிகாரிகளும், பிரபுக்களும் அபிப்பிரா
யப்பட்டார்கள். அவர்களுள் நம் ஷாப்ட்ஸ்பரி பிரபுவும்
ஒருவர். "நன்மை செய்யின் அன்றே செய்க" என்ற
உண்மையைக் கடைபிடித்து ஒழுகுபவராதலின் உட
70 னே இவ்வியாபாரத்தை முற்றிலும் நீக்கவேண்டுமென்ற
எண்ணங்கொண்டவராய் 1843-ஆம் வருஷம் ஏப்ரல்

மாதம் 4ஆம் தேதி, பார்லிமெண்ட் ஸபையில் ஓர்திர்மா
னத்தைப்பிரேரேபித்தார். அதன்கருத்து, பிரிட்டிஷ்இந்
தியாவில் ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் கஞ்சா சாகுபடி
செய்து சீனதேசத்துக்கு அனுப்புவது கிறிஸ்தவ மதத் 75
தை அனுசரித்து வரும் ஓர் கவர்ன்மெண்டாருடைய
கடமைக்குங் கௌரவத்துக்குந் தாழ்மையானது.
ஆகையால் சீக்கிரத்தில் இவ்வியாபாரத்தை நிறுத்து
வதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்
பதே. சீன தேசத்திலிருந்த கிறிஸ்தவப் பாதிரிமார்கள் 80
சங்கங்களைக்கொண்டு இவ்விஷயத்தைக் குறித்துப் பார்
லிமெண்டார்களுக்கு ஓர் விண்ணப்பமும் அனுப்புவித்
தார். தாமும் மிகப் பரிவோடு கல்லுங் கரையுமாறு சபை
யிற்பேசினர். "ஈஸ்ட் இந்தியா கம்பெனியார், நியாயமல்
லாத இவ்வியாபாரத்தைச்செய்யும்படிபார்லிமெண்டார் 85
இடங்கொடுப்பது நன்றல்ல. ஏதோ விசேஷலாபம் வரு
கிறதே யென்ற காரணத்தைக்கொண்டு அதர்மமான
ஓர் காரியத்தைச் செய்ய அனுமதிகொடுக்கலாமா! பிரி
ட்டிஷ் கொடி பறக்கு மிடங்களி லெல்லாம் ஜனங்கள்
சுதந்தரத்துக்கு யாதொருவிதமான கேடும் இருக்கக் 90
கூடாது என்ற உயர்ந்த நோக்கத்தைக் கொண்டு அடி
மை வியாபாரத்தை ஒழித்த இப்பார்லிமெண்ட் ஸபை
க்கு அதனினுங் கொடிய இவ்வியாபாரத்துக்கு அனு
மதி கொடுத்தல் அழகோ! அடிமைகளின் தேகம் மாத்
திரமன்றோ யஜமானன் கைவசமானது! பாழாகிய 95
இந்தக்கஞ்சாவோ அதைத்தின்பவரது தேகத்தைமாத்
திரமன்றி மனத்தையுமல்லவோ அடிமையாக்குகிறது!
தேகவலிமையுங் மனஉறுதியும் நீங்கியபின் ஒருவனுக்கு
சுவாதந்தரியம் என்பது எங்கே? இதுவரைக்குமே கணக்

100 இல்லாத ஜனங்கள் கொடிய இந்தப் பழக்கத்துக் குட்பட்டு நாசமானார்கள். இனிமேலாவது இப்பாவத்துக்கு நாம் ஆளாகாம லிருப்போம்" என்றார். அப்போது பிரதான மந்திரியான ஸர் ராபர்ட் பீல் இவர்சொல்வதை ஒப்புக்கொண்டு, தாம்சீன கவர்ன்மெண்டாரோடுஇவ்வி
105 ஷயத்தில் ஆலோசித்துக்கொண்டிருப்பதாயும், சீக்கிரத்தில் தக்க எற்பாடுகள் செய்வதாயுஞ் சொல்லி, பிரேரேபணையைத் திரும்பப் பெற்றுக்கொள்ளும்படி ஷாப்ட்ஸ்பரி பிரபுவை வேண்ட அவரும் அவ்வாறே செய்தார். ஆயினுங் கஞ்சா வியாபாரம் மாத்திரம் நிற்கவில்லை. சமீ
110 பகாலத்தில்தான் இந்தியா ஸெகிரிடரியான லார்ட் மார்லி என்பவரால் இது அடியோடு ஒழிக்கப்பட்டது.

1861-ஆம் வருஷத்தில், இந்தியாவின்வடமேற்குப் பாகங்களில் ஓர் கடுமையான பஞ்சம் எற்பட்டு லட்சக் கணக்கான ஜனங்கள் வருந்தினார்கள். அவர்களது
115 கஷ்ட நிவாரணத்துக்காக ஆங்கில தேசத்தார்கள் ஒரு கோடி ருபாய்க்குமேல் சந்தா வசூல் செய்து நம்தேசத்துக்கு அனுப்பினார்கள். ஆயினும் இந்தியா தேசத்தில் பஞ்சம் வருவானேன்? பஞ்சம் நேரிடாவண்ணம் செய்வதற்கு என்ன என்ன வசதிகளை இந்தியா தேசத்
120 தவர்களுக்குச் செய்து தரவேண்டுமென்று அவர்களுள் ஒருவரேனும் ஆலோசிக்கவில்லை. நம் பிரபு மாத்திரம் அவ்வாறு அசிரத்தையா யிராமல் இந்தியா கவர்ன்மெண்டு அதிகாரிகளுடன் கடிதப்போக்கு வரவு செய்து பஞ்சத்துக்கு உண்மையான காரணம் யாதெ
125 னத் தெரிந்துகொண்டார். பிறகு அந்த வருஷம் ஜூலை மாதம் 5-ஆம் தேதி யன்று பார்லிமெண்ட் ஸபையில் ஓர் பிரேரேபணையைக் கொணர்ந்தார். தாம்

இந்தியா தேசத்தில் ஜனங்கள் பஞ்சத்தால் அடிபட்டு
வருந்துவதைக் கேள்வி யுற்று மிகவும் வருந்தியதாக
வும், அடிக்கடி அத்தேசத்தில் பஞ்சம் நேரிடுவானேன்? 130
என்று விசாரித்ததாகவும், மழை யில்லாமையாலோ,
நீர்ப்பாய்ச்சல் வசதிகள் சரியாக இல்லாமையாலோ,
வியவசாயிகள் தங்கள் புலங்களைச் சாகுபடி செய்ய
முடியாமற் போய்த் தானியவிளைவு குறைந்துபோகுங்
காரணத்தாலேயே பஞ்சம் உண்டாவதென்று தாம் 135
தெளிவாய்த் தெரிந்துகொண்டதாகவும், பூர்வகாலத்
தில் இந்திய மன்னர்கள் செய்து வந்த விதமே ஆங்கில
கவர்ன்மெண்டாரும், ஆறுகளையும், வாய்க்கால்களையும்
ஏரிகளையும், குளங்களையுஞ் செம்மைப்படுத்தித் திருத்து
வது மல்லாமல் அவசியமான இடங்களில் மேற் 140
சொன்ன வசதிகளை ஏற்படுத்த வேண்டுமென்றும்
வெகுநேரம் வற்புறுத்திப் பேசினர். அக்காலத்தில்
இந்திய தேசத்தைப்பற்றித் தெரிந்து கொண்டவர்
பார்லிமெண்ட் ஸபையில் வெகு சிலரே. ஆதலின்
ஷாப்ட்ஸ்பரி பிரபுவின் பிரேரேபணை அங்கிகரிக்கப் 145
படவில்லை. ஆயினும் இந்திய தேசத்தில் முக்கிய கைத்
தொழில் வியவசாயமே; அத்தொழிலுக்கு இன்றி
யமையாததான நீர்ப்பாசனத்துக்கு வேண்டிய ஸௌ
கர்யங்களைச் செய்து கொடுக்கக் கவர்ன்மெண்டார்
கடமைப் பட்டுள்ளார் என்ற உண்மையை முதன் 150
முதல் பார்லிமெண்டாருக்குச் செவ்வனே விளங்கச்
செய்தவர் நம் பிரபுவே.

## V. லண்டன் நகரும், திக்கற்ற பிள்ளைப் பள்ளிகளும்.

மன்னுயிரைத் தன்னுயிர்போல் பாவிக்கும் ஷாப்ட்ஸ்பரி பிரபுவுக்கு மேன்மேலும் ஜனசமூகத்தின் க்ஷேமத்தை விருத்திசெய்வதிலேயே விருப்பம்மிகுந்து வந்தது. 'ஈசன் எனக்கு அளித்திருக்கும் பதவிக்கும், 5 கௌரவத்துக்கும் நன்றியறிதலை நான் எவ்வாறு காண்பிப்பது? எளியவர்களும், பேதையர்களுஞ் செம்மையாய் வாழ்நாள் கழிக்கும்படி செய்தாலல்லவோ!' என அடிக்கடி தமக்குள்ளே சொல்லிக்கொள்வர். இவ்வாறு பரோபகார சம்பந்தமான எண்ணங்களே இவர் மனத் 10 தில் எப்பொழுதும் குடிகொண்டிருந்தன.

லண்டன் மாநகர் எப்பொழுதும்போல இவர் காலத்திலும் செல்வம்நிறைந்து, தக்கோர் மிகுந்து, நவநாகரிகங்கள் செழித்து உன்னத ஸ்திதியி லிருந்தது. ஆயினும் எப்பொழுதும் போலவே இந்நகரில் தான் 15 ஏனைய நகரங்களில் இருப்பதைவிட அதிகக் கொடிய வறுமையுங், குடியும், சூதும், வாதும் குடிகொண்டிருந்தன. கணக்கிடவரிய ஏராளமான செல்வம் படைத்தோர்கள், மணிக்கு ஒருவித நூதன ஆடைகளைஉடுத்து, முகூர்த்தத்துக்கு ஓர்வித நூதன சிற்றுண்டிகளையுண்டு 20 நடனசாலைகளுக்குங் கூத்தாடுமிடங்களுக்குஞ் சென்று ஆங்குள்ள காட்சிகளைக் கண்டு களித்தும், தங்களது இருகத்திலேயே அப்பொழுதைக் கப்பொழுது தம்போலிய தனிகர்களை யழைத்து ஏராளமான செலவுசெய்து விருந்தளித்தும், 'தேவேந்திரபோகம்' எனச் சொல்லு 25 மாறு பற்பல சுகங்களையு மனுபவித்து இந்நகரின் ஓர் பக்கத்தில் வசித்துவர, மற்றொரு பக்கத்தில் பதினாயி

ரக் கணக்கான பேதையர்கள் நாளுக்கு ஒருவேளைகூட வயிறு நிரம்பப் புசிக்க உணவில்லாமலும், குளிர் தாங் கும்படி உடுக்க உடையில்லாமலும், இரவில் படுத் துறங்க இடமில்லாமலும், இரவுபகல் முழுதும் தெருத் 30 தெருவா யலைந்து, செய்வதற்கு வேலையும் அகப்படா மல் களைத்துத் தள்ளாடி, தனிகர்கள் களிப்புடன் விருந் துண்பதைச் சுவர்கள துசாளரங்களின்வழியாய்ப்பார்த் துத் திகைத்து நிற்பர். உலகில், உண்ணவுணவும் உடுக்க வுடையு மில்லாமையா லன்றோ களவும், பொய்யும் மிகு 35 தியாக விளைகின்றன! அவ்வாறே இப்பேதையர்களில் அநேகர் பாலிய முதல் தீச்செயல்களிற் பயின்று தீய ஒழுக்கங்களிற் பிரவேசித்தனர். பரம்பரையாய் இவ் வறியோர்கள் அக்கிரம மார்க்கங்களை அனுஷ்டித்து வந்தனராதலால் இவர்களுக்கு இது நன்று, இது நன் 40 றன்று என்ற ஞானங்கூட வில்லாமற்போயிற்று. தீமை எனத்தெரிந்து தீச்செயல் செய்பவனை ஒருவாறு கரை யேற்றல் ஸாத்தியம். தீமை யின்ன தென்றே யறியாத மூடரை தீய வழக்கத்தினின்று திருப்புதல் அஸாத் தியமன்றோ! இவ்வுண்மையைச் செவ்வனே யறிந்த நம் 45 ஷாப்ட்ஸ்பரி பிரபு வறியோர்களின் சிறுவர்களுக்கு நல்லறிவு ஊட்டுவதே ஒவ்வொரு தேசோபகாரியின் முதன்மையான கடமை யாகுமெனத் துணிந்தார்.

லண்டன் நகரில் வெஸ்ட்மின்ஸ்டர் என்ற பாகத் தில் எளியோர்கள் மிகுதியும் வசித்து வந்த 'நீயூபை' 50 தெருவில், வாகர் என்ற ஓர் பாதிரியார், குதிரை லாயத் துக்கென்று கட்டப்பட்ட ஓரிடத்தைக் குடிக்கூலிக்கு வாங்கி அதில் எளியவர்களின் சிறுவர்களுக்காக ஓர் பள் ளிக்கூடத்தை 1839-ஆம் வருஷம் எப்ரல் மாதம் 14-

55 ஆம் தேதியில் ஸ்தாபித்தார். இதற்குமுன் இம்மாதிரிக் கல்விச்சாலை லண்டனில் ஏற்படவே யில்லை. வைத்த நான்கு தினங்களுக் குள்ளேயே நூற்றைம்பது பிள்ளை கள் கூடினார்கள். ஆறுமாதத்தில் இன்னும் நூற்றைம் பது சிறுவர்களுஞ், சிறுமிகளுஞ் சேர்ந்தார்கள். லேடி 60 ட்ரோபிரிட்ஜ்என்றசீமாட்டி இப்பள்ளிக்கூடத்திலுள்ள சிறுமிகளைத் தனியே பிரித்து அவர்களுக்கென்று பிரத் யேகமாய் ஓர் இடத்தையுங் குடிக்கூலிக்குவாங்கிஓர்உபா த்தியாய ஸ்திரீயையும் நியமித்தாள். இவ்விரு பள்ளிக் கூடங்களும் காளடைவில் விருத்தியாகவே, இருந்தவி 65 டம் போதாமல் விசாலமான வேறோர் கட்டடத்துக்கு மாற்றப்பட்டன.இந்த நல்ல சமயத்தில் அங்கு விஜயஞ் செய்து ஜனங்களுக்கு உற்சாகத்தை உண்டு பண்ணி, அவர்களுக்குப் படிப்பில் சிரத்தை வருமாறு நற்போ தனை செய்தவர்களுள் ஒருவர் ஷாப்ட்ஸ்பரி பிரபு. இப் 70 பாடசாலைகளின் பொருட்டுத் தாமே விசேஷ நன் கொடை கொடுத்துதவியது மல்லாமல் தமது சிநேகிதர்க ளிடத்திலிருந்தும் திரவியம் வசூல்செய்துகொடுத்தார்.

ஆயினும் சுவயமாகவே சில பாடசாலைகளை ஏற் படுத்தி, வித்தியாதானம் செய்யவேணுமென்ற ஆசை 75 இவருக்கு மிகுதியாக உண்டு. ஆனால் அதற்குத் தகுந்த அவகாசமும் ஸௌகரியங்களும் ஏற்படவில்லை; இவ் வாறிருக்க, ஒரு நாள் டைம்ஸ் பத்திரிகையில் ஏழைப் பிள்ளைகள் சம்பந்தமான ஓர் பிரசுரத்தை வாசித்தார். லண்டன் நகரில் 'பீல்ட் லேன்' என்றபெயருள்ள பாகத் 80 தில் ஏழைகளுக்குப் பாடசாலைகள் தேவை யென்றும் அவைகள் நடைபெறுமாறு கனதனவான்கள் பொரு ளுதவி புரியவேண்டுமெனவும் சொல்லியிருந்தது. இதை

ப்பார்த்தவுடனே ஷாப்ட்ஸ்பரி பிரபு மிக ஆனந்தமடை
ந்தவராய் தாம் ஈசனை வெகு நாளாய்ப் பிரார்த்தித்து
வந்ததற்குப் பலனாகவே இம்மாதிரி பிரசுரம் வெளியா 85
னதெனத் தெளிந்து, இந் நற்காரியத்தில் பூரணமாய்
உதவி புரியவேண்டு மெனவும் நிச்சயித்துப் பத்திரிகை
யில் பிரசுரஞ் செய்தவர்களுக்கு அவர்கள் தம்மை வந்து
பார்க்கும்படி கடிதம் எழுதினர். அவர்களும் அவ்வாறே
வர, சீக்கிரத்தில் ஓர் வித்தியா சாலையை ஸ்தாபித்தார். 90
அடிக்கடி இவர் இப்பள்ளிக் கூடத்துக்குச் சென்று
பிள்ளைகளோடு பரிவுடன் கலந்துபேசி இவர்களுள்ளத்
தில் தெய்வ பக்தியும் 'அறத்தினி லார்வமும் அல்லதில்
வெறுப்பும்' பதியுமாறு செய்தார்.

இத்தகைய கல்விச் சாலைகளின் நன்மையைப் 95
பொது ஜனங்கள் உணரவே, மேன் மேலும் இன்னும்
அநேக பள்ளிக்கூடங்கள், அங்கங்கே ஸ்தாபிக்கப் பெற்
றன. இவைகளின் நோக்கம் ஒன்றே யாதலின் இச்
சாலைகளை நடத்துவோர்களும், அவைகளில் அமர்ந்
துள்ள உபாத்தியாயர்களும் அடிக்கடி சந்தித்துத் தங் 100
கள் தங்கள் அநுபவங்களை ஒருவருக்கொருவர் சொல்லி,
மேன்மேலும் பிள்ளைகளை விருத்திக்குக் கொண்டுவரக்
கூடிய முயற்சிகளைப் பற்றி யாலோசித்தல் முக்கியமென
க்கருதி 'திக்கற்றபிள்ளைப் பள்ளிகள் சங்க' மென ஓர்சங்
கத்தைச் சில பெரியோர்கள் ஸ்தாபித்தார்கள். இச்சங் 105
கத்துக்கு அக்கிராசனாதிபதியாய் நமது ஷாப்ட்ஸ்பரி
பிரபு பத்துவருஷகாலம் இருந்து வேலை செய்து வந்
தார். சமயம் வாய்ந்த போதெல்லாம் பொதுஜன ஸபை
களில் ஏழைப் பிள்ளைகளின் கொடுந் துயரங்களைப் பற்
றிக் கேட்பவர் மனமுருகப் பேசி, அவர்களிடமிருந்து 110

திரவிய உதவிபெற்று, அத்திரவியத்தையெல்லாம் சிறு
வர்களுக்கு ஆடை வாங்குவதிலும் வேறு ஸௌகரியங்
கள் அளிப்பதிலுஞ் செலவு செய்துவந்தார். இவரது
மாளிகையில் எப்பொழுதும் ஏழைப்பிள்ளைகள் வந்த
115 வண்ணமாகவே இருப்பார்கள். தமக்கு வேறு எந்த
வேலையிருப்பினும் அதை மதியாது, இப்பிள்ளைகள்
சொல்வதை நிதானமாய்க் கேட்டுத் தக்க பரிகாரஞ்
செய்து அப்பிள்ளைகள் மனப்பூர்வமாய் அன்பு மிகுந்து
'இப்பெரியவர் உள்ளநாளில் நமக்கோர் குறையும்வாரா'
120 தென எண்ணி வீடுபோய்ச் சேரும் வண்ணம் உதவி
புரிவார். இவரது பேரன்புக்குமோர் எல்லையுண்டோ ?

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

---

## VI திக்கற்றப் பள்ளிப் பிள்ளைகள்.

திக்கற்றபிள்ளைப் பள்ளிகளின் தொகை மேன்மே
லும் விருத்தியாகிக் கொண்டே வந்தது; தனவந்தர்கள்
திரவிய உதவி புரிந்தார்கள். ஏழைப் பிள்ளைகளும்
அப்பள்ளிக் கூடங்களில் வந்து சேர்ந்து கல்வி கற்றார்
5 கள். ஆயினும் அவர்களின் நிலைமையைச் செம்மைப்
படுத்த வேறு சௌகரியங்களும் வேண்டியிருந்தன.
கௌரவமாயும், தம் மதிப்புக்குன்றாமலும் ஜீவனத்தைத்
தேடிக் கொள்ளுமாறு வசதிகள் ஏற்படுத்தினாலன்றி
அப்பள்ளிப் பிள்ளைகளுக்கு ஊட்டிய கல்வி பயனற்ற
10 தாம் என நம் பிரபு கண்டுகொண்டார். 'பசியே பற்பல
பாவச் செயல்களுக்குத் தூண்டுகோலன்றோ! ஆதலின்
அவர்களுக்கு ஏற்ற ஜீவனோபாய வழியைப் பற்றி
நம் பிரபு விசாரிக்கலானார்.

அக்காலத்தில் வெகு ஜனங்கள் இங்கிலாந்திலி ருந்து வெளியேபோய் வட அமெரிக்காவிலும், ஆஸ்தி ரேலியாவிலுங் குடியேறிக் காடுகளை அழித்து, நிலத் தைப் பண்படுத்திக் கோதுமை முதலிய தானியங்களை விளைவித்துச் சுகமாகக் காலங்கழித்ததுமன்றி, சீக்கிர த்தில் மிக்க திரவியத்தையும் சம்பாதிக்கலானார்கள். அதைப்பார்த்துத் திரளான ஜனங்கள் பிரதி வருஷமும் அப்பிராந்தங்களைச் சேர்ந்து குடியேறினார்கள். தம்மி டத்துள்ள திக்கற்ற பிள்ளைகளிற் சிலரையும் அவ்வாறே அனுப்புவது நன்றெனஷாப்ட்ஸ்பரி பிரபு தெளிந்தார். அதுமுடிவு பெறுவதற்குங் கொஞ்சம் திரவியம் வேண்டி யிருந்தது. பிரயாணச் செலவுக்குங் குடியேற்ற நாட்டில் வந்து இறங்கியவுடன் சிலநாட்களுக்குக் காலக்ஷேபஞ் செய்வதற்கும் ஒவ்வொருவரிடத்துங் கொஞ்சம்போது மான பணமிருத்தல் வெகுமுக்கியம். மேற்கூறிய பிள்ளை களுக்கு அப்பணத்தை யார்கொடுத்து உதவுவார்? கவர் ன்மெண்டாரே அது விஷயத்தில் சிரத்தை யெடுத்துக் கொள்ளவேண்டுமென ஷாப்ட்ஸ்பரி பிரபு தீர்மானித் தார்.

1848-ஆம் வருஷம் ஜூன் மாதம் 6-ஆம் தேதி நம் பிரபு பார்லிமெண்ட் ஸபையில் ஓர் முக்கிய தீர்மா னத்தைப் பிரேரேபித்தார். அதன் முக்கிய அம்சம் யாதெனில், பிரதி வருஷமுங் கவர்ன்மெண்டார் லண் டனிலும், அதைச் சுற்றியுமுள்ள பேதைப் பள்ளிகளி லுள்ள சிறுவர்களில் சுமார் ஆயிரம்பேர்களைத் தென் ஆஸ்திரேலியாநாட்டில்குடியேறச்செய்வித்து, அவர்கள் அங்கே கௌரவமாக வுழைத்துக் காலக்ஷேபஞ் செய் வதற்குத் தகுந்த உபாயத்தைத் தேட வேண்டுமென்ப

தே. அந்தப் பிரேரேபணையைப்பற்றிப் பேசுங்கால்,
லண்டனில் அக்காலத்தில் திக்கற்ற பிள்ளைகள் என்று
சொல்லக்கூடியவர்கள் சுமார் முப்பதினாயிரம் பேர்
45 கள் உளர் என்றும், அவர்களிற் பெரும்பான்மையோ
ருந் தீச்செயல்கள் செய்தே காலத்தைக் கழிப்பவர்கள்
என்றும், சுபாவமாகவே அநேகருக்கு அவ்வாறு
நடப்பதில் அருவருப்பு உண்டென்றும், சரியான தொ
ழில் துறைகளை எற்படுத்தித் தந்தால் அவர்கள் யோக்
50 கியர்களாகவே யிருந்து ஒழுகுவார்களென்றும் வற்பு
றுத்தினர். அங்கத்தினர்கள் அப்பிரேரேபணையை
ஆதரிக்க அது நிறைவேறிற்று. பிரதி வருஷமும் கவ
ர்ன்மெண்டார் திக்கற்ற பிள்ளைகளைக் குடியேற்ற நாடு
களுக்கு அனுப்பும் விஷயமாக ஆயிரத்தைந்நூறு
55 பவுன்பணஞ்செலவுசெய்ய ஒப்புக்கொண்டனர். ஷாப்ட்
ஸ்பரி பிரபு தம் சிநேகிதர்கள் சிலரிடமிருந்து பணம்
வசூல் செய்து அதைக்கொண்டு பிரதி வருஷமும்
நூற்றுக் கணக்கான சிறுவர்களை ஆஸ்திரேலியா தேசத்
துக்கு அனுப்பினர்.

60 1849-ஆம் வருஷத்தில் ஆஸ்திரேலியாவுக்கு
அனுப்பப்பட்ட கரோலின் வாக்கர் என்னும் சிறுமி,
தன் எஜமானனிடம் வெகு அடக்கத்துடனும், ஒழுக்
கத்துடனும் நடந்து கொண்ட காரணம் பற்றி, எஜமா
னன் அவளிடத்து விசேஷ நன்கு மதிப்பெய்தி, அவ
65 ளைத் தன்குமாரனுக்கு மணம் புரிவித்தான். ஷாப்ட்ஸ்
பரி தனக்குச் செய்த பேருபகாரத்திற்காக அவரைப்
போற்றி இம்மாது எழுதின கடிதத்தை அவர் தாம்
உயிருடனிருக்கும் வரையில் தமக்குப் பக்கத்திலேயே
வைத்துக்கொண்டிருந்தார்.

பேதைப் பிள்ளைகள் மாத்திரமன்றிப் பாலியம் முதல், குடி, களவு முதலிய தீச்செயல்களைச் செய்து பாபத்தில் அழுந்தினவர்களான வயது வந்தவர்களில் அநேகரும், நம் பிரபுவின் முயற்சியால் கானடா முதலிய பிற தேசங்களுக்கு அனுப்பப்பட்டு, அங்கே தங்கள் குரூரவழிகளை யெல்லாம் நீத்து நன்னடக்கை படிந்தவர்களாய் க்ஷேமம் அடைந்தனர். 70 75

---

## VII குடிக்கூலி விடுதிகள் சட்டம்.

இக்காலத்தில் லண்டன் நகரில் எளியவர்கள் பட்ட கஷ்டம் மிக அதிகமென முன்னமே குறிப்பித்துள்ளோம். கைத்தொழில்கள் மேன்மேலும் விருத்தியாக, அத்தொழில்களை நாடி ஜீவனஞ்செய்யுமாறு பக்கத்துக் கிராமங்களினின்றுஞ் சிறு பட்டணங்களினின்றுந் 5 திரளான ஜனங்கள் லண்டனில் வந்து கூடினார்கள். இக்கூட்டம் நாளுக்குநாள் மிகுந்துகொண்டே வந்தது. ஆனால் இவர்களுக்குக் குடித்தன வசதிக்குத் தகுந்தவாறு விடுதிகள் மிகுதியும் ஏற்படவில்லை. இதுகாரணம்பற்றி ஜனநெருக்கம் வர வர அதிகரித்துக்கொண் 10 டே வந்தது. மிகச் சிறுவீடுகளிலுங் கூட அநேக ஜனங்கள் ஒருங்கேகூடி வசிக்க நேர்ந்தது. குடிக்கூலியும் மிகுந்தது. இதற்கு ஆசைப்பட்டு நிலச் சுவாதீனதார்கள் அங்கங்கே காலி ஸ்தலங்களில் சிறிதேனும் காற்றாவது, வெளிச்சமாவது புகாவண்ணம் நெருக்கி, வரிசை 15 வரிசையாக அறைகளைக் கட்டி, சுத்தஜலம் கிடைப்பதற்கும், அசுத்த ஜலம் உள்ளே தங்காது வெளியே போவதற்கும் வழிகள் சரியாய் ஏற்படுத்தாமல் மிக்க

அபிப்பிராயஞ் செய்துவந்தனர். வீடுகள் அறைகள்
20 அடுக்கடுக்காய்க் கட்டப்பட்ட ஐந்து அல்லது ஆறு
மாடிகள் உள்ளனவா யிருந்ததனால் தரைமட்டத்திலும்,
அதற்குச் சற்று உயர்ந்துள்ள மாடிகளிலும் உள்ள
அறைகள், மிக இருளடைந்தனவாய் வெளிச்சமில்லாமல்
இருந்தன. நாற்புறங்களிலும் இவ்விதமாகக் கிருகங்
25 கள் ஏற்பட்டதனால் காற்றில்லாமையின் கஷ்டம் மிக
வும் அதிகமாயிற்று. வீதிகள் என்றாலோ, அவைகள்
மிகக் குறுகியவைகள். ஒரு மனிதன் தன் இரு கரங்
களையுந் தாராளமாய் விரிக்கக்கூட முடியாதவைகளா
யிருந்தன. ஆதலின் இவ்வீதிகளில் சூரியவெளிச்சம்
30 படுவது மிக அரிது. அதனால் வீதிகளும் அசுத்த
மாய்த் துர்நாற்றம் வீசிக்கொண்டிருந்தன.

ஜன நெருக்கமோ மேன்மேலும் விடாமல் அதி
கரித்துக் கொண்டே வந்தது. மேற்குறித்த வீடுகள்
ஒவ்வொன்றிலும், 1841-ஆம் வருஷத்தில் சராசரி 24
35 ஜனங்கள் குடியிருந்தனர். 1847-ஆம் வருஷத்திலோ
அத்தொகை 40க்கு ஏறியது. அதுவுமன்றி வீட்டுக்
குரியவர்கள் அடிக்கடி பழுது பார்ப்பது மில்லை. சூரிய
வெளிச்சமும் பூஜ்யம்; சுத்தமான காற்று மருந்துக்
கும் இல்லை. எங்கே பார்த்தாலும் இருள் மூடியிருந்
40 தது. அறைகள் ஆறு அல்லது ஏழு அடிக்குமேல்
உயரமில்லை. தரை அசுத்தம் மிகுந்து நீர் கசிந்து ஈரமா
யிருக்கும். சுவர்களும், மேல்தளமும் சுண்ணாம்புப்
பூச்சு அடியோடு உதிர்ந்துபோய், புகை படிந்து கறுப்
பாய்த் தோன்றும். மேலும் அங்கே அசுத்தமான
45 புழுக்கள் உண்டாய் எப்பொழுதும் தரையில் விழுந்து
கொண்டேயிருக்கும். வீட்டிலிருந்து வெளியில் எறி

யப்பட்ட அசுத்த பதார்த்தங்கள் தெருவிலேயே கிடக்கும். ஒவ்வொரு வீட்டுவாயிலுக்குப் பக்கத்திலும் சாக்கடை ஜலம் நிறைந்த ஓர் குழி உண்டு. சுத்த ஜல வசதியோ, ஐம்பது அல்லது அறுபது ஜனங்களுக்கு ஓர் நீர்க்குழாய்வீதம் ஏற்பட்டுள்ளது. நாள்முழுவதும் அக்குழாய்களில் இடைவிடாது ஜலம் வருவதுமில்லை. ஆதலின் வாரத்துக்கு ஒருமுறைகூட ஸ்நானம்செய்வதற்கும் அங்குள்ளவர்களுக்கு இயலாது. இத்தகைய நிலைமையில் வசித்தவர்களை வியாதியும் பீடிக்காமலிருக்குமோ? 50 55

இவ்வளவு கஷ்டங்களும் நிரம்பிய இடங்களில் ஜனங்கள் வசிக்க உடன் படுவானேன்? என்றாலோ, அவர்களது எழ்மையே அதற்குக் காரணம். பேராசை கொண்ட சிலபேர்கள், சொந்தக்காரர்களிட மிருந்து மொத்தமாய்ச் சில வீடுகளை வாடகைக்கு வாங்கிக் கொண்டு, அவைகளிலுள்ள அறைகளைத் தனித்தனியாகப் பிறருக்கு உயர்ந்த வாடகைக்கு விட்டு லாபமும் சம்பாதித்து வந்தனர். இதனாலேயே எழைகள் பட்ட கஷ்டம் முன்னிலும் அதிகரித்தது. உதாரணமாக 14அடி நீளம், 13அடி அகலம், 6அடி உயரங்கொண்ட ஓர் அறையில் மூன்று குடும்பத்தார்கள் குடியிருந்தனர். அவர்களது தொகை 22. வேறொரு அறை 12அடி நீளம், 10அடி அகல்மானது. அதில் 32 ஜனங்கள் வசித்து வந்தனர். மற்றுமொரு அறை 18அடி நீளம் 10அடி அகலம்; இதில் 58 பேர்கள் குடியிருந்தனர். என்றால் அவர்கள் அனுபவித்த கஷ்டம் இத்தன்மையது என்று ஒருவாறு விளங்கலாம். 60 65 70

விளைந்த கஷ்டங்களைப் பொறுக்கமுடியாத சிலர்,
75 போலீஸ் உத்தியோகஸ்தர்கள் தெருவில் வந்த காலத்தில், அவர்கள் முன்னிலையில் முனிசிபல் விளக்குக்களை யுடைத்தனர். உடனே அவர்கள் கைதி செய்யப்பட்டுச் சிறைச் சாலைக்கு இழுத்துக் கொண்டு போகப் பெற்றனர். அவர்களும் உற்சாகத்துடன் சென்றனர்.
80 இவ்விதக் குற்றத்தை என் செய்தீர்கள்? என்று வினவப்பட்டபோது, 'நாங்கள் வேண்டுமென்றே சட்டவிரோதமான இக்காரியத்தைச் செய்தோம். நாங்கள் உடம்பு கழுவிக் குளித்துப் பல நாட்கள் ஆயின. எங்கள்மேலுள்ள அழுக்கு இவ்வளவெனச் சொல்லவொண்ணாது.
85 சிறைச்சாலையில் புக நேர்ந்தால் புகுவதற்குமுன் கட்டாயம் நாங்கள் ஸ்நானம் செய்விக்கப்படுவோம் என்று தெரியும். அவ்விதத்தாலாவது உடம்பைச் சுத்தஞ் செய்து கொள்ளலாமென்றே இக்குற்றத்தைச் செய்தோம்' என்று சொன்னார்களாம். வறுமையின்
90 கொடுமை இதனினும் உளதோ!

இத்தகைய ஸ்தலங்களில் குடியிருப்பவர்களின் சுபாவம் இத்தன்மைய தென்று சொல்லவும் வேண்டுமோ? குடியர்கள், வெறியர்கள், வீணர்கள், கொலைகளவுகள் புரிவோர் ஆகிய இத்தன்மையவரே பெரும்பால
95 ராவர். எவரேனும் யோக்கியர்கள் இவர்கள் மத்தியில் வந்து குடியிருக்க நேர்ந்தாலும், வெகு சீக்கிரத்தில் யோக்கியதை மாறித் தம் தோழர்களின் வழிகளைப் பின்பற்றுபவ ராவர்.

இதை யெல்லாம் நேரிலேயே போய்ப் பார்த்த
100 ஷாப்ட்ஸ்பரி பிரபு இக்கொடுமையை நீக்கும் பொருட்டு

1851ஆம் வருஷத்தில், பார்லிமெண்ட் ஸபையில் ஓர் மசோதாவைக் கொணர்ந்தார். அதன் முக்கிய கருத்து யாதெனில், ஒவ்வொரு பட்டணத்திலும் ஏற்பட்டுள்ள வாடகை விடுதிகளையுஞ் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் நேரில் பார்வையிட்டு அவைகளெல்லாம் சுகாதார வச 105 திகள் நிறைந்துள்ளனவா யிருக்குமாறு செய்ய வேண்டுமென்பதேயாம். சுத்த ஆகாயம் உலாவுவதற்கு வேண்டிய பலகணிகளும், சுத்த நீர் தாராளமாய்க் கிடைக்கக் கூடிய அளவுக்கு நீர்க்குழாய்களும், வீட்டினின்று வெளிவந்த அசுத்த நீர் வாசலில் தங்காது அப் 110 புறப்படுத்தப் படுவதற்கு அவசியமான சாக்கடைகளும் இருக்க வேண்டும். மேலும் அடிக்கடி சுவர்களுக்குச் சுண்ணாம்பு பூசவேண்டும். இல்லையாயின் அவ்விடுதிகளில் வாடகைக்கு ஜனங்களை வசிக்கச்செய்யக்கூடாது. அன்றியும் வீடுகளின் விஸ்தீர்ணத்துக்குத் 115 தகுந்தபடி அவைகள் ஒவ்வொன்றிலும் இவ்வளவு ஜனங்கள் தான் வசிக்கலாமென நிர்ணயிக்கப் படவேண்டும். மீறி நடக்கும் வீட்டுச் சொந்தக்காரர்களைத் தண்டிக்க வேண்டும் என்ற நிபந்தனைகளெல்லாம் அம் மசோதாவில் அடங்கியுள்ளன. பொது ஜனங்கள் இம் 120 மசோதா மிகவும் அவசியமானது என்பதை எளிதில் உணர்ந்து கொண்டகாரணம் பற்றி அதிக விவாதமின்றி அது பார்லிமெண்ட் சபையில் அங்கீகரிக்கப்பட்டுச் சட்ட மாயிற்று.

இச்சட்ட நிபந்தனைகள் அனுஷ்டிக்கப்பட்டதனாலே வெகு சீக்கிரத்தில் பொது ஜன ஸௌகரியங்கள் 125 விருத்தியாயின. ஆடு மாடுகள் போல் ஜனங்கள் வீடுகளில் அடைக்கப் பட்டிருப்பது ஒழிந்தது. முன் பத்து

அல்லது பன்னிரண்டு பேர்கள் இருந்த இடத்தில் இப்
130 போது நான்கு அல்லது ஐந்து பேர்களே இருந்தார்கள்.
ஆதலின் தொத்து வியாதிகள், ஜ்வரம் முதலிய ரோகங்
களால் பிடிக்கப் பட்டவர்களுடைய தொகையும் இறந்
தவர்களின் தொகையும் மிகுதியும் குன்றின.

---

## VIII புகைப்போக்கி யேறும் பிள்ளைகள்.

சென்ற நூற்றாண்டில், இங்கிலாந்தில் நீராவியின்
சக்தியினால் இயக்கப்பட்ட யந்திரசாலைகள் விருத்தி
யாகிக் கைத்தொழில்களும் மிகுந்து வந்தனவென்று
ஏற்கெனவே கூறியுள்ளோம். அவ்வியந்திரசாலைகள்
5 ஒவ்வொன்றிலும் உயர்ந்தோங்கிய புகைப்போக்கிகள்
உண்டு. அவற்றின் உட்புறத்தை யடிக்கடி சுத்தஞ்
செய்தல் மிக அவசியம். அவ்வாறு செய்யாவிடில் உட்
பக்கத்தில் புகை மிகுதியும் படிந்து, யந்திர அறையி
னின்றும் கிளம்பும் புகை முழுதும், வெளிப்போகாமல்
10 உள்ளேயே சூழ்ந்து நின்று, வேலைசெய்வோரைபிடிப்
பது மன்றிப் புகைப்போக்கிகளே காலக்கிரமத்தில்
துருப்பிடித்து இடிந்து விழுந்துபோம். இது காரணம்
பற்றிப் புகைப் போக்கிகளைச் சுத்தம் செய்வதற்
கென்றே சில கண்டிராக்டர்கள் ஏற்பட்டார்கள். அவர்
15 கள் தாங்களே புகைப்போக்கிகளில் ஏறிச் சுத்தஞ்செய்
வதற்குத் தகுந்தவர்க ளல்லர். ஏனெனில், புகைப்
போக்கிகளின் உட்புறங் குறுகலானதுபற்றி வயது
முதிர்ந்து தேகம் பருத்தவர்கள் அவைகளின்மேல்
ஏறவொண்ணாது. ஆதலின் கண்டிராக்டர்கள் இதற்

கென்றே வெகு இளம்பிராயத்துச் சிறுவர்களைப் பழக்கி 20
வந்தார்கள். அவர்களெல்லோரும் பெரும்பாலும் நாலு
வயதுக்கு மேற்பட்டு எட்டு வயதுக்கு உட்பட்டவர்
களே. பாவம்! இச்சிறுவர்கள் புகைப் போக்கிகளில்
ஏறி வேலைசெய்யும்போது பட்ட கஷ்டத்தை நினைக்கும்
போதே நம்எல்லோருக்கும் மனம் திடுக்கிடும். உருண்டு, 25
குறுகி, நெடிதோங்கிய குழாய் ஒன்றில் உட்புறமாய்
உயர ஏறுவதென்றால் சுலபமா! தேகத்தின் அங்கங்
கள் ஒவ்வொன்றையும் எவ்வளவு குறுக்கி மடக்க முடி
யுமோ அவ்வளவுக்கும் மடக்கிக் குழாயின் ஒரு பக்கத்
தில் தேகம் முழுதும் உராயும்படி செய்துகொண்டே 30
ஏறவேண்டும். குழாயின் உட்பக்கம் மிருதுவாய் வழ
வழவென்றிருந்ததா? அவ்விதம் இருந்தால் ஏறத்தான்
முடியுமா? இல்லை. வெகு சுரசரப்பாயும் காடு முர
டாயும் இருக்கும். ஆதலின் ஏறிச் செல்லுங்காலத்து,
கைகளிலும், முழங்கால்களிலும் காயம் பட்டு இரத்தம் 35
மிகுதியும் வெளிவரும். அவ்வாறு உதிரம் வாராதிருப்
பதற்கு ஓர் யுக்தி கண்டுபிடிக்கப்பட்டது. அதாவது
புகைப் போக்கியி லேறுவதற்கு முன்பு அப்பிள்ளைகளை
நெருப்புக்குப் பக்கத்தில் நிறுத்தி உப்பு நீரை அவர்கள்
தேக முழுவதிலும் தேய்ப்பதாகும். அவ்விதஞ் செய்த 40
தனால் தேகத்தின் மேலுள்ள தோல் தடித்து எளிதில்
காயம்படா வண்ணம் ஆயிற்று. ஆனால் அச்சிறுவர்
களுக்குக் கஷ்டம் நீங்கிற்றோ? இல்லவேயில்லை. அடிக்
கடி உப்பு நீர் தேய்க்கப்பட்ட காரணம் பற்றி உடம்
பில் ஓர்வித கோரமான பிளவைகள் கிளம்பிச் சகிக்க 45
முடியாத கஷ்டத்தை யுண்டாக்கின.

யந்திரசாலைகளில் வேலை நடக்கும் காலத்தில்
புகைப் போக்கிகளைச் சுத்தஞ் செய்வது முடியாதல்ல
வோ! அதனால் காலையில் வேலைக்காரர்கள் வருவதற்கு
50 முன்னரே அவ்வேலை நடந்தேற வேண்டி யிருந்தது.
ஆதலின் விடியற்காலையில் இரண்டு அல்லது மூன்று
மணிக்கே கண்டிராக்டர்கள் பிள்ளைகளை யெழுப்பி
வேலைக்கு அழைத்துக் கொண்டு போவது வழக்கம்.
படுத்துறங்கும் அப்பேதைகளை யடித்தும், உதைத்தும்
55 எழுப்பி, வேலை ஸ்தலங்களுக்கு அழைத்துப் போய்
மையிருட்டாயிருக்கும் புகைப் போக்கிகளின்மீது ஏறச்
செய்வார்கள். அந்தோ பரிதாபம்! குளிரினாலும்,பயத்
தினாலும் நடுக்கங் கொண்ட அப்பாலர்கள் சிற்சில சம
யங்களில் கொஞ்ச தூரம் ஏறிப் பிறகு ஏற முடியாமற்
60 போவதுமுண்டு. அச்சமயத்தில் குரூர நெஞ்சம்
படைத்த கண்டிராக்டர்கள் வைக்கோலைக் கொணர்ந்து
புகைப்போக்கியின் அடிப்பக்கத்தில் பரப்பி அதைக்
கொளுத்தி விடுவார்கள். உயர எழும்பும் உஷ்ணத்தை
யும், புகையையுஞ் சகியாதவர்களாய் அக்குழந்தைகள்
65 மேன் மேலும் ஏறிச்செல்வார்கள். சிற்சில சமயங்க
ளில் புகைப் போக்கிகளுள் விஷக்காற்று சம்பந்தப்
பட்டு அதனால் பிள்ளைகளுக்கு வியாதி யுண்டாவது
முண்டு.

வேலை யொழிந்த நேரங்களிலாவது அச்சிறுவர்
70 களுக்குச் சுகமுண்டா? அதுவுமில்லை. பேராசை
கொண்ட கண்டிராக்டர்கள் அவர்களுக்குப் பூர்த்தி
யான உணவுங் கொடுப்பதில்லை. குளிர் அடங்குவதற்
குப்போதுமான ஆடைகளுந் தருவதில்லை. அநேக
மாய் அவர்கள், காற்றாவது, வெளிச்சமாவது சிறிதும்

இல்லாத அறைகளில் சாம்பற் குவியலின் மீது படுத்து 75
றங்குவது வழக்கம். அவர்கள் குளித்துத் தேகத்தைச்
சுத்திசெய்து கொள்ளுவது வெகு அரிது. தேக வளர்
ச்சியின்றி, அங்கவலி குன்றிக் காய வடுக்கள் மிகுந்து
வியாதியால் பிடிக்கப்பட்டு, பார்வைக்கு வெகு பாதே
சிகளாய்க் காணப்பட்டதனாலே, கண்டிராக்டர்கள் அச் 80
சிறுவர்களை வெளியிலே ஒரு காலத்திலும் அனுப்புவ
தில்லை.

ஆ! கொடிது, கொடிது! இத்தகைய அநீதஞ்
செய்தபோது, 'கண்டிராக்டர்களுக்குச் சிறுவர்கள் எவ்
வாறு கிடைத்தனர்?' என்று கேள்வி பிறக்கலாம். 85
வறுமையின் கொடுமையை என்னவென்று சொல்லு
வோம்!

> மானங் குலங் கல்வி வண்மை யறிவுடைமை
> தானந் தவமுயர்ச்சி தாளாண்மை— ......
> ..........................................
> பசி வந்திடப் பறந்துபோம்.

அன்றோ! வறுமைத் துன்பத்தால் காப்பாற்ற முடி
யாது தாய் தந்தையரால் மனப்பூர்வமாக விற்கப்பட்ட
அருமைக் குழவிகள் பலர். மேலும் தந்தை தாயின்றி 90
அநாதர்களாயிருந்து கண்டிராக்டர்கள் வசம் வந்தவர்
வேறுபலர்; இதுவன்றியும் கண்டிராக்டர்கள், அயோக்
கியர்கள். சிலரைக் கிராமாந்தரங்களுக்கு அனுப்ப,
அங்கிருந்து அவர்களால் களவு செய்யப்பட்டு வந்த
சிறுவர்கள் சிலர். 95

பிறருக்கு நேர்ந்த துயரைத் தம்முடையது போல்
பாவிக்குஞ் சுபாவம் வாய்ந்த நம் ஷாப்ட்ஸ்பரி பிரபு

வுக்கு, இக்கொடுமையையுங் கண்டு மனப்பொறை யுண்டாமோ! நேரே சென்று அப்பேதையர்கள் நிலைமை
100 யைக் கண்ணாக்கண்டு மனம் பரிதவித்து 'எவ்விதமேனும் இவர்கள் துயரை நீக்கமுயல்வேன்' எனத்திட சங்கல்பஞ் செய்துகொண்டனர்.

இவர் காலத்துக்கு முன்னேயே இக்குழந்தைகளின் நன்மையையுத்தேசித்து ஓர் சட்டம் ஏற்பட்டி
105 ருந்தது. ஆயினும் அதிகாரிகளுடைய அசிரத்தையால் அச் சட்ட நிபந்தனைகள் ஒழுங்கே அனுஷ்டிக்கப்படவில்லை. ஆதலின் சட்டம் இருந்தும் இல்லாதது போலேயே கண்டிராக்டர்களது நடவடிக்கையிருந்தது. இதை யறவே யொழித்துச் சட்டத்திலுள்ள குறை
110 களைத் தீர்க்குமாறு புதிய நிபந்தனைகளைப் பிரேரேபித்து அச்சட்டத்தைப் புதிப்பிப்பதற்குப் பத்து வருஷகாலம் நம் பிரபு பாடுபடவேண்டியதாயிற்று. அவ்வாறு காலதாமத மாயினுஞ் சற்றேனும் மனங்கலங்காது விடாமுயற்சியுடன் சமயம் வாய்த்தபோதெல்லாம்
115 தமது அபிப்பிராயத்தைப் பொதுஜனங்கள் முன்னிலையிலும்,பார்லிமெண்ட் சபையிலும் வற்புறுத்தி வந்தார். கடைசியாய் 1864-ஆம் வருஷம் நவம்பர் மாதம் முதல் தேதியில், இவரால் கொணரப்பட்ட திருத்த மசோதா, பார்லிமெண்டாரால் அங்கிகரிக்கப்பட்டுச் சட்டமாயிற்
120 று. அச்சட்டத்தின் முக்கிய நிபந்தனை யாதெனில், 'பதினாறு வயதுக்குட்பட்ட யாதொரு சிறுவனையும் புகைப்போக்கியின் மேல் ஏறச்செய்யக்கூடாது' என்பதே. 'அவ்வாறு செய்யின்குற்றஞ்செய்தவர் சிறையில் அடைக்கப்படுவர்' எனவும் அச்சட்டத்தில் கண்டிருந்தது.
125 அதனால் கஷ்டங்கள் வெகுவாய் நிவர்த்தியான போதி

னுஞ் சிற்சில விடங்களில் அநீதம் நடந்து கொண்டே வந்தது. 1872-ஆம் வருஷத்தில் 'ஸ்டாபோர்ட் ஷயர்' என்ற மாகாணத்தில் ஓரிடத்தில், எழுரை வயதுள்ள சிறு வன் ஓர் புகைப்போக்கியி லேற்றப்பட்டு அங்கிருந்த 130 விஷக்காற்றை யுட்கொண்டதனுல் மாண்டுபோனுன். அன்றியும் 1875-ஆம் ஆண்டில் கேம்பிரிட்ஜ் நகரத்தில் பதினுன்கு வயதுள்ள சிறுவன் ஒருவன் மேற்கூறிய விதமாகவே உயிர்துறக்க நேர்ந்தது. ஆதலின் ஷாப் ட்ஸ்பரி பிரபு மறுபடியுஞ் சிற்சில அம்சங்களைச் சேர் 135 த்து மேற்சொன்ன சட்டத்தைத் திருத்தி யமைக்க வேற்பாடு செய்தனர். அவர் முயற்சி பலிதமாகவே, புகைப்போக்கியேற்றல் விஷயமாக இதுகாறும் நடந்து வந்த அநியாயங்கள் அறவே யொழிந்தன.

---

## IX கிராமாந்தரச் சிறுவர்கள்.

இக்காலத்தில் யந்திரசாலைகள் மிகுந்துள்ள பட்ட ணங்களில்தான் வேலை செய்யுஞ் சிறுவர்களுக்குக் கஷ் டம் என்பதில்லை. கிராமாந்தரங்களிலும் அவர்களுக் குத் துன்பமுண்டு. நிலங்களை மிகுதியாக வுடையவர் கள் தங்கள் நிலங்களைத் தாங்களே பயிரிடுவதில்லை. 5 குத்தகைக்காரர்களைக் கொண்டே யிக்காரியத்தை முடிப்பது வழக்கம்; எககாலத்தில் வெகு விஸ்தீர்ணம மைந்த புலங்கள் சாகுபடி செய்யவேண்டி வாவே வேலைக்கு அவசியமான மனிதர்களையும், பிள்ளைகளை யுங் கொணர்ந்து சேர்ப்பதற்கென்றே சில கண்டிராக் 10 டர்கள் எற்பட்டனர். இவர்கள் அங்கங்கே கிராமங் களுக்குச் சென்று கூலிவேலைசெய்து பிழைக்குங் குடும் பத்தினர்களுடன் ஒப்பந்தஞ் செய்துகொண்டு தனிப்

பட்ட மனிதர்களையோ, பிள்ளைகளையோ, காமாகவேவே
15 லையில்அமாராமல் தடுத்ததுமன்றி, பொப்பந்தத்துக்குட்
பட்டவர்களுக்குத் தகுந்த சம்பளங் கொடாமலும்,
அவர்களுக்குத் தாங்கமுடியாத வேலையையும் இட்டு,
வேறு பலவிதத்திலும் அவர்களைத் துன்புறுத்தி வந்
தனர். அதிகாலையில் ஒப்பந்தக்காரர்கள் யாவருங்
20 குறிப்பிட்ட வோரிடத்தில் வந்து கூடவேண்டும்; பிறகு
வேகமாய் வயல்களுக்குப் போய் எருவைப் பரப்பு
வதோ, களைபறிப்பதோ, கற்களைப் பொறுக்கி யெறி
வதோ, கிழங்குகளை வெட்டி யெடுப்பதோ, அன்றி
வேறு எத்தொழிலோ ஆகிய இவற்றிலொன்றில் அமா
25 வேண்டும். ஆறு எழு வயதுக் குழந்தைகளும் இவ்
வேலைகளைச் செய்ய நேர்ந்தது. ஓய்வோ, ஒழிவோ
இடையாது. வெயிலானாலுஞ் சரி, மழையானாலுஞ்
சரி, குளிரானாலுஞ்சரி, தேகம் அசௌக்கியமானாலுஞ்
சரி அன்றுடங் குறிப்பிட்ட வேலையைச் செய்தே தீர
30 வேண்டும். ஐயோ பாவம்! நன்றாய்த் தூங்குங்குழந்தை
களை யடித்து எழுப்பி, குளிரினால் நடுங்கும் அப்
பேதையர்களை வெகு தூரம் நடத்தி யிட்டுக் கொண்டு
போய், கால் நோகவும், கை சோரவும், உடல் நிமிர்ந்து
நிற்க வொண்ணாது தள்ளாடவும், முட்களாலுங் கூரிய
35 கற்களாலும் வெட்டுண்டு உள்ளங் கைகளினின்றும்
உதிரம் ஒழுகவும் அவர்கள் வேலை செய்வதைப் பார்த்
துக் கொஞ்சமேனும் மனங் கரையாது அந்தப்பாவி
கண்டிராக்டர்கள் இக்குழந்தைகளை மேன் மேலும்
வேலைசெய்யுமாறு ஏவுவர்.

40 ஷாப்ட்ஸ்பரி பிரபு இதைக் கண்கூடாகப் பார்த்
துஞ் சும்மா விருப்பரோ! நாற்பது வருஷகாலமாய்ப்

பாடுபட்டு அதன் பலனாக யந்திரசாலைகளில் வேலைக்கு அமருஞ் சிறுவர்களுக்கு ஏற்பட்ட ஸௌகர்யங்கள் யாவுங் கிராமாந்தரங்களில் வியவசாயத்தொழில்செய்து பிழைக்குஞ் சிறுவர்களுக்குங் கிடைக்க வேண்டுமெனப் 45 பார்லிமெண்ட் ஸபையில் வற்புறுத்தி, அதற்கு அநுகுணமான ஓர் மசோதாவை 1867-ஆம் வருஷத்தில் பிரேரேபித்தார். பார்லிமெண்ட் அங்கத்தினர் நம பிரபுவின் மனநிலையை யறிந்தவ ராதலின் அதிக விவாத மின்றி அம் மசோதாவை யங்கீகரித்தனர். 50 எட்டுவயதுக் குட்பட்ட சிறுவர்களை வேலைக்கு அழைக்கக் கூடா தென்பதும், எட்டு வயதுக்குமேல் பதின் மூன்று வயதுக் குட்பட்ட சிறுவர்களைப் பிரதிதினமும் ஓர் குறிப்பிட்ட காலத்துக்கு மேல் வேலைசெய்யச் சொல்லக்கூடா தென்பதுமே அச்சட்டத்தின் முக்கிய 55 நிபந்தனைகள்.

---

## X. 1878-ஆம் வருஷத்துச் சட்டம்.

சென்ற ஐம்பது வருஷங்களாக யந்திரசாலைகளிலும், கரிச்சுரங்கங்களிலும், மற்ற கைத்தொழிற்சாலைகளிலும் வேலைசெய்யுஞ் சிறுவர்களுடையவும், ஸ்திரீகளுடையவும் நன்மையை யுத்தேசித்து அப்போதைக்கப்போது ஏற்படுத்தப்பட்ட சட்டங்களை யெல்லாம் 5 ஒருங்கு சேர்த்து, அவற்றின் நிபந்தனைகளை யொழுங்குபடுத்தி ஒரே சட்டமாக வியற்றவேண்டுமெனக் கவர்ன்மெண்டாரே முயற்சிசெய்தனர். பார்லிமெண்டு அங்கத்தினர்களும் அதற்கு அனுமதி யளித்தனர். ஆகவே தனித்தனியா யிருந்த நாற்பத்தைந்து சட்டங்களை 10

யொன்று சேர்த்து முக்கிய நிபந்தனைகளை யெல்லாஞ்
செவ்வனே திருத்தியமைத்து ஓரே சட்டமாகச்செய்து
பார்லிமெண்ட் ஸபையில் விவாதத்துக்குக் கொண்டு
வந்தபோது, அங்கத்தினர்கள் ஏகமனத்தினராய் அதை
15 யங்கீகரித்தது மாத்திரமன்றி, அச்சமயம் ஸபையில்
விஜயஞ் செய்திருந்த நம் ஷாப்ட்ஸ்பரி பிரபுவைப் பல
வாறு புகழ்ந்து எத்தி, அவரது இடைவிடா முயற்சியா
லன்றி அத்தகைய சட்டஞ் செய்யப்பட் டிராதென்
றும், ஏழைகளுடைய துயரம் அவ்வளவு சீக்கிரத்தில்
20 தீர்ந்திராதென்றும், சுமார் நாற்பது வருஷகாலமாய்ப்
பட்ட கஷ்டத்தின் பயனை நேரில் பார்த்து ஆனந்த
மடையும் பாக்கியத்தை நம் பிரபு பெற்றதற்குத் தாங்
கள் எல்லோரும் சந்தோஷப் படுவதாகவுஞ் சொன்னார்
கள். நம் பிரபுவுக்கும் அச்சமயம் உண்டான மகிழ்ச்
25 சிக்கு அளவேயில்லை.

அச்சட்டத்தின் முக்கிய அம்சங்கள் பின் வருவ
னவாம்:—பதினான்கு வயதுக் குட்பட்ட சிறுவர்கள்
யந்திர சாலைகளிலோ, வேறு கைத்தொழிற் சாலை
களிலோ, ஒரு தினத்தில் காலையிலோ அல்லது மாலை
30 யிலோ ஒரு வேளை மாத்திரமே வேலையில் நியமிக்கப்
படலாமே யொழிய, இரு வேளைகளிலும் அவர்களை
ஒருவரும் வேலையில் அமர்த்தக்கூடாது. வேலையின்றி
யிருக்கும் மற்றொரு வேளையில் இச் சிறுவர்களுக்கு
எழுதப் படிக்க வேண்டிய வசதிகளை முதலாளிகள்
35 அமைத்துக் கொடுக்கவேண்டும். பதினான்கு வயதுக்கு
மேற்பட்டுப் பதினெட்டு வயதுக் குட்பட்டவர்களைப்
பகல் இரு வேளையிலும் வேலையில் ஒருவர் அமர்த்த
லாயினும், வயது முதிர்ந்தவர்களைப்போல் அவ்வளவு

காலம் வேலை செய்யும்படி கட்டாயப்படுத்தக் கூடாது.
மத்தியான காலத்தில் ஆகாரம் உண்ணுவதற்கு வேண் 40
டிய அளவு அவகாசங் கொடுக்க வேண்டும். வியாதி
நேர்ந்த காலத்துச் சிகித்சை செய்வதற்கு வைத்தியர்
களை முதலாளிகள் நியமிக்கவேண்டும். வேலை செய்யுங்
காலத்தில் அகஸ்மாத்தாய் உயிரை இழக்கவோ, அல்
லது யாதேனும் அங்க மிழந்து பிறகு வேலை செய்ய 45
முடியாதபடி யிருக்கவோ நேரிடின், அதற்குத் தக்க
பரிகாரத்தைப் பணவுதவி மூலமாய்ச் செய்ய முதலாளி
கள் கட்டுப்பட்டவர்கள். இவை போன்ற வேறுசில
நிபந்தனைகளும் அச்சட்டத்தில் அடங்கி யிருந்தன.

## XI. லண்டனில் அங்காடி வியாபாரிகள்.

லண்டன் நகரில் பெரிய வீதிகளுக்கும் பக்கத்தில்
கடைத் தெருக்களும் மார்க்கெட்டுகளும் இருந்தன.
ஆயினும், ஒதுக்கிடங்களிலுஞ் சிறு தெருக்களிலும்
கடைகளாயினும், மார்க்கெட்டுகளாயினுங் கிடையா.
அவ்விடங்களில் வசிப்பவர்களில் பெரும்பாலார் வெகு 5
வாய் ஏழைகளே. அவர்களுக்கு வேண்டிய மீன், பழம்,
கறிகாய் முதலிய பொருள்களை யன்றாடம் அங்காடி
வியாபாரிகளிடமிருந்தே யவர்கள் வாங்குவது வழக்
கம். அவ் வங்காடிக்காரர்களும் மிக்க ஏழைகளே.
அவர்கள் விடியற்காலையி லெழுந்து மார்க்கெட்டுக்குச் 10
சென்று மொத்தமாய்ச் சிலஉணவுப்பொருள்களைவாங்கி
அவைகளை ஓர் சிறு வண்டியி லேற்றிக்கொண்டு தெ
ருக்கள் தோறுஞ் சென்று விற்று வருவார்கள். அவர்
களது ஜீவனம் வெகு கஷ்டஜீவனமென்றே சொல்ல
வேண்டும். தங்கள் வியாபாரத்துக்கு வேண்டிய முத 15

லும் அநேகமாய் அவர்கள் கையி லிருப்பதில்லை. ஆத
லின் உயர்ந்த வட்டிக்குக் கடன் வாங்குவது வழக்கம்.
அன்றியும், பொருள்களை யேற்றிச்செல்லும் வண்டியும்,
அதை யிழுக்குங் கழுதையும் அவர்களுக்குச் சொந்த
20 மாயிரா. அவற்றின் சொந்தக்காரர்க ளிடமிருந்து
அவைகளை வாடகைக்கு அமர்த்திக்கொள்ளுவது வழக்
கம். தங்களுக்குக் கிடைத்த லாபத்தினின்றும் கட
னாக வாங்கின முதலுக்கு வட்டியும், வண்டி வாடகையுங்
கழித்தபிறகு மிகுதியாக நின்ற தொகை சொற்பமே
25 யாகும். ஆயினும், அங்காடி வியாபாரத்தொழில் செய்
து ஜீவனம் செய்தவர்கள் வெகு பேர்கள் உண்டு.
அவ்வியாபாரி யொருவனுக்கு, பிரதிதினமுங் கொள்
வினைக்கு வேண்டிய அற்பமுதலும் ஒரு வண்டியுங் கழு
தையுஞ் சொந்தமாகக் கிடைத்து விடுமானால், தான்
30 இகலோக சுக முழுவதையுமே அடைந்ததாக வெண்
ணுவான்.

அவ்வியாபாரிகள், அதிகயோக்கியர்களென்றுவது
செட்டாய்க்குடித்தனஞ் செய்பவர்களென்றுவதுசொல்
லுவதற்கில்லை. முன் பின் யோசியாது அப்போதைக்
35 கப்போது கிடைத்ததையெல்லாம் செலவுசெய்துவிட்டு,
கடன்காரர்கள் வந்து பணம் கேட்குங்கால் ஒன்றுஞ்
சொல்லத் தோன்றுது விழிப்பவர்களே அவர்களுள்
பெரும்பான்மையோர். அந்நிலைமையை மாற்றி, அவர்
களுக்கு நற்புத்தி கற்பிப்பதற்கும், சொற்பவட்டியில்
40 கடன்கொடுத்து உதவுவதற்கும், கொஞ்சங் கொஞ்ச
மாய் அவர்களால் சேமிக்கப்பட்ட திரவியத்தை வாங்
கி வைத்துக்கொண்டு, காலக்கிரமத்தில் அவர்களுக்கு
ஓர் வண்டியை வாங்கிக் கொடுப்பதற்கும், வேறு விதங்

களிலும் அவர்களது நிலைமையைச் சீர்படுத்துவதற்
கும் அநுகுணமாக ஓர் சபை ஏற்பட்டது. அச்சபை 45
யார் நம் பிரபுவின் தன்மையை யறிந்தவர்க ளாதலின்,
அவரையே தங்கள் சபைக்கு அத்தியக்ஷராயிருக்க
வேண்டுமென்று கேட்டுக்கொள்ள, அவரும் ஒப்புக்
கொண்டார். அன்று முதல் தம் ஆயுள் முடியும்வரை
யிலும் அவ்வியாபாரிகளிடத்து விசேஷ அன்பு பாராட்டி 50
அவர்களுக்கு எவ்வளவோ அவர் உதவிசெய்துவந்தனர்.
அடிக்கடி அவர்கள் கூட்டத்திற்சென்று அவர்களோ
டொருவராய் நின்று அவர்களுடன் தக்கபடி வார்த்
தையாடிச் சிறிது சிறிதாய்த் தங்களது நடவடிக்கை
களைச் சீர்திருத்திக் கொள்ளுமாறு செய்தனர். ஒரு 55
சமயம், லண்டனில் ஒரு பாகத்தில் இவ்வியாபாரிகள்
வந்து வியாபாரஞ் செய்யக்கூடாதென்று அதிகாரிகள்
உத்தரவிட்டனர். இது தெரிந்த ஷாப்ட்ஸ்பரி, அதி
காரிகளிடஞ் சென்று, அவர்களுடன் மன்றாடி அத்
தடை யுத்தரவை ரத்து செய்யும்படி செய்தார். 60

ஆதலின் ஷாப்ட்ஸ்பரி பிரபு என்ற பேரைக்
கேட்ட மாத்திரத்திலேயே அவ்வியாபாரிகளுக்கு மட்
டில்லாத மகிழ்ச்சியுண்டாகும். அவரிடத்துத் தங்களுக்
குள்ள பக்தியையும், நன்கு மதிப்பையும் உலகத்தார்
யாவரும் அறியுமாறு தெரிவிக்க வேண்டுமென்ற அவா 65
அவர்களுக்கு உண்டாயிற்று. அதற்கென்று ஒரு
கூட்டங் கூடுவதாய்த் தீர்மானித்து, அச்சமயம் விஜயஞ்
செய்ய வேண்டுமென்று நம் பிரபுவைப் பிரார்த்திக்க
அவரும் ஒப்புக்கொண்டார். குறித்த தினத்தில் சபை
கூடிற்று. ஆயிரம் வியாபாரிகளுக்கு மேல் கூடினார்கள். 70
ஷாப்ட்ஸ்பரி பிரபு வந்து சேர்ந்ததும், அவரையெல்லோ

ரும் எழுந்திருந்து, கைகூப்பி வணங்கிக் கரகோஷஞ் செய்து வெகுமரியாதையுடன் மேடையின்மீதுள்ளஆச னத்தில் அவரை யிருத்தினர். பிறகு, வியாபாரிகளில் பிர
75 முகர் ஒருவர், தங்கள் கூட்டத்தார் ஷாப்ட்ஸ்பரி பிரபுவால் அடைந்துள்ள நன்மைகளைக் குறித்துப்பேசி, அவரிடத்துத் தங்களுக்குள்ள அன்புக்கும், பக்திக்கும் அறிகுறியாக அவர் ஓர் பரிசைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்று சொன்னர். உடனே சபையில் அழகாய்
80 அலங்கரிக்கப்பட்ட ஓர் கழுதை கொணர்ந்து நிறுத்தப் பட்டது. அப்பிரமுகர் அதை மெல்ல நடத்திச் சென்று மேடையில் ஏற்றினர். ஷாப்ட்ஸ்பரி பிரபு சரேலென்று தமது ஆசனத்தை விட்டு எழுந்து அப்பிராணியைத் தழுவி யணைத்துக் கொண்டார். பிறகு,
85 சிறிது நேரம் அச்சபையில் பேசினர். தாம் நிரம்பவும் ஆனந்த மடைந்ததாகவும், தமக்களித்த பரிசுக்குத் தாம் மிகவும் வந்தன முள்ளவரா யிருப்பதாகவும் அப்பிராணியைத் தம் குழந்தையைப்போல் காப்பாற்றுவது நிச்சயமென்றுங் கூறி, 'நான் இறந்த பிறகு, உலகி
90 லுள்ள ஜனங்கள், இந்தப்பிராணி யெவ்வளவு பொறுமையுடனும் பிறர்மீது குறை கூறுமலும் தன் தொழிலைச் செய்து வருகிறதோ, அவ்விதமே நானும் எனக்குள்ள வேலையைச் செய்து வந்தேனெனச் சொல்லுவதே சிறந்த புருஷார்த்தமென நான் நினைத்துள்ளேன்'
95 என்று சொல்லி முடித்தார்.

தமக்களித்த கழுதையைத் தம் சொந்தக் கிராமத்துக் கனுப்பி, அங்கே தமக்குள்ள குதிரைகள், பசுக்கள் முதலிய மிருகங்களோடு அதுவும் போஷிக்கப்பட்டு வருமாறு ஏற்பாடு செய்தார்.

நம்பிரபுவிற்கு, வாயில்லாப்பிராணிகளிடத்திலுள்ள 100
காருண்யத்தைப் பார்த்து, அங்காடி வியாபாரிகளும்
அவைகளை யன்புடன் நடத்தத் தலைப்பட்டார்கள்.
உதாரணமாக, 1872-ஆம் வருஷத்தில் டார்பி என்ற
வர்த்தகன் ஒருவன், தன் வண்டியை ஓட்டிக்கொண்டு
போகையில் அதில் கட்டியிருந்த கழுதை கால் தடுக்கிக் 105
கீழே விழுந்து காலை யொடித்துக்கொண்டது. அவனது
சிநேகிதர்கள், அந்தக் கழுதைக்குக் கால் குணமாகா
தென்றும், அது அதிகமாய்க் கஷ்டப்படா வண்ணம்
அதை யுடனே கொன்று விடுவதே நலமென்றுங் கூறி
னார்கள். டார்பிக்கோ, அவ்வாறு செய்வதில் மன 110
மில்லை. தனக்கு எவ்வளவோ பாடுபட்டுழைத்த அப்
பிராணியை யெவ்வாறுயினும் சொஸ்தம்செய்யவேண்டு
மென விரும்பினான். வீட்டுக்குச் சென்று, தனக்
கென்று தனியாயிருந்த அறையில் அதைப் படுக்கவை
த்து, தகுந்த வைத்தியர்களைக் கொண்டு அதற்கு சிகித் 115
ஸை செய்வித்தான். கொஞ்ச நாளில் சிறிது குணம்
ஏற்பட்டது. பிறகு, பத்துப் பதினைந்துமைல் தூரத்தி
லுள்ள ஓர் கிராமத்துக்கு அதை யனுப்பி, அங்குள்ள
தனது சிநேகிதன் ஒருவனைக்கொண்டு அதைப்போ
ஷித்து வந்தான். இவ்வாறு பதினெட்டு மாதங்கள் 120
கழிந்தன. கடைசியாய் அப்பிராணி, சௌக்கியப்பட்
டுத் திரும்பித் தன் எஜமானனிடம் வந்து முன் போல
ஊழியஞ் செய்யலாயிற்று. லண்டன் ஜீவரக்ஷண ஸமா
ஜத்தார், டார்பிசெய்த காரியத்துக்கு அவனை மிகவும்
புகழ்ந்து அவனுக்கோர் நற்சாட்சி பத்திரமும் அளித் 125
தார்கள். ஷாப்ட்ஸ்பரி பிரபு விதைத்த விதை முளைகி
ளம்பிப் பெருஞ்செடியாகிப் பூத்து மேலேசொன்ன நற்
காரியங்களாங் கனிகளைத் தந்தது.

## XII வேலை யில்லாச் சிறுவர்களுக்கு வேலை.

யந்திரசாலைகளிலும், இதரவேலை ஸ்தலங்களிலுஞ் சிறுவர்களுக்குத் தாங்கப்படாத வேலையைக் கொடுத்து அதைச் செய்யக் கட்டாயப் படுத்தக் கூடாதென நினைந்து, அதை யொழிக்குமாறு பல சட்டங்களையும் 5 ஷாப்ட்ஸ்பரி பிரபு இயற்றி வைத்தது வாஸ்தவமே. ஆயினும், வேலை செய்வோம் என்றாலும் வேலை கிடைக்காமலும், குடிப்பதற்குங் கஞ்சியில்லாமலும் லண்டன் நகரத் தெருக்களில் அலைந்த நூற்றுக் கணக்கான சிறுவர்களுக்கு என்ன செய்வது? 10 வேலை செய்யாமலிருந்து பசியால் வருந்துவதை விட, தாங்கப்படாத கடின வேலையைச் செய்தாவது கொஞ்சம் உணவுக்கு ஆதாரம் செய்து கொள்வது நன்றல்லவா? இதனுண்மையை ஷாப்ட்ஸ்பரி பிரபு தெரிந்து கொண்டார். பிறகு ஒரு நாள், பதினாறு வயதுக் குட் 15 பட்ட சிறுவர்களெல்லாம், குறிப்பிட்ட ஓர் இடத்தில் தம்மை வந்துபார்க்கவேண்டுமென்று பிரசுரஞ்செய்வித்தார். அவ்வாறே இருநூறு பிள்ளைகளுக்குமேல் அன்று வந்தார்கள். நம் பிரபு, அவர்களுக்கு வயிறார உணவு கொடுத்து, பிறகு அவர்களுடைய நிலைமையைப் பற்றி 20 விசாரித்து, அநேக உண்மைகளைத் தெரிந்து கொண்டார். வந்துள்ளவர்களுள் பலரும் தாய் தந்தையரின்றி அநாதர்களா யிருந்தனர். தினந்தோறும் அவர்களுக்கு ஆகாரங் கிடைப்பதில்லை. உடுக்க உடையுமில்லை. குளிரடங்கப் படுத்துறங்க இடமுமில்லை. அவர்களில் 25 சிலர், திருட்டுமுதலிய குற்றங்கள் சாட்டப்பட்டு இரண்டொரு தரஞ் சிறையிலிருந்தவர்கள். பெரும்பாலும் கூலிவேலை யகப்படாத காரணத்தினாலேயே குற்

றங்கள் செய்யவேண்டி வந்ததாம். இவற்றையெல்லாங்
கேட்டுக் கடைசியில் நம்பிரபு, அப்பிள்ளைகளைப் பார்த்து
'குழந்தைகளே! நீங்களெல்லோரும் யோக்கியமாய் 30
வேலை செய்து காலக்ஷேபஞ் செய்யும் வழியை நான்
காட்டினால், நீங்களெல்லோரும் அதைப் பின்பற்று
வீர்களா?' எனக்கேட்டார். 'ஆம், ஆம்' என்று அவர்
களெல்லோரும் மறுமொழி கூறினர். பிறகு அவர்களை
தத்தம் இடத்துக்கு அனுப்பி விட்டனர். 35

மறுநாள் ஷாப்ட்ஸ்பரி பிரபு கவர்ன்மெண்டு கப்
பல் இலாகா அதிகாரிகளுக்கு ஓர் விண்ணப்பஞ்செய்து
கொண்டார். லண்டன்மாநகரில் நூற்றுக் கணக்கான
சிறுவர்கள் வேலையில்லாமல் தவித்தனரென்றும், அவர்
களுக்குக் கப்பலில் வேலை செய்யும் லஸ்கர்கள் முத 40
லிய கீழ்த்தர ஊழியர்களின் தொழிலைக் கற்பித்தல்
நலமென்றும், அவ்வாறு செய்யின் இதர தேசத்தி
னின்றும் லஸ்கர் வேலைக்கு மனிதர்களைத் தருவிக்க
வேண்டிவராதென்றும், வேலையில்லாது திண்டாடின
பல சிறுவர்களுக்கும் இது மூலமாய்க் காலக்ஷேபம் 45
செய்வதற்கு வழி யேற்படுமென்றும் அவ்விண்ணப்
பத்திலெழுதி யிருந்தார். அதிகாரிகளும் அவ்வபிப்பிரா
யத்தை யங்கீகரித்து இரண்டு பழைய சண்டைக்
கப்பல்களைச் சித்தப்படுத்திச் சிறுவர்களுக்கு மாலு
மித் தொழில்களைக் கற்பிப்பதற்கு ஏற்பாடு செய்தனர். 50
இது காரணமாகப் பிரதி வருஷமும் சமார் இருநூறு
சிறுவர்களுக்கு வயிறு வளர்க்கவும் வழியேற்பட்டது.
கொஞ்சகாலமான பிறகு, வேறொரு கப்பலையும் பாலர்
பயிர்ச்சிக் கென்று சித்தப்படுத்தி, 'ஷாப்ட்ஸ்பரி கப்பல்'
என்னும் நாமத்தை யதிகாரிகள் அதற்குச் சூட்டினர். 55

## XIII. ஷாப்ட்ஸ்பரியினது சீமாட்டியின் மரணம்.

1872-ஆம் வருஷத்தில் நம் பிரபுவுக்கு ஓர் பெரிய துக்க சம்பவம் நேர்ந்தது. நாற்பத்தொரு வருஷகாலமாய்த் தம்முடன் கூடவிருந்து, இல்லறத்தை நடாத்தி மக்களைப் பெற்றுப் பெருவாழ்வெய்தி, தனது கணவனும் நம்பிரபு கைக்கொண்ட முயற்சிகளை யெல்லாம் ஆதரித்து, மேன்மேலுந் தரும கைங்கரியங்க ளியற்றுவதில் அவரை உற்சாகப்படுத்தி, 'தன் அன்பர் துஞ்சிடில் தானுந் துஞ்சி, துன்பம் எய்திடில் தானும் அத்துன்புற்று, இன்பம் உற்றிடில் இன்புற்றிருந்து, செய்திர் என்றலுஞ் செய்தனம்' எனுமாறு ஒழுகி,

> அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
> பண்பும் பயனு மது.

என்ற ஆன்றோர் வாக்கை உண்மையென உலகத்தாருக்கு உணர்த்தவே வந்தனளோ! எனப் பிறர் புகழுமாறு தமக்கு வாழ்க்கைத்துணை நலனாயிருந்த ஷாப்ட்ஸ்பரி சீமாட்டி பரலோகஞ் சென்றனள். இக்காலத்தில் நம் பிரபுவுக்கு வயது எழுபத்தொன்று. உடல்வலி குன்றி, மனந் தளர்வுற்று, உறுதிகள் பலங் குறைந்து, பிறர் உதவிபார்த்து நிற்கும் பிராயமன்றோ அது! அயினும் அத்தகைய காலத்தே அவாது ஊன்றுகோலைத் தள்ளிவிட்ட ஈசனது திருவருள் விந்தையா மன்றோ! நம் பிரபு அடைந்த துயரைச் செப்பவும் போமோ! ஓவென்றலறிக் கோவெனக் கதறிப் பிறரை அல்லற்படச் செய்யுந் தன்மையதோ அத்துயரம்! அன்று, அன்று; மனத்துள் காந்து நின்று, பிறர்க்குச் சிறிதுந்தோன்றாது, அந்நெஞ்சினை நெக்கு நெக்கு

ருகச் செய்யுந் தன்மையது. அதைத் தாங்கமாட்டாது 25
நம் பிரபு பின்வருமாறு பொருள்கொண்ட வாக்கியங்
களைத் தனது தினசரிப் புத்தகத்தில் எழுதினர்: 'ஜக
தீசா! என் என் ஆருயிரைக் கைப்பற்றிப் போய்விட்
டீர்?

> தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

அல்லவோ அவள்! அவளின்றேல் புகலிடம் வேறி 30
லது எனக்கென வுமக்குத் தெரியாதோ? அந்தியகாலத்
தில் எங்கள் புதல்வரும், புதல்விகளும் அவரவர்களது
மனையில் சுகமுற்று வாழ்ந்திருக்க, நாங்கள் இருவருந்
தனியே ஓர் இல்லிலிருந்து ஒருவர்க்கொருவர் துணை
யாய் நின்று உம்மை வழிபடுவோ மென்று எண்ணின 35
எண்ணம் உமக்குத் தெரியாதோ சுவாமி! ஆயினும்
என்னை யிவ்வாறு கைவிடலாமோ!'

ஆனல் சீக்கிரத்தில் மனந்தெளிந்து 'நாற்பது
வருஷகாலமும் இந் நற்பேற்றைத் தந்தருளிய கருணை
வள்ளல் என்னிடத் தன்பை நீக்கின ரெனக் கொள்ளல் 40
மதியீனம். இந்த சம்பவமும் அவரது கருணையின்
வழிப்பட்டதே; அதில் ஐயமில்.' என்று அதே தின
சரிப் புத்தகத்தில் மறுபடியும் வரைந்தார்.

---

## XIV எமிலி கடன் நிதி.

'துக்கத்தின் வழிப்பட்டது, தூயதாம் ஞானம்,'
என்று ஆங்கிலத்தில் ஓர் வாக்கிய முண்டு. சுவானுப
வத்தில் தரித்திரமோ, துக்கமோ எத்தன்மையதெனத்

தெரியாத வொருவனுக்குப் பிறர்க்குறேறும் கஷ்டநிஷ்
5 டூரங்களை யறிதல் சாத்தியமாகாது; ஆதலின் அவனிடம்
அன்பும், அருளும், பொறையும், சாந்தமும், திக்கற்ற
வருக்குத் தெய்வமாந் தன்மையும், அடக்கமும், அமை
தியும் வெகுவாய் வளருவதற்குக் காரணம் ஏற்படாது.
ஒருகால் மேற்கூறிய குணங்கள் அவனிடத்தில் சுவ
10 பாவமாகவே பொதிந்திருப்பினும், ஏதேனுந் துக்க
சம்பவம் நேரிடின் அது காரணமாக அவனிடத்துள்ள
இனிய குணங்கள் மேன்மேலும் விருத்தி யடையும்.
இது அனுபவ சித்தமாக ஏற்பட்ட உண்மை.

அவ்வாறே நம் பிரபுவுக்குத் தம் தரும பத்னியின்
15 வியோகத்தால் ஏற்பட்ட துக்கத்தின் காரணமாக மேன்
மேலும் பிறருக்கு உபகாரஞ் செய்து அவர்களுக்
குள்ள குறைகளையுங் கஷ்டங்களையும் நிவர்த்திக்க
வேண்டுமென்ற அவா பதின் மடங்கு பெருகிற்று.
சற்று நேரங்கூட வீண்பொழுது போக்குவதில்லை.
20 'காலன் வருமுன்னே, கண்பஞ்சடை முன்னே' எவ்வ
ளவு நற்காரியங்களைச் செய்தல் சாத்தியமோ அவை
களை யெல்லாஞ் செய்தே தீரவேண்டுமென முடிவுசெய்
துகொண்டார்.

லண்டன் மாநகரில் செல்வமுஞ் செருக்குந் தாண்
25 டவமாடினும் வறுமையுந் துன்பமுங் குறைந்தபாடில்லை.
கோடீசுவரர்களும், லக்ஷாதிகாரிகளும் விருத்தியாக
விருத்தியாகக் குடிக்கக் கஞ்சியும் உடுக்கக் கந்தையும்
இல்லாது தவித்தவர்களும் அதிகமாயினர். பிற்கூறப்
பட்டவர்களுள் வெகுபேர் மானிகள் ; பிறரிடத்து இர
30 வாமலும், உற்றார் உறவினர்களுக்குப் பாரமா யிராம
லுந் தாமாகவே யேதேனுமொரு தொழிலைச் செய்து,

வந்த வருமானத்தைக் கொண்டு, கஞ்சியேனுங் கூழே னுங் குடித்துக் கௌரமாகக் காலங்கழிப்போமென விரும்பியவர் பலருண்டு. ஆயினும் அவர்களெல்லோ ருக்கும் வேலை கிடைப்பதில்லை ; சில்லரை வியாபாரம் 35 ஏதேனுஞ் செய்ய நினைத்தாலோ அதற்கு வேண்டிய சொற்ப முதலும் அகப்படுவதில்லை. பிராணன் போனு லும் பிறரிடத்துச் சென்று 'தேஹி' என்னும் மொழி மாத்திரம் உரையார்கள். இத்தன்மை வாய்ந்த பெண் பாலார் வெகுபேர் லண்டனில் இருந்தனர். அவர்க 40 ளது ஆத்ம கௌரவத்துக்குக் குறைவு வாாமல் அவர்க ளுக்குப் பிழைக்கும் வழி கற்பிக்க வேண்டுமென்று நம் பிரபு ஓர் ஏற்பாடு செய்தனர். தம் பத்னியினது பேர் சூட்டி 'எமிலி கடன் நிதி' யென்னும் ஓர் நிதியை ஸ்தா பித்தார். அந்நிதியிலிருந்து ஸ்திரீகள் வியாபாரத்துக்கு 45 வேண்டிய சொற்பத் தொகைகளைக் கடனாக வாங்கிக் கொள்ளக்கூடும். ஆயினும் வாங்கும் கடன் தொகைக் குத் தகுந்த ஜாமீன் கொடுக்க வேண்டும். அன்றியுங் கடன் தொகையில் வெகு சொற்ப பாகத்தையேனும் அப்போதைக் கப்போது, வாரத்தில் ஒரு முறையோ, 50 அல்லது மாதத்தில் ஒரு முறையோ தவறாது கொடுத்து வரவேண்டும். இத்தகைய நிபந்தனைகளுக்கு உட்பட் டுக் கடன் வாங்கிக் கொண்டவர்கள் அநேகர். அவர் களுள் ஒவ்வொருவரும் யோக்கியர்களா யிருந்து வாங் கின கடனைக் கொடுத்து விட்டுச் சொந்தத்திலேயே 55 தம் வியாபாரத்துக்கு வேண்டிய முதலையுஞ் சேகரித் துக் கொண்டனர். என்றால் 'எமிலி கடன் நிதி' எவ் வளவு உபயோகமா யிருந்தது என்று விவரித்துக் கூறல் அவசியமோ! பிச்சையாக வொருவனுக்கு ஒரு அணு

60 வைக் கொடுப்பதினும் அவன் தானே யுழைத்து அரை யணாவையேனும் சொந்தத்தில் சம்பாதித்துக்கொள்ளு மாறு செய்வித்தல் மிக மேலன்றோ!

---

## XV. எண்பதாம் வருடத்து பிறந்த நாள் கொண்டாட்டம்.

1881-ஆம் வருஷம் எப்பிரல் மாதம் 28 ஆம் தேதி ஷாப்ட்ஸ்பரி பிரபுவுக்கு எண்பதாம் பிராயம் ஆரம்பமானது. அன்றைய தினத்தை இங்கிலாந்து தேசத்திலுள்ளார் யாவரும் ஓர் பெரிய உற்சவ தினமா
5 கக் கொண்டாடினார்கள். முக்கியமாய் லண்டன் நகரில் மிகவும் விசேஷமான குதூகலநிகழ்ச்சிகள் நடந்தேறின. அல்லற் பட்டார் யாவருக்கும் ஆதாவளிக்கும் அன் பின் களஞ்சியமாம் நம் பிரபுவை யாரே போற்றுதிருப் பவர்! தேகத்தால் உழைத்துப் பாடுபட்டுக் கஷ்ட ஜீவ
10 னஞ் செய்து வந்த ஒவ்வொரு வகுப்பினரும் அம்ம கானது பேருபகாரத்துக்குப் பாத்திரர்க ளாயினரன் றோ! அவர்க ளெல்லோரும் ஆயிரக் கணக்கான நம் பிரபுவைக் கண்டுகளிக்க வந்தனர். அன்றைத் தினஞ் சாயங்காலம் லண்டன் நகரிலுள்ள முக்கிய சபா மண்ட
15 பமான 'கில்டுஹாலி'ல் ஓர் விசேஷ வரவேற்புக் கூட்டங் கூடியது. குறித்த காலத்துக்கு முன்னதாகவே அம் மண்டபம் ஜனங்களால் நிரம்பியது. உள்ளே நிற்கவும் இடமில்லாது பலகணி வாயில்களிலுஞ் சுவர்களின் மீதும் பலர் ஏறி நின்றனர். ஷாப்ட்ஸ்பரி பிரபு தமது
20 மாளிகையினின்று புறப்பட்டு ஸபா மண்டபத்துக்கு

வரும் வழியிலெல்லாம் ஜனங்கள் அவரைச் சூழ்ந்து
நின்று காகோஷஞ்செய்து, ஆசிமொழிகள் கூறி மலர்
மாரிபொழிந்தனர். ஸபாமண்டபம் வந்து சேர்ந்ததும்,
அங்குக் கூடியிருந்த பிரமுகர்கள் யாவரும் அவரை
வெகு மரியாதையுடன் வரவேற்று மேடையில் வீற் 25
றிருக்கச் செய்தனர். 'லார்ட் மேயர்' எனும் பட்டம்
வாய்ந்த, லண்டன் நகரபரிபாலன ஸபையின் அத்திய
க்ஷர் அச்சமயம் அக்கிராஸனம் வகித்தார். அவரும் மற்
றுஞ் சில கனவான்களும் நம் பிரபுவின் அரிய குணங்
களையும், உத்தம ஜனஸேவையையும் மிகப் புகழ்ந்து 30
பேசினர். தொழிற்சாலைகளில் வேலை செய்துவரும்
ஆடவர், பெண்டிர், குழந்தைகள் ஆகிய இவர்களது
கஷ்ட நிவாரணத்தை யுத்தேசித் தல்லவா நம் பிரபு
நாற்பது வருஷகாலமாக பாடுபட்டு வந்தனர்! அவ
ரது பிரயத்தனத்தா லன்றோ தினந்தோறும் பத்து 35
மணி காலத்துக்கு மேற்பட்டு எவரையுந் தொழிற்
சாலை யதிகாரிகள் வேலை செய்யக் கட்டாயப் படுத்
தக் கூடாதென்றும், சிற்சில இடங்களில் ஸ்திரீகளை
யுங் குழந்தைகளையும் வேலையில் அமர்த்தவே கூடா
தென்றும் நிபந்தனைகள் ஸர்க்காரால் ஏற்படுத்தப் பட் 40
டன. அந்நிபந்தனைகள் அமுலுக்கு வந்த காரணத்
தினால், தொழிற்சாலையின் சொந்தக் காரர்களுக்கு
வரும் லாபம் ஒருவாறு குறைந்தாலும், அவர்களுள்
ஒருவருக்காவது ஷாப்ட்ஸ்பரி பிரபு விடத்துத் துவே
ஷமாவது, அதிருப்தியாவது உண்டோ? கொஞ்சமும் 45
இல்லை. அந்தச் சொந்தக்காரர்களுள் பிரபலரான
பாஸ்டர் என்பவர், தாமும் தம்மைப் போன்ற முத
லாளிகளும் நம் பிரபுவிடத்து மிக்க அன்பும், பக்தியும்

கொண்டுள்ளதாக அச்சபையில் தெரிவித்துக்கொண்
50 டது மாத்திரமன்றி, நம் பிரபுவின் உழைப்பின் மூல
மாக வேற்பட்ட சீர்திருத்தங்களை யெல்லாந் தாம்
போற்றுவதாகவுங் கூறினர். ஆகவே 'அஜாதசத்ருரு'
வென்றும், 'அநாதரக்ஷக' என்றும் 'ஜனாரஞ்சக' என்
றும் அவரை யாவரும் புகழ்ந்தனர்.

55 அந்தச் சமயத்தில், நம் பிரபுவிடத்து மிகுதியும்
பக்தி வாய்ந்த மிஸ்காப் என்னும் மாது, ஆங்கிலத்தில்
ஓர் ஆசிகவியை யெழுதி அதைப் பிரபுவிடம் ஸமர்ப்
பித்தார். அதன் முக்கியப் பொருள் பின் வரும்
பாடலில் காணப்படும்.

வாழிய ஐயநீர் வாழிய பெருமநீர்
ஊழி தோறூழி யும்பெயர் நிலவுக.
எழுபத் தீரைந் தெய்திய வின்னாள்
எங்கு நிறைந்திடு மிறைவ னுமக்கே
பொங்கு மருளினைப் புரிவா னாக.
உவப்புடன் பிறருக் குபகரிப் பதுவே
தவப்பய னென்று தவறு தொழுகிய
அருமையார் தருமமு மறத்தின் மாண்பும்
பெருமையுஞ் சீரும் பெறுதற் கெளியவோ!
அன்னையை யிழந்தபின் அப்பனை யிழந்தும்
என்னதாஞ் செய்வ மெனவே திகைத்துத்
திக்கில்லா தழுதுந் துயர்க்கடல் மூழ்கியும்
புக்கிட மில்லாப் புல்லிய சேய்க்குத்
தாயு மாகித் தந்தையு மாகி
ஆயுளை யவருக் களித்தனி ரன்றோ!
என்ன தாஞ் செய்கிறோ மெங்கிருக் கின்றோம்,
அன்னதாம் ஞானமு மறவே யில்லாப்
பித்தர் தமக்கே பெரிது மிரங்கி
ஒத்த நன்மையை யுஞற்றினி ரன்றோ!

நரிக்குகை யுள்ளுங் காற்றிலாக் கனியிலும்
பரிக்கு மிழிவாம் பதவியுற் றனரே
என்றே யாரு மிரங்கி நடுக்குறக்
குன்றாத் துயருட் குளித்துத் தவிக்கும்
நாரியர் தமக்கும் நாதனில் சேய்க்கும்
ஆரு மியற்றிடா வருள் புரிந்தீரே!
நல்லார்க்கும் நல்லர்நீர் நண்பிலர்க்கு நண்பர்நீர்
பொல்லாங் கெங்கும் நில்லா வண்ணம்
புவியைத் திருத்தும் புனிதமா நோக்கம்
வாழிய ஐயநீர் வாழியெம் பெருமநீர்
பலித்திட வுமக்கெனப் பரமனைப் போற்றுவம்.
தாழ்வில் நற் கருமந் தவறா தியற்றியே
ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஆர்வமு மின்பமு மாற்று விப்பீரே.

இவ்விதம் பலரும் உருக்கமாய்ப் பேசி முடிந்த 60
தும் ஷாப்ட்ஸ்பரி பிரபு தமக்குச் செய்யப்பட்ட உப
சாரத்திற்கு விடையளிக்க ஆசனம் விட்டு எழுந்தார்.
உடனே சபையோர் யாவருங் கரகோஷஞ் செய்து
சுமார் ஐந்து நிமிஷகாலம் ஆரவாரித்தனர். இதைப்
பார்த்த நம் பிரபுவுக்குக் கண்ணீர் தாரை தாரையாகப் 65
பெருகியது. மனம் நெக்குருகிப் பேசநா வெழவில்லை;
சற்றுநேரம் மௌனமாக விருந்து பிறகு சாவதான
சித்தராய் வெகு அமரிக்கையுடன் கம்பீரத் தொனியில்
பதில் அளித்தனர். தமக்குச் செய்யப்பட்ட கௌர
வத்துக்குத் தாம் மிக நன்றி பாராட்டுவதாகவும், தாம் 70
செய்துள்ள காரியங்களை யெல்லாம் தமது கடமை
யாகவே நினைத்துத் தாம் செய்துவந்ததாகவும், அவை
களில் ஒன்றுந் தமக்கு அசாதாரணமாகத் தோன்ற
வில்லை யென்றும், மானிடஜன்மம் பெறுவது அரிதாத
லின், அஜ் ஜன்மத்தை யடைந்தோர் யாவரும் மிருக 75

வாழ்வைவிட உயர்ந்த வாழ்வெய்தி, ஈசன் தமக்கெனப் பிரத்தியேகமா யளித்துள்ள அறிவை நல்வழியில் உபயோகித்து, ஆன்மலாபத்தை அடைவதற்குத் தக்க ஸௌகரியங்களையேற்படுத்திக்கொள்ளுதல், ஒவ்வொரு 80 வருக்கும் முக்கிய கடமையாமெனவுஞ் சொல்லி முடித்தார்; பிறகு சபை கலைந்தது.

சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

---

## XVI ஷாப்ட்ஸ்பரி பிரபுவின் குணாதிசயங்கள்.

ஜனசமூக நன்மைக்காகவே என்றும் பாடுபடுபவர்களிற் சிலர் தத்தம் பெண்டிர், பிள்ளைகள், நெருங்கிய பந்துக்கள் முதலானவர்களது நன்மையைச் சிரத்தையாய்க் கருதுவதில்லையென ஓர் குறையை யுலகத் 5 தார் கூறுவதுண்டு. ஆயினும் நம் பிரபுவிடத்து அத்தகைய குற்றம் இல்லை. எவ்வளவு வேலை தொந்தரவிருப்பினும், எவ்வளவு தான் அவகாசக் குறைவு எற்படினும், அப்போதைக் கப்போது தமது புத்திரர் புத்திரிகளது வித்யா விஷயத்தைப் பற்றியும், அவர்கள் 10 கிரமமான நடவடிக்கைகளைத் தெரிந்துகொண்டு, அவைகளுக் கிணங்க வொழுகவேண்டிய விஷயத்திலும் நிரம்பவும் அக்கறை காட்டிவந்தார். அதனால் அவரது மக்கள் கல்வியில் விசேஷத் தேர்ச்சியடைந்தது மன்றி ஈசுவரபக்தி மிகுந்த வெகு சிலர்கள் எனப் பெயரும் 15 பொருந்தினர். நம் பிரபு உயிருட னிருக்குங் காலத்திலேயே அம்மக்களி லிருவர் பரகதியடைய நேர்ந்தது. அதனால் உண்டான துக்கம் தாங்கவொண்ணு

திருப்பினும், அவர்கள் உயிர் நீங்குங் காலத்துச் சிறி
தும் மனந் தளராது, பரமனது அடிபோற்றி, அவரது
திருவுள்ளத் தியைந்த தாதலின் துக்கித்தல் சரியல்ல 20
வென்ற அவர்களது மனநிலையைநோக்கி, நம் பிரபுவும்
துயர்நீங்கி, மனவமைதியுடன் எல்லாம் வல்ல இறை
வனைப் போற்றி, 'தேவ! நினது சித்தப்படியே ஆகுக'
என மொழிந்து சாந்தம் எய்தினர்.

'வலது கையாற் செய்யப்பட்ட வுபகாரம் இடது 25
கைக்குத் தெரியவேண்டாம்' என்ற யேசுநாதர் செய்த
உபதேசத்தை ஷாப்ட்ஸ்பரி பிரபு விடாதுகைக்கொண்டு
ஒழுகினர். பரமதயாளுவானபடியால் அவரிடங் கஷ்ட
தசையி லுள்ளோர் யாவருங் கூசாமல் வந்து தங்களது
குறைகளைச்சொல்லிக் கொண்டார்கள்.நம்பிரபுவும் பரிவு 30
டன் அவர் மொழிகளைக்கேட்டு அவரவர்களுக்குத்
தகுந்த வண்ணம் திரவியத்தாலும், இதர வழிகளா
லும் உபகாரஞ் செய்தார். இவ்விதம் ஆயிரக்கணக்
கான ஜனங்கள் நன்மை யடைந்தார்கள். ஆதலின்,
விசேஷ ஸ்திதி வந்தாராயினும் ஷாப்ட்ஸ்பரி பிரபு எப் 35
போதுங் கடனாளியாகவே யிருந்தார். 'ஐயோ! எவ்
வளவுக்கு நான் எளியவர்களுக்கு உதவிபுரிய விரும்பு
கிறேனோ, அவ்வளவுக்குத் திரவிய ஸௌகர்யம் என்னி
டத்தில் இல்லையே! இல்லையே!" என்று மனம் நோவார்.
'இலட்சம் பவுன் கடனாகக் கொடுக்கவேண்டி யிராமல், 40
லட்சம் பவுன் கையிலிருந்தால் எவ்வளவோ நன்மை
செய்ய இயலுமே! ஆயினுங் கடவுளுக்கு அத்தகைய
தயவு என்னிடத்தி லில்லையே' யெனத் தமது தினசரி
ப்புத்தகத்தில் ஒருசமயம் எழுதினர். 'ஏழைக்கிரங்குங்
கருணைவள்ளல்' என நம் பிரபுவைக் கூறல் தகுமென் 45

பதை யுணர்த்தும் சில திருஷ்டாந்தங்களைப் பின் வரைவோம்.

ஒரு சமயம் இவருக்குச் சொந்தமான ஓர் கிராமத்தில் அரசாங்க ராணுவப்படையில் ஒரு பிரிவை,
50 கவாத்து பழகுவதற்காக ராணுவ அதிகாரிகள் அழைத்து வந்து கொஞ்சகாலம் அங்கே தாமதித்தனர். அவ்வதிகாரிகளுள் பிரமுகரைப் பார்க்கவேண்டி நம் பிரபு ஒரு தினம் புறப்பட்டனர். தமது அழகான குதிரை வண்டியில் ஏறிச் சாலை மார்க்கமாய்ப் போகையில் வயது
55 முதிர்ந்த ஒருகிழவி தள்ளாடித் தள்ளாடி நடந்துகொண்டுபோவதைப் பார்த்தார். உடனே அவர் வண்டியை நிறுத்திக் கீழே யிறங்கி அக்கிழவியை யழைத்து வந்து தாம் உட்கார்ந்திருந்த ஆசனத்தில் அவளை யிருக்கச் செய்து பிறகு வண்டி யோட்டுகிற வேலைக்காரனுக்குப்
60 பக்கத்தில் தாம் உட்கார்ந்து கொண்டார்.

ஒருநாள் ஷாப்ட்ஸ்பரி பிரபு ஏழைச் சிறுவர்கள் படிக்கும் ஒரு பள்ளிக்குச் சென்றார். வழக்கப்படி பிரதி வகுப்புக்குஞ் சென்று அங்கங்கே சிற்சில மாணவர்களுடன் வேடிக்கையாய்ப் பேசிக்கொண்டு வந்தார்.
65 அவர்களுள் ஒருவனுக்கு ஏதோ முகம் வெளுத்திருந்ததாக அவருக்குத் தோன்றியது. 'ஏனப்பா, உனக்கு உடம்பு செம்மையில்லையா?' என அவனைக் கேட்டார். 'ஒன்றுமில்லை, கொஞ்சகாலமாய் ஆகாரமில்லாமையால் தவிக்கிறேன்' என்றான் சிறுவன். 'எவ்வளவுகால
70 மாய் நீ உணவில்லாதிருந்து வருகிறாய்?' எனப் பிரபு கேட்க, 'இருபத்தாறு மணிகாலமாய் எனக்குத் தின்ன ஒன்றுங் கிடைக்கவில்லை,' என மறுமொழி கூறினன். பிறகு ஷாப்ட்ஸ்பரி பிரபு ஓர் சிறுமியிடஞ் சென்று,

'குழந்தாய்! உனக்கு என்ன உடம்பு?' எனக் கேட்ட
னர்? 'நிரம்பவும் பசியாயும், குளிராயும் இருக்கிறது,' 75
என அவள் மொழிந்தாள். என்? எனப்பிரபு வினவ,
அம்மாது தன் குடும்பத்தினர் மிக எளியவர்களென்
றும், வயிறு நிறைய உண்ண ஆகாரம் ஒரு நாளுங்
கிடைப்பதில்லை யென்றும், ரொட்டித் துண்டுகளும்
தண்ணீருந் தவிர வேறு விதமான ஆகாரம் தனக்கு 80
ஒருபோதுங் கிடைப்பதில்லை யென்றும் மொழிந்
தனள். இதைக்கேட்ட பிரபு மிகத் துக்கமுற்றுக்
கண்களினின்றும் நீர் தாரையாய்ப் பெருகச் சீக்கிரம்
தம் மாளிகைக்குச் சென்று நானூறு பிள்ளைகளுக்குப்
போதுமான உணவை யுடனே சித்தஞ் செய்வித்து 85
அதைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினர். இவ்வித
மாக அநேக தடவைகளில் அவர் தம் மாளிகையிலேயே
ஆகாரத்தைச் சித்தப்படுத்திப் பள்ளிச் சிறுவர்களுக்கு
அனுப்பியதுண்டு.

ஒருநாள் சாயங்காலம் ஷாப்ட்ஸ்பரி பிரபு தனி 90
யாய்த் தம் மாளிகையில் ஓர் அறையில் உட்கார்ந்திருந்
தனர். அச்சமயம் அவரது கையில் புகைப்படங்கள்
இரண்டு இருந்தன. அவைகளைப் பார்த்த வண்ண
மாகவே அவர் இருந்தது மன்றி அவர் உள்ளங் குளிர்ந்
ததற்கு அறிகுறியாக அவர் முகத்தில் விசேஷ காந்தி 95
யும், புன்முறுவலுந் தோன்றின. இந்நிலையில் பிரபு
வினது நண்பர் ஒருவர் உள்ளேவர அவர் அந்நண்பரை
நோக்கி, பின்வரும் விருத்தாந்தத்தை யுரைத்தார்:
"சிநேகிதரே! இப்படங்களைப் பாரும். இவைகளைப்
பார்த்துப் பார்த்து நான் எவ்வளவோ ஆனந்தம் 100
அடைந்துள்ளேன். இவ்விராஜ்யத்தில் பாதிக்குமேல்

எனக்குச் சொந்தமானாலும் எனக்கு அவ்வளவு சந்தோஷம் உண்டாகாது. இப்படங்கள் சம்பந்தமாய் ஓர்கதை யுளது. வெகு வருஷங்களுக்கு முன் ஒருநாள்
105 நடு ராத்திரியில் இம் மாளிகையின் வாயிற் கதவை யாரோ ஒருவன் தட்டினான். நான் அதைக் கவனியாமலே யிருந்தேன். சற்று நேரங்கழிந்தபின் என்வேலைக்காரன், ஒருவனுக்கும் வெளியிலிருந்து வந்தவனுக்கும் பலமாக விவாதம் நடந்த சத்தம் என்காதில் விழுந்தது.
110 உடனே என் அறையினின்றும் வெளியில் வந்து, விஷயம் என்னவென்றுபார்த்தேன். வந்தவன், ஒருசிறுகுழந்தையை வேலைக்காரனிடம் விட்டுவிட்டுப் போகயத்தனிக்க அவ்வேலைக்காரனோ அக்குழவியையேற்றுக்கொள்ள மறுத்தான். இச்சந்தர்ப்பத்தில் நான் வெளிவந்தபோது
115 அவன் என்னைப்பார்த்து, 'பிரபுவே! இக்குழந்தை யென்னுடையது, நான் மிக எளியவன்; ஆதலின், இதைக்காப்பாற்றுஞ் சக்தி எனக்கில்லை. ஆயினும் அதனிடத்துள்ள வாஞ்சையால் அதற்குத் தக்க வுணவு அளியாது அலட்சியஞ் செய்வதற்கும் மனந் துணியவில்லை. 'காப்
120 பதற்கும் வழியறியேன், கைவிடவு மாட்டேன்,' எனும் ஸ்திதியில் இப்போதுள்ளேன். தாங்களே யிக்குழந்தையை ரட்சிக்கவேண்டும்' என்றான். உடனே அவனை யுள்ளே யழைத்துச்சென்று, அவன் பேர் ஊர் முதலிய விஷயங்களைக் குறித்துக்கொண்டு, குழந்தையையும்
125 ஏற்றுக்கொண்டு அவனை யனுப்பிவிட்டேன். இப்படத்தைப்பாரும். அக்காலத்தில் அக்குழந்தை யிவ்வுருவம் அமைந்திருந்தது. தேகம் மிக இளைத்தும் உடை கந்தையாயு மிருப்பதைக் கவனியும்.

குழந்தையை எவரைக் கொண்டு எவ்விதங் காப்

யாற்றுவதென்று ஆலோசித்து வருங் காலத்து மிஸ் ரை 130
என்னும் மாது சீக்கிரத்தில் அக்குழந்தையைத் தன்
னுடையது போலப் பாவித்துப் போஷிக்குந் தாய்
ஒருத்தியைக் கொணர்வதாகச் சொல்லிப் போனாள்.
சில நாளைக்கெல்லாம் அவள் சொல்லிய வண்ணமே
குழந்தை யில்லாத ஓர் உயர்குலத்து ஸ்திரீ, அச்சிறு 135
மியை ஸ்வீகாரஞ் செய்து கொள்வதாக வாக்களித்துக்
குழந்தையைத் தருகவென வேண்டினள். உடனே
நானும் அதற் கிணங்கினேன். ஈசுவர கிருபையால் அப்
பெண்மணி அழகுடன் வளர்ந்து, புத்தி மிகுந்து, கல்வி
யிற்றேறி நல்ல பதவியில் இருந்து வாழ்ந்து வ நகிறாள். 140
இந்த இரண்டாம் புகைப் படத்தமைந்த உருவம் அவ
ளதே. இதை நினைக்கும் போதெல்லாம் எனக்கு அள
வில்லா ஆனந்தம் உண்டாகிறது."

பிறருக் கொருவித வுபதேசஞ் செய்து தாம் பிறி
தொருவிதம் நடப்பது நம்பிரபுவின் முறையல்ல. பிறர் 145
எவ்வாறு ஒழுக வேண்டுமெனத் தாம் வற்புறுத்தி வந்
தனரோ, அவ்வாறே தாமும் நெறிதவறாது நடந்து
கொண்டனர். தேகத்தால் உழைத்துக் கஷ்ட ஜீவனஞ்
செய்துவரும் எளியவர்களுக்குப் பலவிதமான நன்மை
களையும், ஸௌகர்யங்களையுஞ் சம்பாதித்துத்தந்த ஷாப் 150
ட்ஸ்பரி பிரபு தமக்குச் சொந்தமான கிராமங்களில்,புலன்
களில், வேலை செய்துவரும் பண்ணையாட்களும், வேறு
கூலிவேலை யாட்களும் சுகமாக ஜீவனம் செய்ய
வேண்டி, அவர்களுக்கு அவசியமான வசதிகளை யேற்
படுத்த வேண்டுமென முயற்சித்தார். ஆயினும் இவரது 155
தந்தை அதற்கு இணங்கவில்லை. அவர் தம் குமார
ருக்கு அனுபவ ஞானம் குறைவென்றும், அவர்

விரும்பிய வண்ணங் கூலியாட்களுக்கு எல்லாவித சுகங் களையும் உண்டாக்கி விட்டால் அவர்கள் வேலையே
160 செய்ய மாட்டார்களென்றும் அபிப்பிராயப் பட்டனர். இதனால் தந்தைக்குந் தனயனுக்கும் மனஸ்தாபம் நேர, இருவருந் தனித்தனியே வெவ்வேறு இடங் களில் வசித்துவந்தனர். பக்தியும், அன்பும் குடி கொண்ட மனத்தவரான ஷாப்ட்ஸ்பரி பிரபுவுக்குத்
165 தம் பிதாவிடமிருந்து விலகி யிருப்பது எவ்வளவோ துக்கத்தைத் தந்தது. ஆயினும் 'அறத்தை நிலைநிறுத் துங்கால் தம் அருமைச் சுற்றத்தை நிராகரிக்க வேண்டி வரினும் அது நியாயமாமே.' என்ற உண்மையை யுன்னித் தம் துக்கத்தை யடக்கிக்கொண்டு, [illegible]னர்
170 தமக்கிட்ட கட்டளைப்படியே யொழுகலாயினர்.

1851-ஆம் வருஷத்தில் அவரது பிதா காலமானர். குடும்பச் சொத்துக்கள் யாவும் அவர் வசமாயின. உடனே, நம்பிரபு தமது கிராமத்தில் தொழிலாளர்க ளுக்கு வேண்டிய வசதிகள் யாவற்றையும் எற்படுத்தித்
175 தர முயற்சி செய்தனர். குடியிருப்பு வீடுகளெல்லாம் மிக நெருக்கமாயும், வெளிச்சமுங் காற்றோட்டமு மில் லாது அசுத்தமாயு மிருந்ததால், அவைகளை யெல்லாங் கொஞ்சங் கொஞ்சமாய் இடித்துவிட்டு, வேறு வீடு களைக் கட்டினர். அவ்வீடுகள் சுகாதார வசதிகள்
180 யாவும் நிறைந்து விசாலமா யவசியமான அறைகளும் அடங்கப்பெற்று, அழகா யமைக்கப் பட்டிருந்தன. ஒவ்வொரு வீட்டுக்குச் சுற்றிலுங் கொஞ்சம் காலி யிடம் விடப்பட்டிருந்தது. குடியிருக்கும் வேலை யாட்கள் ஓய்வு நேரங்களில் அந்த ஸ்தலத்தைப் பண்ப
185 டுத்தித் தோட்டம் ஆக்க வேண்டுமென்பது பிரபுவின்

கருத்து. அது விஷயத்தில் அவர்களுக்கு உற்சாகம் பிறக்குமாறு பிரதி வருஷமும் எந்த வீட்டைச் சுற்றி லுமுள்ள தோட்டம் மிக நேர்த்தியா யிருந்ததோ அவ் வீட்டுக்காரனுக்கு உயர்ந்த ஓர் பரிசளித்து வந்தனர்.

கிராமத்திலுள்ள கள்ளுக்கடை வழக்கம்போல் 190 எப்போதும் திறந்திருக்கப் படாதென்றும், இரவில் ஒன்பது மணிக்கு அது மூடப்பட வேண்டுமென்றும், உத்தரவு செய்தார். சிறுவர்களின் கல்விப் பயிற்சியை யுத்தேசித்து ஓர் பள்ளிக்கூடத்தை யேற்படுத்தினர். கிராமத்திலுள்ள கோயிலைப் பழுது பார்ப்பித்து ஜனங் 195 களுக்கு மதபோதனை தவறாது பிரதிதினஞ் செய்யுமாறு ஒரு ஆசாரியரை நியமித்தார். வருஷத்துக் கொரு முறை கிராமத்தி லுள்ளார் யாவரையுந் தம் மாளி கைக்கு அழைத்து அவர்களுக்கும் பெரியதோர் விருந் தளித்து வந்தார். 200

இன்னும் எவ்வளவோ சீர்திருத்தங்களைச் செய்ய நினைத்தார். ஆயினும் தாராளமாய்ச் செலவு செய்யக் கையில் பணமில்லை யாதலின் தம் இஷ்டப்படி நடக்க இயலவில்லை. ஆயினும் அக்காலத்தில் நம் பிரபுவின் கிராமம் இருந்ததுபோல வேறொரு கிராமமும் இல்லை 205 யென நிச்சயமாய்க் கூறலாம்.

நம்பிரபு மனச் சோர் வில்லாமலும், தேக சிர மத்தைப் பாராமலும் என்றும் ஜனசமூக நன் மைக்காகப் பாடுபடுவதை யுத்தேசித்து பிரதான மந்திரி, அவருக்கு ஓர் உயர்ந்த பிருதை யளிக்க 210 வேண்டுமெனக் கருதி அதை அவர் அங்கீகரிக்க வேண் டுமென்று பிரார்த்திப்பதாக ஒரு கடிதம் எழுதினர். ஷாப்ட்ஸ்பரி பிரபுவுக்கு அக்கடிதத்திற்கு யாது பதில்

எழுதுவதென்று முதலில் தோன்றவில்லை. ஆதலின்
215 பின் வருமாறு யோசிக்கலாயினர்: "இது விஷயத்தில்
முக்கியமாய்க் கவனிக்க வேண்டியது யாதெனில், இந்
தப் பிருதைப் பெற்றுக் கொண்டால் அது காரண
மாகப் பிறருக்கு நன்மை செய்யுஞ் சக்தி எனக்கு அதி
கமாகுமா! குறையுமா! என்பதே. என் பத்தினியோ
220 நான் இதுகாறுஞ் செய்துள்ள நற்காரியங்களுக்கு ஓர்
அத்தாட்சியாக இந்தப் பிருது அளிக்கப்படுவ தாத
லின் அதை யொப்புக்கொள்ளலா மென்று சொல்லு
கின்றனள். ஆனால் எனக்கு அவ்வித அபிப்பிராய
மில்லை. அவ்வாறு ஏற்றுக் கொள்ளல் என்னால் இயற்
225 றப்பட்ட நற்காரியங்களுக்குப் பிரதி பிரயோ
ஜனத்தைப் பெற்றுக் கொள்ளுவதாகக் கருதப்படு
மன்றோ!

"வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து."

என்றே பெரியாரும்பணித்துள்ளார். விஷயந்தெரியாத
வர்களும், என்னிடத்து மதிப்புக் குறைந்தவர்களும்,
230 'ஆம்! ஆம்! இவ்வுலகில் சுயநன்மை பாராட்டுவதுதான்
ஜனங்களுக்கு சகஜம்; பிறருக்கு உதவி செய்யப் பாடு
படுபவர்களும் தங்களுக்கு ஏதாவது கௌரவங்கிடைக்க
மாட்டாதா வென்றே எப்பொழுதுஞ் சிந்திக்கிறார்கள்.
மனத்தூய்மையுடனுந் தருமத்துக்குக் கைம்மாறு தரு
235 மஞ்செய்தலேயென்ற உயர்ந்தநோக்கத்துடனும்அறஞ்
செயல்இல்லையென்றே சொல்லவேண்டுமென்று நிந்தி
யார்களோ! வேறொரு சாரார் பரிகாசஞ் செய்யாம
லிருப்பரோ! அன்றியும் இக்கௌரவத்தை யளித்த
கவர்ன்மெண்டார், ஏதேனுந் தவறான காரியங்களை
240 யியற்ற நேர்ந்தால், அப்போது அவர்களைக் கண்டித்துப்

பேச ஒருவாறு என் மனங் கூசுமன்றோ!'' இவ்வாறு
மீண்டும் மீண்டும் ஆலோசித்துக் கடைசியாய்ப் பிருதை
அங்கீகரிக்கா திருத்தலே யுக்தம் என மனந்தெளிந்து
பிரதான மந்திரிக்குத் தம் அபிப்பிராயத்தைத் தெரி 245
வித்துத் தம்மை மன்னிக்குமாறு அவரை வேண்டிக்
கொண்டனர்.

இது நடந்த சிலவருடங்க ளாயினபின் மீண்டு
மொருமுறை மிக உயர்ந்த ஒரு உத்தியோகத்தை யேற்
றுக் கொள்ளுமாறு பிரதான மந்திரி பிரபுவை வேண் 250
டினர். அப்பொழுதும் அவர் அதை மறுத்தனர். தாம்
பல வருஷங்களாகச் செய்து வந்த நற்காரியங்களுக்கு
இடையூறு வருமே யென்ற பயம்தான், அவர் மேற்
சொன்ன அதிகாரத்தை யொப்புக் கொள்ளாததற்குக்
காரணம். 255

நாடெங்கும் பிரபுவினது பேர் பரவவே தருமசிந்
தனைகொண்டு தரும காரியங்களில் பொருட் செலவு
செய்ய எண்ணிப் பலரும், தாங்கள் செலவிட விருந்த
திரவியத்தைப் பிரபுவிடம் அனுப்பி அவருக்கு யுக்த
மாகத் தோன்றிய வண்ணமே அதை விநியோகஞ் 260
செய்யலா மெனச் சொல்லி வந்தார்கள். பிரபுவும்
இன்ன இன்ன துறைகளிற் செலவு செய்தல் அவசிய
மென்று தெரிந்துள்ளா ராதலின் கிடைத்த திரவியம்
யாவற்றையும் வெகு உபயோகமான வழிகளிலேயே
செலவு செய்தனர். 1885-ஆம் வருஷத்தில், ஓர் சீமா 265
ட்டி, அறுபதினாயிரம் பவுனைப் பிரபுவிடம் அனுப்பி,
அதை அவர் தம்மிஷ்டப்படி ஏழைகளின் நன்மையின்
பொருட்டு உபயோகிக்கலாம் எனச் சொல்லிப் போயி
னள். அக்காலத்தில் பிரபுவுக்கு வயது எண்பத்தைந்து.

270 தேகபலமும், மனோபலமும் வெகுவாய்க் குறைந்த தசை. ஆயினும் சில சிநேகிதர்களுடைய உதவியைப் பெற்று மிகவும் சிரத்தையுடன் யாரும் ஒருவித குற்றங் குறை சொல்லா வண்ணம் அந்தப் பணம் முழுவதையும் அவர் விநியோகஞ் செய்தார்.

---

## XVII ஷாப்ட்ஸ்பரி பிரபுவின் அந்தியதசையும் மரணமும்.

என்பது பிராயத்துக்கு மேலாகியும் நம் ஷாப்ட்ஸ்பரி பிரபுவுக்கு ஊக்கமுஞ் சுறுசுறுப்புங் குறையவே யில்லை. பிரதி தினமும் ஏதேதோ தொழின் முயற்சிகள் ஏற்பட்டிருந்ததனால் ஒரு நிமிஷமேனும் வீணாகக் 5 காலங் கழிய வில்லை. சந்தோஷத் துடனும், உற்சாகத் துடனும் வேலைசெய்தலே மனிதருக்கு ஆயுளை விருத்தி செய்யும் ஒப்பற்ற மருந்தெனலாம். அதனுண்மையும் பிரபுவிடத்தில் பிரத்தியட்சமாய்க் காணப்பட்டது. அவரது என்பத்து மூன்று, என்பத்து நான்காவது 10 வருஷங்களில் வரையப்பட்டுள்ள தினசரிப் புத்தகங்களைப் பார்க்கின் அவர் அந்த வருஷங்களில் இயற்றிய காரியங்கள் இன்னவையெனத் தெரியும். அவைகள் அளவிறந்தன என்றால் மிகையாகாது. ஆயிரப்பவுன் கணக்காய்த் திரவியம் ஏழைகளுக்குக் கொடுத்து உத 15 வப்பட்டது. நூற்றுக் கணக்கான சபைகளில் அவர் அக்கிராசனம் வகித்தார். தம் தேசத்திலும் பிற தேசத்திலும் ஆயிரக் கணக்கானவர்களோடு பொது ஜன நன்மை விஷயமாக அவர் கடிதப் போக்கு வரவு செய்

தனர். ஏழை ஜனங்களின் நன்மைக்காக வேற்பட்ட சங்கங்களையும், ஸமாஜங்களையும் நேரிலேயே போய்ப் 20 பார்த்து அவைகளைப் போஷித்து வருபவர்களுக்குச் சிரத்தையையும் உற்சாகத்தையும் ஊட்டுவித்தனர். அருள்சேர்ந்த நெஞ்சினராதலின் அவர், சாதாரண ஜனங்களை வாட்டுங் காமம், வெகுளி, மயக்கம் என்ற துர்க்குணங்களுக்குத் தினையளவும் ஈடுபடாதவராய், 25 சாந்தராய், நிதான சித்தராய்,

> மன்னுயி ரோம்பி யருளாள் வார்க் கில்லென்ப
> தன்னுயி ரஞ்சும் வினை.

என்ற முதுரைக்கு ஓர் அத்தாட்சியாக விளங்கினர்.

ஆயினுந் தேகவலிவரவரச் சற்றுக் குறையவாரம்பித்தது. அது குறையக்குறைய அவரது தூய்மையான ஆத்துமாவின் பிரகாசமும், மனவொளியும் மிகு 30 ந்து கொண்டே வந்தன. களங்க மற்ற ஆகாயத்தில் மாலைச் சூரியன் பிரகாசிக்குங்கால் அவனது கிரணங்கள் பட்டு எல்லாப்பதார்த்தங்களும் பொன்மயமாய்விளங்கி எவ்விதம் மனத்தை ஆனந்தப் படுத்துமோ அவ்விதமே நம்பிரபுவும் தம் அந்திய தசையில் தம்மைப் 35 பார்க்க வந்தவர்களது இருதயத்தைப் பிரகாசிக்கச் செய்து அன்பு, அருள், பொறை, அடக்கம் முதலிய நற்குணங்கள் அவர்களிடம் விளங்கச் செய்தனர்.

1885 ஆம் வருஷம் ஜூலை மாதத்தில் பிரபுவுக்கு அதிக பலஹீனம் ஏற்பட்டது. இனி அதிக 40 காலம் ஜீவித்திருக்கமாட்டோம் என்ற எண்ணம் மனத்தில் உதித்தது. லண்டன் நகரத்தை விட்டு நீங்கிப் போக்ஸ்டோன் பட்டணத்துக்குப் போகவேண்டுமென

வைத்தியர்கள் வற்புறுத்தினர்கள். இறந்துவிடுவோமே
45 என்ற பயங் கொஞ்ச மேனும் பிரபுவுக்கில்லை. ஆயி
னும், எவ்வளவோ நற்காரியங்கள் செய்து முடிக்
கப்படாமல் மிகுந்துள்ளனவே யென்று மாத்திரம்
அடிக்கடி சொல்லுவர். கடைசியாய்ப் போக்ஸ்டோ
னுக்குப் போவது என்று தீர்மானமான பிறகு தேக
50 சிரமத்தைக் கொஞ்சமும் பாராது, லண்டனில் தமது
சம்பந்தமுள்ள ஒவ்வொரு சங்கத்தையும், ஸமாஜத்
தையும் போய்ப் பார்வையிட்டு வந்தார். அவைகளின்
தொகை இருநூறுக்கு மேற்பட்டது. ஒவ்வோரிடத்
திலுஞ் சற்றுத் தாமதித்து ஏழைச் சிறுவர்களிடத்
55 தும், வயது வந்தவர்களிடத்தும் பிரியமாய் வார்த்தை
யாடி, 'நான் இனி உங்களை மறுபடியும் பார்ப்பேன்
எனத் தோன்றவில்லை. ஆயினும் என்மனம் உங்களி
டத்தேயே இருக்கும். நீங்களெல்லோரும் ஈசுவரபக்தி
மிகுந்து சன்மார்க்கத்தில் நடந்து சுக ஜீவிகளாயி
60 ருந்து, ஆன்ம லாபத்தை யடைவீர்களாக' எனச்
சொல்லி யாசிர்வதித்தார். அதைக் கேட்டவர் யாவரும்
நெஞ்சமுருகிக் கண்ணீர் பெருகப் பிரபுவை வணங்கி,
'ஐய! உமது முயற்சியால் நாங்கள் புதிய உயிர் பெற்ற
வர்களானேம், அஞ்ஞானம் என்னும் அந்தகாரத்தில்
65 மூழ்கிக் குடி, களவு, கொலை முதலிய தீச்செயல்களுக்கு
உடுபட்ட எம்மை ஞான முடையவர்களாகச் செய்து,
தீச்செயல்களில் வெறுப்புண்டாகும் வண்ணஞ் செய்த
உமது கருணைக்கு எங்ஙனம் நாங்கள் கைம்மாறு புரி
வோம்?' என மீண்டும் மீண்டும் புகழ்ந்தனர்.

70 ஜுலை மாதம் 25-ம் தேதி பிரபு, போக்ஸ்
டோன் பட்டணத்துக்குப் போய்ச் சேர்ந்தார். வந்து

கொஞ்ச நாளைக்குள் ஒருவாறு தேகங் குணப்பட்டுச் சற்று வெளியிற்போய் உலாவி வருமாறு சிறிது சக்திபு முண்டாயிற்று. ஆயினுங் கொஞ்சம் அஜாக்கிரதை யா யிருந்ததனுல் மறுபடியும் அஸௌக்கிய மடைந்து, 75
வீட்டைவிட்டு வெளியே போகச் சாத்திய மற்றவரா யினர். வீட்டுக்குள்ளே சஞ்சரிப்பதற்குப் போதுமான பலம் மாத்திரம் இல்லாமற் போகவில்லை. என்றாலும், படுக்கையி லிருந்த வண்ணமேதான் பகற்காலத்தின் மிகுதியையும் போக்கினர். 80

அவர் படுத்திருந்த அறையினின்று பலகணி வழியாய் நோக்கின், பசும் புல்லடர்ந்த தரையும், பச்சிலைமிகுந்த மரங்களும், அப்பால் நீல நீர் பரந்த கடலும் காணப்படும். அவைகளைப் பார்த்துப் பார்த்து ஈசனது சிருஷ்டியின் விந்தையை யாரே அறிவர்! யாரே அறிவர்! 85
என அடிக்கடி சொல்லுவர். பிரதிதினமுங் காலையில் தமது செல்வப் புதல்வியை யழைத்துப் பைபில் புஸ்தகத்தை வாசிக்கச்சொல்லிக்கேட்பர். அதனுள் ளடங்கிய கீதங்களுள் இருபத்து மூன்றுங் கீதத்தைத் தவறாது பாடச்சொல்வர். அக்கீதத்தின் பொருள் பின் வரும் 90
செய்யுளால் அறியலாகும்.

ஈசனு ரருளிருக்க வினிப்பய முறுவ தேனோ!
பாசமாந் திங்கைப் போக்கிப் படுகட லாசை தாண்டித்
தாசராம் புதல்வர் யாரும் தவறிலா மனத்தராகி
யாசில வீட்டில் வைக வருளுவ னுசா னன்றோ!

இவ்வாறு மூன்று மாதகாலம் வரையிலும் நம் பிரபு ஜீவித்திருந்தார். தாங்கப்படாத தேகவலி சிறிதும் இல்லாதவராய், மனநிலை கொஞ்சமேனும் கலங்கா

95 தவராய், அன்பு மிகுந்த தம் புதல்வர் புதல்விகளாற் சூழப்பட்டவராய், 'நீங்கள் எல்லோருஞ் சுகஜீவிகளாய், அரோகத்ருடகாத்திரர்களாய், வாழையடி வாழையாய் வாழி வாழி' என ஆசிமொழிகளை யடிக்கடி கூறினவ ராய், இறைவனது அடிசேர விருக்கும் எனக்கு இன்

100 பமேயென்றாளுந் துன்பமில்லையென மனோதைரியமுற்ற வராய்ச், சாந்தம் நிரம்பிய சித்தத்தினராயிருந்து, அக் டோபர் மாதம் முதல் தேதியன்று, பூமியும் ஆகாய முங் களங்கமற்றிருந்து சூரியன் பிரகாசித்துக்கொண் டிருக்குஞ் சமயத்தில் உயிர்நீத்தார்.

105 அவரது சவமடங்கிய பெட்டியை போக்ஸ் டோனிலிருந்து லண்டனுக்கு அவரது குடும்பத் தினர் கொண்டுவந்தார்கள். தெருக்கள் வழியாய்ப் பெட்டியைத் தூக்கிச் செல்லும்போது பதினாயிரக் கணக்கான ஆடவரும், பெண்டிரும், குழந்தைகளும்

110 துக்க வுடையுடுத்து, அதைப்பின் தொடர்ந்து சென் றனர். 'அநாதர்களுக் கன்பரே! எம்மை விட் டகல லாமோ?' எனக்கதறினர் சிலர். 'ஏழைகளுக் கடைக் கலமே! இனி யாம் எங்குறைவோம்?' எனப்புலம்பினர் வேறுசிலர்; 'கருணையாங் கதிரவன் மறையவே துக்க

115 மாங்காரிருள் மூண்டதே, இனிஎன் செய்வோம்?' என ஓலமிட்டனர் ஒருசாரார். துன்புற்றுத் தத்தளித்ததுர்ப் பாக்கியருக்கே தாயுமாய்த் தந்தையுமாய்த் தஞ்ச மீந்த பெருமானே!' எனப் போற்றினர் பிறிதொரு சாரார். இவ்வாறு குழுமினவர் யாவரும், துக்க முற்றுக் கண்

120 ணீர் பெருக, 'வெஸ்ட்மின்ஸ்டர் அப்பி,' என்ற கோயிலுக்குச்சென்று சேர்ந்தனர். சவப்பெட்டியும் அதனுள் வைக்கப்பட்டது. உடனே லண்டன் நகரத்

னுப் பிரதான மத குரு அவ்விடம் வரவே யாவரும் மண்டிபோட்டு, 'காலஞ்சென்ற பெரியோரது ஆத்துமா வுக்குச் சாந்தியும், பொறையும் அளித்தருள்க' என 125 ஈசனைப் பிரார்த்தித்தனர். பிறகு அப்பெட்டியைப் பிரபு வினது சொந்தக் கிராமத்துக்கு எடுத்துப்போய் அங் குள்ள சிறு கோயிலுக் கருகே அதை அடக்கஞ் செய் தார்கள்.

தனக்கென யாதும் வேண்டாத் தன்மையோர் பெரியோராவர்
மனத்தினிற் கவலை கொள்வார் மானிடர் நன்மை யுன்னி
கனத்தமாண் புடைய வன்னுர் கருணையை யுவந்து போற்றி
யினித்திடு மவர்தந் தொண்டை யெழிலுறப் பற்றி வாழ்வாம்.

சுபம்.

முற்றிற்று.

Noble Press Madras.